தொடர்கல்வி நூல்வரிசை

# கயிறு

தகழி சிவசங்கரப்பிள்ளை

நாவல் சுருக்கம்: பி. வேணுகோபாலன்

தமிழாக்கம்: இளம்பாரதி



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

'கயிறு' நீண்டதொரு காலகட்டத்தின் வரலாறு. குட்டநாடு என்ற கிராமத்தில் பல தலைமுறைகளாக மனிதன் வாழ்ந்து வந்த கதை. என்னுடைய பார்வையில் தேசத்தின் வரலாறு என்பது மனிதன் எப்படி மண்ணுடன் உறவுகொண்டு வாழ்ந்தான் என்பதுதான். இந்த நாவலின் படைப்பில் கதை சொல்ல நான் எடுத்துக் கொண்ட நிகழ்ச்சிகள்தான் மிகவும் கவனிக்கத்தக்கவை என்று எனக்குத் தோன்றுகிறது. மகாபாரதத்தின் கதை நிகழ்ச்சிதான் எனக்குத் தூண்டுதலாக அமைந்தது. அத்துடன் என்னுடைய கிராமத்திற்கே உரிய கதை சொல்லும் சம்பிரதாயங்களும் உண்டு. நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா இந்த நாவலின் சுருக்கப் பதிப்பை வெளியிடத் தீர்மானித்தபோது அது வெற்றி பெறுமா என்று நான் சந்தேகப்பட்டேன். காரணம், சுருக்கி எழுத முடிவதான ஒரு நாவல் அல்ல இது. அதை விரிவுபடுத்தி எழுதவும் முடியாது. அதற்கென்று தனித்ததோர் உருவமைப்பு உண்டு. அந்த உருவமைப்பின் போக்கில்தான் நாவல் முன்னோக்கிச் செல்கிறது. என் அறிவுக்குப் புலப்பட்ட வரையில் இந்த நாவலைச் சுருக்கித் தருவதில் முனைவர் வேணுகோபாலன் வெற்றி பெற்றிருக்கிறார். 'கயிறு' நாவலிலிருந்து ஒரு சுயசரிதை நாவலை எழுதியது போலிருக்கிறது, இந்த நாவலின் சுருக்கப் பதிப்பு. ஒரு வேளை 'கயிறு' நாவலில் விவரிக்கப்பட்டுள்ள வாழ்க்கை, முனைவர் வேணுகோபாலனுக்கும் அறிமுகமானது என்பதால் இருக்கலாம்.

—தகழி சிவசங்கரப்பிள்ளை

# 1

அரசாங்கத்தின் ஆணைப்படி கிராமத்தில் புதிதாக நிலஅளவை நடக்க இருந்தது—இதற்காக வரவிருக்கும் அதிகாரியின் பெயர் க்லாசிப்பேர். அவர் தங்கியிருப்பதற்கான இடமாக எருமத்ரமடம் சுத்தமாக்கப்பட்டுத் தயாராகிக் கொண்டிருந்தது.

சமூகத் தலைவர்களில் ஒருவரான கோடந்த்ர மூத்தாசான் செய்தி கேட்டு ஓடிவந்தார். கோயில் நிர்வாகம் 'ஸ்தானிகள்' எனப்படும் சமூகத் தலைவர்களின் அதிகாரத்திற்கு உட்பட்டது. ஊரின் முதல் முக்கிய இடம் கோயில்தான். மூத்தாசான் கோயில் நிர்வாகியிடம் கேட்டார். "என்ன, கணக்குப்பிள்ளே, எருமத்ரமடம் யாருக்காகத் தயாராகிக் கிட்டிருக்கு?"

"க்லாசிப்பேர்க்கு."

"அப்படீன்னா என்ன ஜாதியோ?" மூத்தாசான் விசாரித்தார்.

"அனேகமா சூத்திரனாயிருக்கும்."

"அப்படீன்னா நம்பூதிரிப் பெரியவங்களும் மத்தவங்களும், எதிரே வந்தால் என்ன செய்வாரு?" மூத்தாசானின் கேள்வி புறக் கணிக்கத்தக்கதல்ல. இன்று வரை தந்த்ரிமார்களான பிராமணர் களுக்கு மட்டுமே எருமத்ரமடம் தங்குவதற்காகக் கொடுக்கப்பட் டிருக்கிறது. நடைமுறையில் இல்லாத காரியம் இது. ஆனால் தாசில்தார் கச்சேரியிலிருந்து வந்த ஆணை, க்லாசிப்பேர்க்குத் தங்கு வதற்கு இடம் கொடுக்க வேண்டுமென்று சொல்கிறது. வரவிருக்கும் கிளிமானூர்க்காரர் ஒரு சூத்திரர் என்றும், பொன்னு தம்புரானுக்கு வேண்டியவர் என்றும், கோயில் நிர்வாகத்தைப் பார்த்துக் கொள்ளும் கணக்குப் பிள்ளைக்குத் தகவல் எட்டியிருந்தது. "அப்படீன்னா மடத்தை நல்லா சுத்தப்படுத்தணும்" என்று மூத்தாசான் சொல்ல வேண்டியதாயிற்று.

மாணியும், குஞ்ஞுதேவியும் குஞ்ஞுக்கியும் தரையைச் சாணம் கொண்டு மெழுகினார்கள். க்லாசிப்பேர் என்பவர் பொன்னுதம்பு ரானுக்கு நெருக்கமானவர் என்பது அவர்களுக்கும் தெரிந்திருந்தது. குஞ்ஞுதேவி சிறுமியாக இருந்தபோது அம்பலப்புழையில் பொன்னுதம்புரானைப் பார்த்திருக்கிறாள். அந்தக் கம்பீரம்

பார்க்கத்தக்கதுதான். அவருடன் தம்புராட்டியம்மாவும் இருந் தார்கள். மார்க்கச்சு உடுத்தி, தங்க நகைகள் அணிந்து அவர் நடந்து போன காட்சி இப்போதும் நினைவிருக்கிறது. தம்புராட்டி அம்மாவின் நிறம் சொக்கத்தங்கம். தங்கத்துக்கும் மேனியின் நிறத் திற்கும் வித்தியாசமே தெரியவில்லை. இன்றைக்கும் குஞ்ஞு தேவிக்கு அது நினைவிருக்கிறது. குஞ்ஞுக்கி தனிப்பட்டவள்; அவள் எதற்கும் எங்கேயும் முரண்படுவாள். யார் எது சொன்னாலும் எதிர்த்துப் பேசியாக வேண்டும்.

"நம்மளும் பொம்பளைங்கதான், அவங்களும் பொம்பளை தான். நம்ம வயித்திலே உண்டாகப் போகிற மாதிரிதான் அவங் களுக்கும் வயித்திலே உண்டாகும்.'' குஞ்ஞுக்கி மறுத்துப் பேசலானாள். "விளக்கை அணைச்சிட்டா அதுக்குப்பிறகு நிறம் என்ன கணக்கு? எல்லாப் பொம்பளைங்களும் ஒரே மாதிரிதான். செத்த பிறகு புதைச்சா அழுகிப் போகும், எரிச்சா சாம்பல்."

''கொஞ்சம் மெள்ளப் பேசுடி, பொட்டச்சி. பொன்னு தம்புரான் வீட்டு அம்மாவைப் பத்திப் பேசுறே. கவனம், தலை போயிரும்." குஞ்ஞிளாச்சிதான் இதைச் சொன்னாள்.

ஆனால் குஞ்ஞுக்கி அதையெல்லாம் பொருட்படுத்தவில்லை. மற்ற பெண்கள் அந்த ராஜதுரோக வார்த்தைகளைக் கேட்கப் பொறுக்காமல் திரும்பிக்கொண்டார்கள். வேறு யாராவது கேட்டுத் தம்புரானுக்கு வேண்டியவர்கள் க்லாசிப்பேர் வரும்போது அவரிடம் சொல்லிவிட்டால் என்னாவது என்று அவர்கள் பயப்பட்டார்கள்.

அப்போதுதான் குறுப்பாசான் அங்கே வந்து சேர்ந்தார். எருமத்ரமடம் மிகவும் சுத்தமாக இருக்கவேண்டும். பொன்னுதம்பு ரானுக்கு வேண்டியவர் தங்குவதற்கு வருகிறார். சாணத்தில் சாம்பலையும் சேர்த்து மெழுகும்படி பெண்களிடம் ஆசான் ஆணையிட்டார். காலை நேரத்துக் கோயில் நைவேத்தியப் பிரசாதம் கொடுத்த தெம்பு என்று பெண்கள் பேசிக் கொண் டார்கள். காலை நைவேத்தியப் பிரசாதத்தின் சரியான ருசியை அறிந்திருந்த ஒருவர் ஊரிலுண்டு. அவர்தான் மூத்தாசான். அந்தப் பிரசாதத்தைக் கொடுத்தால் ஆசானை மடக்கிவிடலாம் என்பது கோயிலில் வேலை பார்த்துக் கொண்டிருந்த எல்லோருக்கும் தெரியும்.

க்லாசிப்பேர் தங்குமிடத்தைச் சரிபார்ப்பதற்காக அந்த இடத்திற்கு அதிகாரி வந்தார். மூத்தாசானும் நிர்வாகியும் தோளில் இருந்த மேல்துண்டை எடுத்து இடுப்பில் கட்டிக்கொண்டார்கள்.

சமூகத் தலைவரான கோடாந்த்ர மூத்தாசானே நேரடியாக வந்துநின்று, க்லாசிப்பேரின் தங்குமிடத்தை சுத்தப்படுத்துகிறார் என்பதைப் பார்த்தபோது அதிகாரிக்குத் திருப்தியாயிற்று.

ஆசான் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்வதற்காக அதிகாரி யிடம் கேட்டார்:

'யாருங்க இந்த க்லாசிப்பேர்?"

"நில அளவை வருது குறுப்பே, அது சம்பந்தப்பட்டவரு."

விஷயம் புரிந்தது போலிருந்தது ஆசானுக்கு. இனிமேல் வரியைப் பணமாகக் கட்டவேண்டும் என்றும், அதற்காகத்தான் சர்வே வருகிறது என்றும் அதிகாரி சொன்னார். நடுங்கச் செய்யும் செய்தியாக இருந்தது அது. நிலத்தில் விளைவதில் ஒரு பங்குதான் ராஜபோகம். அதுதான் இன்றுவரை கொடுத்துக் கொண்டிருந்த வரி. இனிமேல் அப்படியல்ல. வரியைப் பணமாகக் கொடுக்க வேண்டும்! எந்த நிலத்தில் பணம் விளைகிறது?

குறுப்பாசான் கேட்டார், "பொன்னுதம்புரான் இப்படி கட்டளை போடுவாரா? அவர் விவசாயிகளோட கண்கண்ட தெய்வமில்லையா?" இதெல்லாம் தம்புரானுக்குத் தெரிந்து நடக்கிற காரியங்களல்ல, தளவாயின் வேலைகள் என்பது அதிகாரியின் அபிப்பிராயம்.

இனிமேல் நிலங்களை அளந்து இவ்வளவு பணம் என்று வரி நிச்சயிப்பார்கள். அதை வசூலிப்பது தாலுகா கச்சேரிக் காரர்கள். தண்டல்காரனோ அளவுகாரனோ யாரும் வேண்டாம். வரி நெல்லாக இருந்தால் இவர்களெல்லாம் தேவைப்படுவார்கள். அடுத்து பதவிக்கு வரவேண்டிய அதிகாரி வாரிசு முறையில் அவருடைய மருமகனாக இருக்க வேண்டும் என்ற கட்டாயம் கிடையாது என்பதையும் அதிகாரி சூசகமாகத் தெரிவித்தார். தலைமுறை தலைமுறையாக முல்லேப்பிள்ளிக் குடும்பத்தார் களிடம்தான் அதிகாரப்பதவி இருந்து வந்திருக்கிறது. குடும்ப அமைப்புகளின் பெருமை அஸ்தமிக்கிறதோ என்று குறுப்பாசான் சந்தேகப்பட்டார்.

'வரி கொடுக்கவில்லையானால்?" குறுப்பாசான் கேட்டார்.

அதிகாரிக்குச் சந்தேகம் ஏற்படவில்லை. வரி செலுத்தவில்லை யானால் ஜப்தி நடவடிக்கைதான் தண்டனை. குடும்பங்களில் குழந்தை குட்டிகள் எல்லோருக்குமே இது அல்லல்தான்.

இதற்கு முன்பும் நில அளவை நடந்திருக்கிறது. ஆச்சோமன் மாமா சொல்லக்கேட்ட சில கதைகள் ஆசானின் நினைவில் இருக்கின்றன. வெட்டிக்காட்டு வயல் கோடாந்த்ர குடும்பத்திற்கு

சர்வேமூலம் கிடைத்த கதையைக் கோடாந்த்ர ஆச்சோமக் குறுப்பு விரிவாக சொல்வார். அது ஒரு நல்ல கதை. காரணவர்-மருமக்கட் தாய முறையில் குடும்பத்தை நிர்வகிக்கும் குடும்பத்தலைவர். இவர் அக்குடும்பத்தினரின் தாய்மாமனாக இருப்பார். இவருக்குப் பின் இவரது மருமகன் காரணவர் பதவியைப் பெறுவார். குறுப்பாசான் நினைத்துப் பார்த்தார். அன்று குடும்பத்தின் காரணவராக இருந்தவர் இட்ராமன்கோந்தி. விவசாயம் செய்ய நாட்டம் உள்ள வர்களுக்கு நிலத்தை எழுதி வைப்பார். நிலத்தைத் தரிசாகப் போட்டுவைக்கக் கூடாது. அதுதான் அன்றைய முறை. அன்றைக்கு அவ்வாறு விவசாய நிலத்தின் பெயரில் ஒப்பந்தப் பத்திரம் போட்டுக் கொடுத்த உத்தியோகஸ்தரின் பெயர் குறுப்பாசானுக்கு நினைவில்லை. அன்றையத் தண்டல்காரர்கள் தகுதியான வர்களைத் தேடிக்கண்டுபிடித்து அந்த உத்தியோகஸ்தர்களின் எதிரில் கொண்டுவந்து நிறுத்துவார்கள். பிறகு நிலத்தைக் குத்தகைக்குப் பதிந்து கொடுத்துவிடுவார்கள். ஐந்நூறு மரக்கால் விதைப்பாட்டு நிலம் இட்ராமன்கோந்தியின் பெயரில் பதிவாகியது. அவ்வளவு நிலத்தையும் விவசாயம் செய்வதற்கான ஆள் பலமும் பணமும் அன்று கோடாந்த்ர குடும்பத்தில் இல்லை. எழுபது ராசிகள் அதாவது, எழுநூறு வெள்ளி சக்கரக்காசுகள், லஞ்சம் கொடுத்து அதை நூறாகக் குறைத்தார். ஆற்றருகில் அமைந்து வண்டல் படியும் வளமை கொண்டிருந்தது அது. அப்படித்தான் வெட்டிக்காட்டு வயல் கோடாந்த்ர குடும்பத்திற்கு வந்து சேர்ந்தது.

இப்படி ஒவ்வொரு குடும்பத்திற்கு ஒவ்வொரு கதை உண்டு. ஒரு குடும்பத்தைப் பற்றி ஏதாவது சொல்ல நேரும்போது ஆச்சோமன்மாமா அதனுடைய கதையைச் சொல்லத் தொடங்குவார். இப்போதைய மூத்தாசானின் வாலிபப் பருவத்தில் அவர் கேட்ட அந்தக் கதைகளைத் திருப்பிச் சொல்லும்முறை சுவாரசியமாக இருக்கும். வீட்டுத் திண்ணையிலோ, களத்து மேட்டிலோ, மாந்தோப்பிலோ, எங்கே கதை சொன்னாலும் ஆச்சோமன்மாமா சொல்வதைக் கேட்க ஆட்கள் எப்போதும் இருப்பார்கள். இல்லாவிட்டால் அனுப்பிக் கூட்டிவரச் செய்து கதை சொல்வார். அந்தக் கதைகளை எழுதி வைத்தால் அதுவும் ஒரு புராணமாகிவிடும்-ஆச்சோம புராணம்.

ஆச்சோமன் மாமாவுக்குக் குடும்பக் காரியம் எதுவும் தெரியாது. பாவம், கதை சொல்லிச் சொல்லியே காலம் முடிந்து இறந்தார்.

முல்லேப்பிள்ளி குடும்பத்திற்கும் கதை உண்டு. ஆச்சோமன்

மாமா சொல்லக் கேட்ட கதை குறுப்பாசானுக்கு நினைவிருக்கிறது. பழைய சர்வே சம்பந்தப்பட்ட கதை அது. ஆச்சோமக் குறுப்பு கோடாந்த்ர மூத்தகுறுப்பிடம் சொல்லத் தொடங்கியதுபோலக் குறுப்பாசான் அந்தக் கதையைச் சொல்லத் தொடங்கியபோது அதிகாரியின் முகம் சற்றே வாடியது. தன்னுடைய குடும்பத்தைப் பற்றிய அவமானகரமான குறிப்பு ஏதேனும் அதில் இருந்து விட்டால் என்ற பயம்.

அன்றைக்கு ஒப்பந்தப் பதிவுக்காரர்கள் ஊர் முழுக்க அலைந்து தகுதியானவர்களைத் தேடிப் பிடித்துக்கொண்டு வந்தார்கள். யாராக இருந்தாலும் தப்பிக்க முடியாது. ராஜாங்க உத்தரவு அல்லவா? ஒவ்வொரு குடும்பத்திற்கும் சமாளிக்க முடிந்த அளவு கூடுதல் நிலம் பதிவு செய்து கொடுக்கப்பட்டது. அப்படி யிருந்தும் நிலம் மிச்சம் இருந்தது. முடிந்த மட்டுக்கும் அதிகப் படியாக எழுதி வாங்கிக் கொள்ளலாம் என்பதாக ஒரேயொரு காரணவர் மட்டும் தன்னம்பிக்கையுடன் காரியஸ்தரிடம் சொன்னார். காரணம், அவருக்கு அனுமன் கடாட்சம் இருந்தது. அதனால்தான் அவருக்கு அவ்வளவு தைரியம்.

அதற்குப் பிறகும் நிலம் மிச்சமிருந்தது. மண்ணுக்கு மேற்படியாக எதுவும் போடத் தேவையில்லை. நல்ல வளமான வண்டல் படிந்த மண். காலம் பார்த்து வெயிலும், மழையும் உண்டு. விதையைப் போட்டால்போதும். ஆயிரம் மடங்கு கொடுக்கப் பஞ்ச பூதங்கள் தயாராக இருந்தன. இங்குள்ள மனிதர்களெல்லாம் சாப்பிடுவதற்காக மண்ணில் இறங்கி வேலை செய்ய வேண்டும். அதற்காகத்தான் பொன்னுதம்புரான் குத்தகை ஒபபந்தப் பதிவு முறையை ஏற்பாடு செய்திருந்தார். அப்படியானால் நிலத்தை சும்மா போட்டு வைப்பது தவறு, குற்றம். காரியஸ்தர் இப்படிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தபோது முல்லேப்பிள்ளி குடும்பத்தைப் பற்றி நினைத்துப் பார்த்தார். ஏராளமாகத் தங்கமும், வெள்ளியும், செல்வாக்கும் உள்ள குடும்பம். முன்பு வெள்ளைக் காரர்களின் வியாபாரத்தில் வேலை பார்த்துச் சம்பாதித்தது. காரியஸ்தர் முல்லேப்பள்ளி காரணவரைக் கூப்பிட்டனுப்பினார். அன்று கொஞ்சம் கூடுதலான நிலத்தை எழுதி வாங்கியதன் காரணமாக முல்லேப்பிள்ளி குடும்பத்தின் நிரந்தர அதிகாரி ஸ்தானம் அவருக்குக் கிட்டியது.

புதிய நிலப்பதிவு வருவதனால் முல்லேப்பிள்ளி குடும்பத்தின் அதிகார ஸ்தானம் பறிபோகும். இந்த நிலப்பதிவினால் ஜனங்களுக்கு நல்லதும் உண்டு, கெடுதலும் உண்டு. ஆசான்

யோசித்தார். ஆனால் உத்தரவு எப்படிப் பட்டதாக இருந்தாலும், அதை அமல்படுத்தும் அதிகாரி சிந்தித்துப் பார்த்தால் விவசாயிகளுக்குக் கெடுதல் வராமல் பார்த்துக் கொள்ள முடியும். ஆசான் விவரம் தெரிந்தவர் என்பது அதிகாரிக்கு விளங்கிவிட்டது. கதை கேட்டு, அதனால் உண்டான தெளிவாக இருக்கலாம்.

அதிகாரி போய்விட்டார். சில விவகாரங்களைப் பற்றி ஆலோசனை நடத்தும் ஏழுபுரத் திண்ணைச் சாய்மானத்திற்குப் போய் ஆசான் உட்கார்ந்தார். ஊர் முழுக்க ஒரு குழப்பம் வரப் போகிறது என்ற கவலை ஆசானுக்கு. இந்த நிலப்பதிவு ஒரு வேளை மங்கலசேரி குடும்பத்திற்கு நல்லது செய்யலாம். அங்கே துடிமாட்டுப்பயல்களான மருமகன்மார் இருபதோ இருபத்தைந்து பேரோ இருந்தார்கள். வேலை செய்யச் சோம்பல் படாதவர்கள் அவர்கள். இப்போதே புறம்போக்கு நிலங்களில் யாரையும் கேட்காமல் கொள்ளாமல் ஏமாற்றி வளைத்துப் போட்டு விவசாயம் செய்து வருகிறார்கள். ஆனாலும் அந்தக் குடும்பத்திற்கு வருஷாவருஷம் செலவுக்கு நெல் போதவில்லை. எவ்வளவு நிலம் அவர்களுக்கு எழுதிக்கொடுத்தாலும் அவர்கள் அதில் விவசாயம் செய்துகொள்வார்கள். ஆசான் நிர்வாகிக்கு ஒரு புத்திமதி சொன்னார். “தேவஸ்தானத்துக்குப் பத்திரம் போட்டுக்கிடைக்கிற அளவு நிலத்தைக் கேட்டு வாங்கிக்குவோம். தேவஸ்தானத்திற் கென்றால் வரி இருக்காது. க்லாசிப்பேரை சந்தோஷப்படுத்தணும். நம்ம சொந்தக்காரியத்துக்காக இல்லே, தேவ காரியமில்ல இது?”

பாலத்தோள் முகுந்தர் அங்கே வந்து சேர்ந்தார். அவர் பெரிய பிராமணர். ஐம்பது ஆண்டுகள் கோயிலில் மேல் சாந்தியாய் இருந்த அவர் எருமத்ரமடம் யாரோ ஒரு சூத்திரன் தங்குவதற்குத் தரப்பட இருக்கும் செய்தியைக் கேட்டு விசாரிக்க வந்திருந்தார்.

‘அந்த மடம் கோயில் தரிசனத்துக்கு வருகின்ற பிராமணர் களுக்கு ராத்திரி தூங்குறதுக்காக இருக்கிற இடமாச்சே, அங்கே சூத்திரர்களைக் குடும்பத்தோட தங்கவிடலாமா? என்ன குறுப்பு? குறுப்பு கோடாந்த்ர குலமா இல்லையா? குலவிதிகளும் தர்ம நியாயங்களும் தெரியாதா உங்களுக்கு?”

பாலத்தோள் முகுந்தரின் கேள்விக்கு முன்னால் குறுப் பாசான் தளர்ந்து போனார். ஆனாலும் பணிவுடன் சொன்னார், ‘இது ஊருக்காகச் செய்ய வேண்டிய காரியமாயிருச்சு. வரப் போகிறவர் பொன்னுதம்புரானின் உத்தியோகஸ்தர். அவரைச் சரியாக கவனிக்கலேன்னா ஊர்க்காரங்களுக்குத் தொந்திரவு வரும். கரிசல் காடெல்லாம் கூடப் பத்திரம் போட்டு எல்லாத்துக்கும்

தீர்வை விதிச்சா விவசாயிகளெல்லாம் ஊரைவிட்டுப் போகும் படியா ஆயிடும். க்லாசிப்பேரை சந்தோஷப்படுத்தினா பல சலுகைகள் கிடைக்கும்." மூத்தாசான் சொன்னதைக் கேட்டபோது நம்பூதிரியின் சிந்தனை வேறொரு திசைக்குத் திரும்பியது. தேவஸ்தானத்திற்கும் பிராமண சொத்துக்கும் வரிபோட மாட்டார்கள் அல்லவா. ஏராளமான நிலத்தைத் தன் வீட்டாரின் பெயரில் எழுதிவாங்கிக் கொள்ளவேண்டும். இந்த விஷயத்தைப் பிள்ளைகளுடன் கலந்து ஆலோசிக்க முகுந்தர் வீட்டிற்குத் திரும்பினார்.

***

திருவனந்தபுரத்திலிருந்து க்லாசிப்பேரும் அவரது குடும்பத்தாரும் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் எருமத்ர மடத்தில் குடியேறி னார்கள். க்லாசிப்பேர் கொச்சுப்பிள்ளை நல்ல அழகன். குடுமியும் கல்பதித்த கடுக்கணும் அணிந்திருந்த அவர் முண்டாசு கட்டி நடந்துபோகும்போது எவரும் ஒருமுறை நின்று பார்த்துவிட்டுப் போவார்கள். ஆனால் அவருடைய மனைவி குஞ்ஞுலட்சுமி கறுத்து, தடித்த ஒரு கரும்பூதம். கந்தர்வனைப்போல் இருக்கும் ஒருவருக்குக் குறத்தறக்காளியைப்போல் ஒரு மனைவி. எந்தப் பொருத்தமும் கிடையாது. ஆனாலும் அவர்களுக்கு ஒருவரை யொருவர் பிடித்துப் போயிற்று. ஊரில் இளவட்டங்களுக்கு அது ஒரு வியப்பாகத்தான் இருந்தது. இந்த கந்தர்வனுக்கு இந்த கரும்பூதத்திடம் எப்படிப் பிடிமானம் ஏற்பட முடியும்!

க்லாசிப்பேர் நிலஅளவை வேலையைத் தொடங்கினார். தண்டல்காரன், அதிகாரி ஆகியோர் பின்தொடர அவர் வீடு வீடாக ஏறியிறங்கித் தகவல் பதிவேடைத் தயாரிக்கத் தொடங் கினார். நிலஅளவை என்றால் என்ன என்பதை ஊர்க்காரர்களும் தெரிந்துகொள்ளத் தொடங்கினார்கள். வரிகூட்டப்போகிறார். இனி வரியை நெல்லுக்குப் பதிலாகப் பணமாகக் கட்டவேண்டும். நிலப்பதிவு சம்பந்தமாகக் குறைபாடு நேராதிருக்கக் க்லாசிப்பேரை சந்தோஷப்படுத்த வேண்டும். அதற்குக் க்லாசிப்பேரை நேரில் போய்ப்பார்த்துச் செய்ய வேண்டியதைச் செய்யவேண்டும். முதலில் இப்படி அவரை நேரில் பார்த்து அன்பளிப்புச் செய்தது மங்கலச் சேரி ரவிப்பிள்ளை. எண்ணெய், சர்க்கரை, பெரிய பெரிய நேந்திரம் பழக்குலைகள், காய்கறிகள் ஆக எல்லாமாகச் சேர்ந்து பெரிதும்

சிறிதுமான மூட்டைகளாக அந்த அன்பளிப்பு இருந்தது. இவை மட்டுமல்லாமல், பட்டுத்துணியில் மூடி மறைத்த இரண்டு பவுன் தங்கநகையும்.

இடக்கரை கொச்சுமிச்சாரின் நிலத்தை அளந்து சரிபார்க்கக் க்லாசிப்பேர் கொச்சுப்பிள்ளை இடக்கரை வீட்டிற்குச் சென்ற போது கொச்சுமிச்சார் திகைத்துப்போய் வாய்பிளந்து நின்றார். கொச்சுப்பிள்ளையைப் பற்றிக் கொச்சுமிச்சாரர்கள் அறிவார்கள். பொன்னுதம்புரானுக்கு ராஜபோஜனத்திற்கு முரட்டு அரிசியான சிவப்பு நிற வரியரிசியைக் கொண்டுபோய்க் கொடுத்துக் கொண் டிருந்தவர், கொச்சுமிச்சார். முப்பத்தாறு ஆண்டுகளாக மாதம் ஒருமுறை வீதம் திருவனந்தபுரத்திற்குப் போய்க்கொண்டிருக்கிறார். கொச்சுமிச்சார் சுமந்துகொண்டுசென்ற வரியரிசியினால் சமைத்த சோற்றைத்தான் ஊர்விட்டுப்போன ஐந்து தம்புரான்மார்கள் சாப்பிட்டு வந்தார்கள். அதனால் அவருக்கு அரண்மனைக் கதைகள் பல தெரியும். ‘சுப்பய்யன் சுவாமி இப்பவும் இருக்காரா?”, என்ற கேள்வியைக் கேட்டுக் க்லாசிப்பேர் கொச்சுப்பிள்ளை சற்றே திகைத்தார். மகாராஜாவுக்குச் சமையல் செய்து கொண்டிருந்தவர் தான் சுப்பய்யன்சுவாமி. கொச்சுமிச்சார் கொண்டுபோகும் வரியரிசியை அளந்து வாங்கிக் கொண்டிருந்தவர் சுப்பய்யன் சுவாமிதான். அவ்வாறு அவரும் கொச்சுமிச்சாரும் நெருக்கமான வர்கள். திருவட்டாற்றில் ஒரு பெரிய நாயர் வீட்டில் சுப்பய்யன் சுவாமி முதல் சம்பந்தம் செய்திருந்தார். மகாராஜாவினுடைய கட்டளைப்படி அது நடந்தது. சுவாமி நிச்சயதார்த்தப் புடவை கொடுப்பதற்கு முன்பே கர்ப்பிணியாக இருந்தாள் அந்தப் பெண்மணி. பிரசவம் முடிந்ததும் சுவாமியிடம் சொன்னார். இனிமேல் ‘அந்தப் பக்கம் போகவேண்டாம் என்பதாக. இந்தக் கதையெல்லாம் அறிந்திருந்த கொச்சுமிச்சார் ‘சுவாமி இப்பவும் திருவட்டாறு போய்கிட்டிருக்காரா?”, என்பது உட்பட, இன்னபிற இக்கட்டான கேள்விகளைக் கேட்டுக் கொச்சுபிள்ளையைக் கிறங்கடித்தார். கொச்சுமிச்சார் க்லாசிப்பேரைச் சீண்டிவிட்டதன் பலனை அனுபவித்தார் என்பதாக இந்த சம்பாஷணையைக் கேட்டுக்கொண்டிருந்தவர்கள் சொன்னார்கள். கொச்சுமிச் சாருக்குப் பயம் இல்லை. க்லாசிப்பேர் தன்னை எதுவும் செய்து விட முடியாது. திருவனந்தபுரத்திற்குப் போய் சுப்பய்யன் சுவாமியை ஒரு தடவை பார்த்துவிட்டு வந்தால் போதும், அதற்குப் பிறகு க்லாசிப்பேரின் அதிகாரம் எதுவும் தன்மீது பாயாது. சுப்பய்யனைக் காக்கா பிடித்துத்தான், மகாராணி உட்பட,

மகாராஜாவின் மூலம் ஒவ்வொரு காரியத்தையும் சாதிக்க முடிந்திருக்கிறது.

க்லாசிப்பேருக்கு இன்றைக்கு ஊருக்குள் ஏற்பட்டிருக்கும் மானமும் மரியாதையும் இல்லாமல் போகச் செய்யும் கதைகள் கொச்சுமிச்சாருக்குத் தெரியும். கொச்சுமிச்சார் அந்தக் கதைகளைத் தன்னுடைய வீட்டிற்கு வந்து போகிறவர்களிடமெல்லாம் சொன்னார். சுப்பய்யன் சுவாமிக்கு அதற்குப் பிறகும் ஒரு கல்யாணம் நடந்தது. மகாராஜாவின் ஒரு மனைவி வீட்டில் தாதியாக இருந்த பவதியை சுவாமி கல்யாணம் செய்துகொண்டார். அவளுக்கு ஒரு மகள்; ஒரு கரும்பூதம். பவதியின் சொல்படிதான் சுவாமி நடக்க வேண்டும். அவ்வாறிருக்க, கிளிமானூர் அரண் மனையின் காரியஸ்தனின் மகன் அரண்மனையில் கிளார்க்காக வந்து சேர்ந்தான். அவன் ஓர் அழகிய வாலிபன். யாரோ ஓர் இளையதம்புரான் என்றே எவருக்கும் அவனைப் பார்த்தால் எண்ணத் தோன்றும். பவதியின் மகள் அந்தக் கிளார்க் பிள்ளை யாண்டனைப் பார்த்தாள். அவள் அப்பாவிடம் சொன்னாள், 'எனக்கு இந்த ஆள் போதும்." அவள் அப்படித்தான் சொல்வாள். காரணம், அவளுடைய தகப்பன் மடப்பள்ளி சமையல்காரர் சுப்பய்யன் சுவாமி. அவர் சொன்னால் அதை மகாராஜா தட்டமாட்டார். அவ்வாறு கூட்டிப்பெருக்கி சுத்தம் செய்யும் வேலைக்காரியின் மகளான கரும்பூதத்தைப் போலிருந்த குஞ்ஞு லட்சுமிக்கு, கந்தவர்னைப் போன்ற அழகானவனும் உயர்ஜாதிக் காரனுமான கொச்சுப்பிள்ளை கணவனானான். க்லாசிப்பேர் கொச்சுப்பிள்ளையின் மானம் பறிபோகும் இந்தக் கதையை, பொன்னுதம்புரானிடம் கூடியிருந்தவர்கள் கேட்டார்கள். கொச்சு மிச்சாரின் மருமகள் பாருவும் இந்தக் கதையை ஒளிந்து நின்று கேட்டாள். கந்தவர்வனுக்குக் கரும்பூதம் மனைவியானதன் காரணம் அவளுக்கும் புரிந்தது.

க்லாசிப்பேருக்கு மிகவும் நெருக்கமான சிப்பந்தி, தேவிடி முல்லக்காரன். அவன் ஒவ்வொரு வீடாக ஏறி இறங்கி ஒரு விவரத்தைத் தெரியப்படுத்தினான். இனிமேல் அன்பளிப்புச் செய்பவர்கள் மலையில் விளைந்தவற்றைக் கொண்டுபோகக் கூடாது. எருமத்ரமடத்தில் உள்ள அறைகளெல்லாம் பழங்களாலும் காய்கறிகளாலும் நிறைந்திருக்கின்றன. அவை அழுகி எங்கும் நாற்றம். ஊர்க்காரர்களுக்கு எதுவும் உசிதமாகப் படவில்லை. அதனால் குதிரை முத்திரை பதித்த இரண்டு பவுன் தங்கக்காசு அன்பளிப்புச் செய்யவேண்டுமென்று எரிக்கில்லத்து பப்பு

பணிக்கரிடம் முல்லக்காரன் கட்டளையிட்டான்; அவ்வாறே எல்லோரிடமும் சொல்லிக் கட்டளையிட்டான். உள்ளதைக் கொண்டு ஒரு மாதிரியாகக் குடும்பத்தை நடத்திக்கொண்டு போகும் ஒரு நல்ல மனிதர் பப்புபணிக்கர். இரண்டு பவுன் தங்கக்காசு விலை நூற்று நாற்பது ரூபாய். பணிக்கர் ஸ்தம்பித்துப் போனார். தேவிடி முல்லக்காரன் இட்ட கட்டளை. யாரால் மறுத்துச் பேச முடியும்? சில நாட்கள் கழித்து, குதிரை முத்திரைத் தங்கக்காசு நூறு வைத்துச் சரடு பின்னிய காசுமாலை அணிந்து கொண்டு குஞ்ஞுலட்சுமியம்மை கோயிலுக்கு வந்தாள்.

பழைய நாணயத்தில் ஒன்று நாகராசி என்பது. குதிரைப்பவுன் கிடைத்து அலுத்துப்போனதும் நாகராசி கிடைக்க வேண்டும் என்ற ஆசை வந்தது குஞ்ஞுலட்சுமியம்மைக்கு. மனைவியின் ஆசையை நிறைவேற்றி வைப்பது முல்லக்காரனல்லாமல் வேறு யார்? ஆனால் தனித்தங்கம் கொண்டு செய்த நாகராசி எந்தக் குடும்பத்தில் இருக்கிறது? தேவிடிமுல்லக்காரன் வீடு வீடாக ஏறியிறங்கித் தேடினான். நாகராசியைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தவர்களே மிகச் சுருக்கம்தான்.

குறுப்பாசான் சொல்லக்கேட்ட ஒரு கதை நினைவிலிருக்கிறது. ரொம்பப் பழைய கதை. புல்லாற்றுக் குடும்பத்தில் தென்மேற்கு மூலையில் ஒரு குளம் வெட்டினார்கள். அன்றைய காரணவர் இட்யாதிகைமள். குளம் தோண்டத்தோண்ட வெளிப்பட்ட கலங்கலில் ஒரு நீரூற்று பொங்கி வழிந்தது. அந்தப் பொங்குநீரில் ஒரு பெரிய செப்புப்பானை வெளியேறி உருண்டு புரண்டது. பூதம் காத்த புதையல் அது. வேலைக்காரர்கள் பயந்து ஓடினார்கள். இட்யாதிகைமள் குளத்தில் ஒரு குதி குதித்தார். காறி உமிழ்ந்து நாலு துப்புத் துப்பியதும் நீர்ப்பாய்ச்சல் அடங்கிப் போயிற்று. கைமள் பானையைப் பிடித்துத் தூக்கினார். கை நழுவாமல் இருக்கக் குழப்பத்தில் அந்தப் புதையலுக்குள்ளேயே துப்பி அசுத்தப் படுத்தினார். பிறகு பத்துப்பேர் சேர்ந்து பிடித்துத் தூக்கித்தான் புதையல் பானையை அறைக்குள்ளே கொண்டுபோனார்கள். நிறைய நாகராசிகள் அதில் இருந்தன. ஆனால் பத்தாவது அமாவாசையில் இட்யாதிகைமள் ரத்தம் கக்கி இறந்துபோனார். இன்றைக்கும் புல்லாற்றுக் குடும்பத்தில் சந்தான பாக்கியம் குறைவுதான்.

இப்போதைய காரணவர் இட்டிராசிக்கைமளும் ஒரு சகோதரியும் இரண்டுபிள்ளைகளும் மட்டும்தான் அந்தக் குடும்பத்தில். க்லாசிப்பேரின் மனைவிக்கு நாகராசி அன்பளிப்புச்

செய்ய முல்லக்காரன் மிகவும் நிர்ப்பந்தித்த போதிலும் இட்டிராசிக் கைமள் அதைக் காதில் போட்டுக்கொள்ளவில்லை. முல்லக் காரனும் சளைக்கவில்லை. ஆயிரத்தைந்நூறு மரக்கால் கரிசல் நிலத்தைப் புல்லாற்றுக்கைமளின் பெயரில் எழுதிவைத்தான். ஒரே ஒரு மருமகன் மட்டுமே இருந்த புல்லாற்றுக்கைமள் எப்படி இவ்வளவு நிலத்தையும் விவசாயம் செய்வார் என்பதைப் பார்த்து விடலாம்! புல்லாற்றுக் குடும்பம் வரி செலுத்தியே முடிந்து போகட்டும். அதுதான் முல்லக்காரனின் வன்மம்.

நல்ல நிலங்கள் பலவற்றை தேவஸ்தானத்தின் பெயரில் பதிவு செய்து வரித்தள்ளுபடி செய்துகொள்ள குறுப்பாசான் மறக்க வில்லை. குன்றுப்பகுதியில் வயல்களுக்கான ஏரியைச் சார்ந்த நூற்றியேழு சமவெளி நிலங்கள் தேவஸ்தானத்துக் கணக்கில் வந்தன. புலையருக்குச் சொந்தமானது வேறு யாருக்கும் வேண்டாம். அவர்களுடைய குலதெய்வம் மறுதா கோபித்துக் கொண்டால் ரத்தம் கக்கிச் சாகவேண்டும். பிராமணச் சொத்து போன்று புலையரின் சொத்தில் கைவைத்தாலும் நாசம்தான். தர்மசாஸ்தாவுக்கு மறுதாவிடம் பயப்படத் தேவையில்லை. அதனால்தான் பனை போல வளர்ந்த தென்னந்தோப்புகள் உள்ள புலையர் சேரிகள் உள்ளிட்ட நிலங்களையெல்லாம தர்மசாஸ்தா வின் பெயரில் எழுதிக் கொண்டார்கள். அது எதுவும் புலையர் களுக்குத் தெரியாது.

க்லாசிப்பேர், அவருடைய மனைவி ஆகிய இருவரின் தினசரிப்படியான கோயில் தரிசனம் ஊரில் ஒரு முக்கிய நிகழ்ச்சியாயிற்று. அந்த எழுந்தருளின் கம்பீரியத்தை எவரும் நின்று ஒருமுறை பார்த்துவிட்டுப் போவார்கள். அவர்கள் கோயிலுக்குப் போயிருக்கும்போது தர்மசாஸ்தாவுக்கு இருப்புக்கொள்ளாதோ என்று சந்தேகம். காரணம், தர்மசாஸ்தாவுக்கு நிலங்களைப் பதிவு செய்துகொள்ள வேண்டுமானால் க்லாசிப்பேரின் கடைக்கண் பார்வை வேண்டுமல்லவா. க்லாசிப்பேரும் அவருடைய மனைவியும் கடவுள் சன்னிதானத்தில் வேண்டிக்கொள்வது என்னவாக இருக்கும்? அந்தத் தாம்பத்தியக் கொடியில் இன்னும் பூப்பூக்கவில்லை. குஞ்ஞுலட்சுமியம்மை வேண்டிக்கொள்வது நிச்சயமாக ஒரு குழந்தைக்காகத்தான். நாகராசி தவிர விரும்பியதை யெல்லாம் அவள் சம்பாதித்தாயிற்று. ஜீவனுள்ள ஒரு குழந்தை இல்லை. தங்கத்தினால் ஒரு குழந்தை செய்துவைத்துக் கொள்ளும்படி தட்டாசாரி சாமிமூப்பர் அவளிடம் ஆலோசனை சொன்னார். ஊரில் அது அங்கங்கே ஏளனத்துக்குரிய பேச்சாயிற்று.

அந்தத் தங்கக் குழந்தையைப் பக்கத்தில் படுக்க வைத்துக் கொண்டுதான் அவள் தூங்குவாள்.

***

க்லாசிப்பேரை நேரில் பார்த்து அன்பளிப்புச் செய்யாதவர்கள் மேலும் சிலர் உண்டு. அவர்களுடைய பெயரில் விவசாயத்திற்கு ஒத்து வராத நிலங்களைப் பேரேட்டில் சேர்த்துத் தீர்வை விதிப்பதாக முல்லக்காரன் எல்லா விவசாயிகளிடத்திலும் சென்று தெரிவித்தான். அவனை எல்லோரும் தலையில் கை வைத்தபடிச் சபித்தார்கள். முல்லக்காரன் அதையெல்லாம் பொருட்படுத்த வில்லை. அவனுக்கு யார் மீதும் வருத்தமில்லை. நிலப்பதிவு என்ற ஏற்பாடு வந்தது. அதற்கு எல்லோரும் ஒத்துழைக்க வேண்டும். அதாவது எல்லோரும் க்லாசிப்பேர்க்கு அன்பளிப்புச் செய்ய வேண்டும். வழக்கமாக மேலதிகாரிக்கு எது இங்கிதமோ அதைத் தான் முல்லக்காரன் செய்திருக்கிறான். பத்தோ அதற்கும் அதிக மாகவோ தலைமுறைகளாகத் தேவிடிக் குடும்பத்தார் நிரந்தர முல்லக்காரர்களாக இருந்து வருகிறார்கள். இந்த நிலப்பதிவுடன் இந்தப் பதவி முடிவுக்கு வந்துவிடும். தீர்வை பணமாகக் கட்டப் படவேண்டும் என்பதால் இனி முல்லக்காரன் தேவையில்லை. அது மட்டுமல்ல, முல்லக்காரனின் குடும்பம் இருப்பதைக் கொடுத்துவிட்டுத் தெருவில் நிற்க வேண்டியதுதான். இப்போதைய முல்லக்காரனுக்கு வாரிசு கிடையாது. வயதான சகோதரி மட்டுமே அவனுடன் தேவிடிக் குடும்பத்தில் மிச்சம் மீதியாக இருக்கிறாள். முல்லக்காரர்கள் தலைமுறை தலைமுறையாக ஊராருக்குச் செய்த துரோகங்களால்தான் குடும்பத்தில் சந்ததியே அற்றுப்போய் விட்டது என்பது உண்ணூலியம்மையின் அபிப்பிராயம்.

பழைய காலத்தை உண்ணூலியம்மை நினைத்துப் பார்த்தாள். தன்னுடைய இளவட்டப் பருவத்தில் இந்தக் குடும்பத்தில் பதினெட்டு பேர்கள் இருந்தார்கள். எல்லோரும் அவளைவிட்டுப் போய்விட்டார்கள். தம்பி பாச்சரனைத் தவிர்த்து. தினமும் இரவில் சோறு பரிமாறிவிட்டு உண்ணூலியம்மை பக்கத்தில் உட்கார்ந்தபடி சொல்வாள்; 'எனக்கு மூச்சு இழுத்துக்கோ பறிச்சுக்கோன்னு இருக்குதே, பாச்சரா." ஆயிரம் மனசு நொந்து சபித்தால் அதன் பலன் மூச்சு இழுத்துப் பறிக்கும் மரணமாக இருக்குமாம். பாவம் செய்த ஆளை மட்டுமல்ல, குடும்பத்திலுள்ள மற்றவர்களையும்

இந்த நிலை பீடிக்கும். பாச்சரன் முல்லக்காரனான பிறகு ஆயிரக் கணக்கானோர் கண்ணீருடன் சபித்திருக்கிறார்கள். முன்னரே கூட ஆறேழு தலைமுறை முல்லக்காரர்களின் பாவம் அந்தக் குடும் பத்தைச் சுற்றிக் கொண்டிருந்தது. இனிமேலாவது எவருடைய சாபமும் பிடிக்கக் கூடாதென்று உண்ணூலியம்மை சொல்லிக் கொண்டிருப்பாள்.

ஆனால் பாச்சரன் என்ன செய்வான்? இதோ, நிலப்பட்டா நடவடிக்கைகளை மேல்விசாரணை செய்ய மேலதிகாரி வருகிறார். ஊராருக்குப் புகார்கள் இருக்குமானால் அவற்றைக் கேட்பதற் காகத்தான் மேலதிகாரி வருகிறார். அவரை மகிழ்வித்துத் திருப்பி அனுப்பிவைக்க வேண்டியது க்லாசிப்பேரின் பொறுப்பாகும். அதாவது, முல்லக்காரன்தான் மேலதிகாரிக்கான அன்பளிப்பு களையும் திரட்டித் தரவேண்டும். மேலும் ஒரு பங்கு தேவை என்பது இதன் பொருள். இனி என்ன சொல்லி ஊராரை வசியப் படுத்துவது? மேலதிகாரிக்கு அன்பளிப்பு கொடுக்க முடியாமல் போனால் அந்தத் தோல்விக்குக் காரணம் முல்லக்காரன்தான்.

மேலதிகாரியை எங்கே தங்கவைப்பதென்று சமூகத் தலைவர்களான கோடாந்த்ர மூத்தாசானும், சீராட்டச் கைமளும், கோன்னோத்துபிள்ளையும், தலைவெடிக்கக் கலந்தாலோசித் தார்கள். கோயிலின் தெற்குப்புறத்திலுள்ள மாடிவீட்டைச் சுத்தப் படுத்தினார்கள். சப்பரமஞ்சக் கட்டிலைப் பொருத்தி ஆயத்தப்படுத்தி னார்கள். வெல்வெட் மெத்தையைத் தைத்துப் போட்டார்கள். சமையல் செய்வதற்கு சங்கரன் அண்ணாவியை வரவழைத்தார்கள். மேலதிகாரியைக் கவர்வதற்கான ஏற்பாடுகள் ஒருவழியாக நிறை வடைந்தன. முன்பக்கம் சீருடை அணிந்த இரண்டு பணியாட்கள்; பின்பக்கம் வாள் உருவிப் பிடித்த இரண்டு வாள்வீரர்கள். மேலதி காரியின் இந்த எழுந்தருளலைப் பார்ப்பதற்கு வழிநெடுக ஊர்க் காரர்கள் இடுப்பில் துண்டைக் கட்டிப் பணிவுடன் குனிந்தபடி வாய்பொத்தி நின்றார்கள். மூன்று நாட்கள் விசாரணை நடந்தது. எவருக்கும் பட்டா நிலப்பதிவு பற்றிப் புகார் எதுவும் இல்லை. அப்படித்தான் இருந்தாலும், தேவிடி முல்லக்காரன் இருக்கும்போது யாராவது புகார் மனு கொண்டுவருவார்களா? க்லாசிப்பேர் கொச்சுப்பிள்ளையை மேலதிகாரி பெரிதும் பாராட்டி விட்டுத் திரும்பினார். விடைபெற்றுக்கொண்டபோது இடங்ஙளி தங்க மோதிரத்தை ஊராரின் வெகுமதியாக மேலதிகாரிக்குக் கொடுத் தனுப்பியது, முல்லக்காரனின் கெட்டிக்காரத்தனம் என்றுதான் சொல்லவேண்டும்.

ஆனால் இந்தச் சம்பவம் குஞ்ஞுலட்சுமியின் மனதைச் சற்றே தளரச் செய்தது. தன்னுடைய கணவன் மேலதிகாரியின் எதிரில் பவ்யமாகக் குனிந்து நிற்பதான காட்சியை அவளால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. மேலதிகாரி வந்தபோது க்லாசிப்பேரின் மதிப்பு சரிந்துவிட்டது. ஒரு மேலதிகாரியின் மனைவியாக இருந்தால் அமையக்கூடிய பதவிப் பெருமையை அவள் மனதுக் குள்ளேயே கணக்கிட்டுப் பார்த்தாள். தனக்கு வரவேண்டியவன் ஒரு மேலதிகாரியாக இருக்க வேண்டுமென்று கல்யாணத்தின் போது அப்பாவிடம் அவள் சொல்வதாக இருந்தாள். அம்மாவும் அவள் சொல்வதை ஒப்புக் கொள்வதாக இருந்தாள். பொன்னு தம்புரானின் சமையல்காரர் சுப்பய்யன் சுவாமியும் பவதிப் பிள்ளையும் நினைத்துவிட்டால் எதுதான் நடக்காது? இனி ஒன்று தான் வழி. கொச்சுப்பிள்ளையை மேலதிகாரியாக மாற்றுவதுதான் அது. அது குஞ்ஞுலட்சுமியின் ஆசை. அந்த ஆசையைக் கொச்சுப்பிள்ளையிடம் சொன்னாள். கொச்சுப்பிள்ளையின் ஆசைக்கு அப்பாற்பட்டது அவ்வளவு பெரிய பதவி உயர்வு. ஆனால் பொன்னுதம்புரான் நினைத்தால் இதுவும் நடக்கும். இதற்கு மேலும் நடக்கும். கொச்சுப்பிள்ளை ஒரு தடவை திருவனந்தபுரம் வரை போய்க் கொஞ்சம் முயற்சி செய்தால் என்ன என்பதாகக் குஞ்ஞுலட்சுமி தன்னுடைய எண்ணத்தை வெளிப் படுத்தினாள். தேவைப்படுமானால் அதற்கு வேண்டிய செலவு செய்யவும் அவள் தயார். க்லாசிப்பேர் வேலை பார்த்துச் சம்பாதித்த பணம் அதற்குப் போதுமானது.

***

பௌர்ணமி இரவுகளில் கோடாந்த்ர வளாகத்தில் பாரிஜாதத்தின் மணம் வீசும். இந்த பூமியில் எங்குமில்லாத நறுமணம். விசாலமான அந்தத் தோட்டத்தில் ஏழு நாகபூஜைத் தளங்கள் உண்டு. ஆகாயம் தொட்டு வளர்ந்துநிற்கும் பெரிய மாமரங்களும் உண்டு. கோடாந்த்ர களரிக்கூடம் தான் ஊரில் பிரதான களரிப் பயிற்சி கூடமாக இருந்தது. அந்தக் குடும்பத்தின் பழைய செல்வாக்கை நங்கையார் பார்த்திருக்கிறாள். அங்கே வேலைக்காரிதான் என்றாலும் நங்கையார் பிறந்ததும் வளர்ந்ததும் அந்தக் குடும்பத்தில்தான். இப்போது அங்கே எஞ்சியிருக்கும் ஒரே பெண் சந்ததியான கொச்சு பெண்ணு குஞ்ஞும்மையை வளர்த்தது

நங்கையார்தான். குஞ்ஞும்மை அவளுடைய வயிற்றில் பிறந்தவ ளல்ல என்பதைச் சொல்லவேண்டும்.

கிழக்குத் தோட்டத்திலுள்ள வீட்டில்தான் மூத்த குறுப் பாசான் குடியிருந்தார். அந்தந்தக் காலங்களில் மூத்தாசான்மார்கள் மனைவிமார்களோடு சேர்ந்து வாழ்ந்திருந்தது இந்த வீட்டில்தான். இப்போதைய மூத்தாசானான இட்டிக்குறுப்புக்கு மனைவி இல்லை. அவர் ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டார் என்றாலும் அந்தத் தாம்பத்தியம் அதிகநாள் நீடிக்கவில்லை. அவரது மனைவி இட்டிச்சிரி இறந்துபோனாள். வீட்டில் தனி யாளாகத் தூங்கித் தூங்கி ஆசான் கிழவரானார். ஒரு தம்பி உண்டு. அய்யப்பக் குறுப்பு; மூத்தாசானுக்குப் பிறகு அடுத்த காரணவராக வர வேண்டியவர்.

மருமகள் கொச்சுபெண்ணு குஞ்ஞும்மை கல்யாணப் பருவம் எய்தியதை மூத்தாசான் அறிந்துகொண்டதாகத் தெரியவில்லை. தேவஸ்தான நிலஅளவை காரணமாக ஆசானுக்கு நின்று நிமிர நேரமில்லை. ஆனால் குடும்பத்திற்கு சந்ததி வேண்டாமா? இந்தக் குடும்பம் நிலைத்து நிற்கக் குஞ்ஞும்மை பிரசவித்தாக வேண்டும். அது மட்டுமல்லாமல் கோடாந்த்ர வளாகத்தில் கந்தர்வ சஞ்சாரம் தொடங்கிவிட்டது. நீண்ட காலத்திற்குப் பிறகு இது ஏற்பட்டிருக் கிறது. குடும்பத்தில் சந்ததி உண்டாகப் போவதற்கான அறிகுறிதான் இது என்பது நங்கையாருக்குத் தெரியும். கன்னிப் பெண்ணான குஞ்ஞும்மையைக் காணத்தான் கந்தர்வன் வருவதெல்லாம். இனி ஏதாவதொரு பிராமணனுடன் குஞ்ஞும்மைக்குக் கல்யாணம் செய்துவைக்கவேண்டும். கோடாந்த்ரயில் பெண்மணிகளுக்கு பிராமணர்கள் கணவர்களாக வாய்த்திருந்தார்கள். இந்த விஷயத்தை நங்கையார் கதவிடுக்கில் மறைந்து நின்றபடி கொச்சு ஆசானிடம் சொன்னாள். கந்தவர்களை சாந்தப்படுத்துவதற்கு ஒரு கந்தர்வன் பாட்டு நிகழ்ச்சியையும் நடத்த வேண்டும். பழைய சம்பிரதாயங்கள் எல்லாம் நங்கையாருக்குத் தெரியும். மாமாவிடம் சொல்வதாக கொச்சாசான் பதிலளித்தார்.

தாமதப்படுத்தாமல் திருவனந்தபுரத்திலிருந்து ஒரு கொச்சு பட்டர் சேஷய்யன் வந்தார். மூத்தகுறுப்புடன் கலந்து ஆலோசித்து விட்டுக் க்லாசிப்பேர் கொச்சுப்பிள்ளைதான், சேஷய்யனை வரவழைத்தார். ஒரு நல்ல முகூர்த்தத்தில் சேஷய்யன் கொச்சு பெண்ணு குஞ்ஞுமைக்குத் தாலிகட்டினான். அன்று கோயிலில் இரவுகால பூஜை முடிந்து சேஷய்யன் கோடாந்த்ரய்க்கு வந்து சேர்ந்தான்; மாமியார் வீட்டில் தூங்குவதற்காக. மூத்தாசானும்

கொச்சாசானும் மரியாதையுடன் பிராமணனை வரவேற்றார்கள். கோயிலில் நமஸ்காரச்சோறு சாப்பிட்டுவிட்டுத்தான் சேஷய்யன் போனான். கோடாந்த்ரயில் பிராமணர்கள் உட்கார்ந்து சாப்பிடு வதற்கென்று தனியான மடம் உண்டு. சமையல் அங்கே செய்து கொள்ளலாம் என்று மூத்த குறுப்பு காட்டிய தனிச் சலுகையில் சேஷய்யனுக்கு நாட்டமில்லை. மூத்தகுறுப்பு வீட்டிற்குப் போய்விட்ட பிறகு பட்டர் நங்கையாரிடம் தன்னுடைய சங்கடங் களை விவரித்தான். தன்னுடைய அன்றாடப் பயன்பாட்டுக்கான அரிசியையும் தேங்காயையும் எண்ணெயையும் மற்றவற்றையும் தடையில்லாமல் தந்தால் போதும். அது திருவனந்தபுரத்திலுள்ள ஒரு பிராமணக் குடும்பத்திற்கு உதவியாக இருக்கும். நான் கடவுளுக் கான நைவேத்தியத்தைக் கொண்டு பிழைத்துக் கொள்வேன். நங்கையார் இதற்குச் சம்மதித்தாள்.

சேஷய்யன் குஞ்ஞும்மையின் அறைக்குள் போனான். கொஞ்ச நேரத்தில் இடுப்பு வேட்டியை வாரிச் சுருட்டிப் பிடித்துக் கொண்டு கதவைத் திறந்து வெளியே ஓடினான். ஒரு மல்யுத்தம் நடந்தது போலிருந்தது. குஞ்ஞும்மையும் மூச்சுத் திணறினாள். பட்டர் பயந்து ஓடுவதற்கான காரணம் என்ன? நங்கையாருக்கும் புரியவில்லை. பட்டரை, கந்தர்வன் கழுத்தை நெரித்துவிட்டானா? அந்த அறையில் கந்தர்வன் நடமாட்டமா? கல்யாணம் முடிந்த பெண் படுத்திருக்கும் அறை அது. அந்த இடத்தைத் தவிர வேறு எங்கும் வேண்டுமானாலும் கந்தர்வனின் நடமாட்டம் இருக்கலாம்.

பயந்து தளர்ந்த குஞ்ஞும்மை நங்கையாருடைய மடியில் படுத்துச் சின்னக் குழந்தையைப் போலத் தூங்கினாள். களங்க மில்லாத அந்த முகத்தைப் பார்த்தவாறு சிலையாக உட்கார்ந்து விட்டாள் நங்கையார். வெளிவாசலில் படுத்துக்கிடந்த சேஷய்யன், ஒரு ராப்பட்சி சிறகடித்துப் பறந்த ஓசை கேட்டு, உரக்க அலறினான். அவனுக்குப் பயம் விடவில்லை. நங்கையாரின் மூக்கு மோப்பம் பிடித்தது. காற்றுக்குப் பாரிஜாதத்தின் மணம் உண்டோ? சந்தனம் முதலான எட்டுவகை வாசனைப் பொருட்கள் கூட்டாக வலம் வருகின்றனவோ? இல்லை. கந்தர்வன் கஞ்சாரம் செய்யும் நாளல்ல இது. அல்லது பழைய அறை என்பதான குற்றமோ? சுற்றிச்சூழ சில கனைப்புச் சத்தங்கள் கேட்பதுபோலத் தோன்றிற்று நங்கையாருக்கு. இறந்துபோன கோடாந்தரக் குஞ்ஞும்மைகளின் இடிந்த வாழ்க்கையின் கனைப்புச் சத்தங்களாக இருக்கலாம்.

முன்பு கோடாந்த்ரயில் ஒரு குஞ்ஞும்மைக்குத் தாலிகட்ட அன்றையக் காரணவர் ஒரு துளு பிராமணனைக் கொண்டு

வந்தார். அந்தக் குஞ்ஞும்மைக்கு ஒரு காதலன் இருந்தான் அதனால் தாய்மாமன் அழைத்துவந்த துளு பிராமணன் தனக்கு வேண்டா மென்று அவருடைய முகத்துக்கு நேராகவே சொன்னாள். மாமாவின் ஒரே உதையில் குஞ்ஞும்மையின் கதை முடிந்தது. நங்கையாருடைய அம்மாவழிப் பாட்டி சொல்லக்கேட்ட கதை இது. அந்தக் குஞ்ஞும்மை அழகியாக இருந்தபோதிலும் கந்தர்வன் வந்து நுழையவில்லை. கந்தர்வனுக்கு வேண்டியது அழகல்ல; பெண்ணுக்குத் தேனின் மணம் இருக்க வேண்டும். நங்கையார் தன்னுடைய மடியில் படுத்துறங்கும் கொச்சுபெண்ணு குஞ்ஞும்மையை முகர்ந்து பார்த்தாள். அது ஒரு தனி மணம். குஞ்ஞும்மையின் முலைக்காம்பு கறுத்திருந்தது. எத்தனை மாதமானால் முலைக்காம்பு கறுக்கும்?

நல்ல இருளடர்ந்த இரவு. இருபத்துநான்கு நாழிகை கழிந்து கோடாந்த்ரயில் மாமரத்து உச்சியில் பிறைநிலா பளிச்சென்று தெரியும். அப்போதுதான் பொழுது புலர்ந்து விடியும். நங்கையார் குஞ்ஞும்மையை மடியில் கிடத்திப் பொழுது வெளுக்குமவரை அப்படியே உட்கார்ந்திருந்தாள். விழித்தெழுந்த குஞ்ஞும்மை இரவில் நடந்தவற்றை நங்கையாரிடம் விவரித்தாள். அந்த பட்டர் வந்து நுழைந்தவுடனேயே அவர் கேள்வி கேட்டார். எனக்கு எத்தனை மாதமின்னு. எனக்குக் கோபம் வந்தது. கந்தர்வன் அவரை நெரித்துக் கொல்லுவான் அப்படீன்னுநான் சொன்னேன். அப்போ வெளியிலே வாசனை தெரிஞ்சது. காலடிச்சத்தமும் கேட்டது. கந்தர்வன் எப்படி இருப்பான்னு அவர் கேட்டார். நான் விளக்கமாகச் சொன்னேன். குஞ்ஞும்மை அன்றைக்கு வழக்கத்தை விட அதிகமாக வாயாடினாள். அடர்த்தியா குடுமி வச்சித் துளசிப்பூவும் சூடி, எட்டு வகை வாசனைகளோடு, கஸ்தூரி பூசி, சட்டையும் அங்கவஸ்திரமும் போட்டுக்கிட்டு புன்சிரிப்போடு அப்படி இருந்தாரு கந்தர்வன். குஞ்ஞும்மை கந்தர்வனை நேரில் பார்த்திருக்கிறாள் என்பது நங்கையாருக்கு நிச்சயமாகிவிட்டது. குஞ்ஞும்மை கதையைத் தொடர்ந்தாள். பட்டர் தலையை ஆட்டி ஒரு முனகல் பாட்டுப்பாடி என்னிடம் கேள்வி கேட்டார். கந்தர்வன் எருமத்ர மடத்திலே தங்கியிருக்கிற ஆளான்னு. நான் அவரோட குரல்வளையை எட்டிப்பிடிச்சேன். அவரு நாக்குக் குழற, கண்முழி பிதுங்கத் துடிச்சாரு. எனக்கு நினைவு வந்த பிறகும் பிடியை விடலே. நானும் பயந்துபோயிட்டேன். இதைச் சொல்லும்போதுகூட குஞ்ஞும்மையின் முகத்திலிருந்து பயம் நீங்கவில்லை. எருமத்ர மடத்தில் தங்கியிருக்கும் க்லாசிப்பேர்

கொச்சுப்பிள்ளைக்குக் குஞ்ஞும்மை சொன்ன கந்தர்வனின் சாயல் உண்டு என்பதை நங்கையார் நினைத்துப் பார்த்தாள். ஆனாலும் கந்தர்வனாகத்தான் இருக்க வேண்டும் என்று அவளுடைய மனம் சொல்லிற்று.

அடுத்தநாள் அந்தி வேளைக்கு முன்னால் சேஷய்யன் கோடாந்த்ரிக்கு வந்தான். அவனுடைய கழுத்துப் பிடரிக்கு இரண்டு பக்கமும் நகக்கீறல்கள் இருந்தன. அவன் உள்ளே வரவில்லை. வெளியே நின்றபடியே நங்கையாரைக் கூப்பிட்டான். அரிசியும் மற்ற சாமான்களும் துண்டில் வாங்கிக் கட்டிக்கொண்டு சேஷய்யன் போய்விட்டான்.

கோடாந்த்ரக் குறுப்பும் சீரட்டக்கைமளும் கோன்னோத்து பிள்ளையும் சேர்ந்து சேஷய்யனுக்குக் கோயிலில் ஒரு வேலை கொடுத்தார்கள். கோயிலில் உள்ள வாரிசுதாரர்களுக்கும் தரிசனத் திற்கு வரும் வழிபாட்டுக்காரர்களுக்கும் நைவேத்தியச் சோறு சமைத்துக்கொடுக்கும் வேலை. மாதம் மூன்று மரக்கால் நெல் சம்பளம். அது போக, தினமும் மிச்சம்விழும் சோறு விற்றுக் கிடைக்கும் வழியிலும் லாபமுண்டு. எருமத்ரமடத்திற்கு மாதத்தில் ஒன்றோ இரண்டோ தடவைகள் போவான். அவன் போகும்போது க்லாசிப்பேர் சற்றே அதிர்ச்சியடைவார். பணம் கேட்கத்தான் சேஷய்யன் அங்கு போவது. பட்டரை விரோதித்துக்கொண்டு பிணங்கினால் தன்னுடைய கந்தர்வ நாடகம் வெளிப்பட்டு விடுமென்ற பயம் க்லாசிப்பேர்க்கு இருந்ததனால் பட்டர் கேட்கும் பணத்தைக் கொடுத்துவிடுவார்; குஞ்ஞுலட்சுமிக்குத் தெரிந்திராத விஷயம் இது. இவ்வாறு சேஷய்யனுக்கு அந்த ஊரில் வேர்கள் ஓடின. கேடாந்த்ரயில் அன்றாட சலுகைப்படியும், கோயிலில் மாதச் சம்பளம், கிருத்திருமம் செய்து தினமும் மிச்சப்படும் சோறு விற்றுக் கிடைப்பது, எல்லாவற்றுக்கும் மேலாக க்லாசிப் பேரிடமிருந்து ஒவ்வொரு மாதமும் வாங்கும் கணிசமான தொகை—இவ்வாறு வெவ்வேறு வகையான வருமானம் சம்பாதித்துக் கொண்டிருந்த சேஷய்யனுக்குக் கோயிலில் கூட்டிப் பெருக்கிக் கொண்டிருந்த சக்கியின் வீட்டில் தான் ராத்திரி நேரத்து உறக்கம்.

சக்கியை முன்பு யாரோ கல்யாணம் செய்து கொண்டிருந் தார்கள். அந்த ஆள் போயாயிற்று. அதற்குப் பிறகு யாரும் அவளுக்கு ஒரு துணிகூட வாங்கிக் கொடுக்கவில்லை. அவளை ஒரு பெண்ணாகக்கூட அங்கீகரிக்க யாருமில்லை. எவரும் அவளுடன் பேசுவதுகூட இல்லை. அவள் அழகியல்ல. ஆனால்

சேஷய்யனுக்கு அவளுடைய மதிப்பு தெரிந்தது. சக்கி முரண்டு பிடிப்பவளல்ல. அவளும் வயதான அம்மாவுமாக இரண்டுபேர் மட்டும்தான் இருந்தார்கள். இரவு நேரப்பூஜை முடிந்து மிச்சமுள்ள சோறும் அம்மாக்காரிக்கான வெற்றிலையுமாக சேஷய்யன் சக்கியின் வீட்டிற்குப் போவான். அம்மாவுக்கு புதிய சம்பந்தக் காரனைப் பிடித்துப்போயிற்று. ஆனால் இப்படியே எத்தனை நாள் கழிப்பது? நல்ல நேரம் பார்த்து நான்கு பேர் முன்னிலையில் சுவாமி பெண்ணுக்கு ஒரு நிச்சயதார்த்தப் புடவை கொடுத்துத் தாலிகட்ட வேண்டுமென்று அம்மாக்காரி அபிப்பிராயப்பட்டாள். சேஷய்யன் சற்றே அதிர்ந்தான். அது மட்டுமல்லாமல், தான் சக்கியை ஆத்மார்த்தமாக நேசிப்பதாகவும் சக்கியை முறைப்படிக் கல்யாணம் செய்துகொண்டால் கோடாந்த்ரயில் கிடைத்துக் கொண்டிருக்கும் ஒன்றேகாலும் சலுகைப்படியும் இழக்க நேரிடும் என்றும் தெரிவித்தான். கோடாந்த்ரயில் கிடைக்கும் ஒன்றேகாலும் சலுகைப்படியும் உதறிவிட்டுச் சக்கிக்குத் தாலிகட்டுவதா அல்லது தாலிகட்டாமல் அவளுடன் தொடர்பு வைத்துக் கொள்வதா என்ற சேஷய்யனின் கேள்விக்கு அம்மாக்காரியால் பதில் சொல்ல முடியவில்லை.

கோடாந்த்ர குடும்பத்தில் ஒரு சந்ததி உண்டாயிற்று. கொச்சு பெண்ணு குஞ்ஞும்மை பிரசவித்தாள். தங்கக்கட்டிபோல ஒரு பெண் குழந்தை. இவ்வளவு கலையுள்ள ஒரு பெண் குழந்தை அந்த ஊரிலேயே பிறந்ததில்லை என்று எல்லோரும் நினைத் தார்கள். மூத்தாசான் மகிழ்ச்சியினால் துள்ளிக்குதித்தார். குழந்தையின் ஆயுள்பலத்திற்காக மிருத்யுஞ்சய ஹோமம் முதலான பல சடங்குகளை நடத்தினார். ஜாதகம் எழுதச் செய்தார்.

அந்த வருடம் ஊர் முழுக்க விவசாயம் மோசமாக இருந்தது. பெரும்பாலான குடும்பத்தார்கள் ஒவ்வோர் ஆண்டும் விவசாயச் செலவுக்கும், குடும்பச் செலவுப் பற்றாக்குறைக்கும் மங்கொம்பில் கணபதி அய்யர் சுவாமியின் களஞ்சியத்திலிருந்து பத்துக்கு இரண்டு வட்டிக்குக் கடன் வாங்குவது வழக்கம். விவசாயம் மோசமாகும்போது அந்த வருடத்துக் கடன் தீர்ப்பது கஷ்டமாகி விடும். மீண்டும் நெல் கடன் கொடுக்க மங்கொம்பில் சுவாமி மறுத்துவிடுவார். கோடாந்த்ரயிலும் தேவைப்படுவதான நெல் இல்லை. மழை காரணமாக ஏற்கெனவே கையிருப்பில் உள்ள நெல்லைப் புழுங்க வைத்து உலரச் செய்வதற்கும் வழியில்லை. அந்த நிலைமையிலும் சேஷய்யன் தினமும் வந்து தனக்குரியதை வாங்கிக் கொண்டிருந்தான். அதனால் மறுநாள் உபயோகத்திற்கான

அரிசியாக இருந்தாலும்கூட சேஷய்யன் வந்தவுடன் நங்கையார் அதை அளந்து கொடுத்துவிடுவாள். காரணம், பிராமண சாபம் ஏற்பட்டால் அதன் விளைவு சந்ததி நாசம். கோடாந்த்ர குடும் பத்தில் ஒரு பெண் வாரிசுதான் இருக்கிறார்கள். ஆனால் சேஷய்யன் அந்தப் பெண்ணைக் கண்டுகொள்ளவே இல்லை.

கஸ்தூரியும் புனுகும் பன்னீரில் சேர்த்துக் கலந்து கூட்டாக அமைந்த நறுமணம் கோடாந்த்ர வளாகத்தில் பரவியது. நாகபூஜைத் தளங்களில் பால் ஊற்றப்பட்டது. கந்தர்வ சஞ்சாரக் காலம் அது. கந்தர்வன் கொச்சுபிள்ளை உருவத்தில் பிரத்தியட்ச மானான். நெடுநேரம் ஆகியும் விழித்திருந்து விளையாடத் தொடங்கும் குழந்தைக்கு கந்தர்வன் வரும் நேரம் தெரிந்திருந்தது போலத் தோன்றிற்று. கொச்சுபிள்ளை குழந்தையைத் தாலாட்டும் காட்சி கண்டு லயித்துப் போவாள் குஞ்ஞும்மை. அப்பா எடுத்துக் கொஞ்சுவது அன்றையக் குடும்பங்களில் குழந்தைகளுக்குப் பழக்கமானதல்ல. அப்பா இல்லாவிட்டாலும் குழந்தைகள் வளரும். கொச்சுபெண் குஞ்ஞும்மைக்கும் தன்னுடைய அப்பாவைப் பார்த்த ஞாபகமில்லை. அப்பா ஒரு பிராமணர் என்பதாகச் சொல்லக் கேட்டதுண்டு. கோடாந்த்ரயில் பிராமணர்களுக்கான மடம்தான் அவர் தங்கியிருந்தது. குஞ்ஞும்மையின் அம்மா இறந்ததும் அவரும் போய்விட்டார். அதற்குப் பிறகு அவருக்கு அங்கே இடமில்லை.

சீரட்ட குடும்பத்திலும் பிராமணர்களுக்குத் தங்குவதற்கு மடம் உண்டு. அங்கே ஒரே சமயத்தில் ஐந்தோ ஆறோ நம்பூதிரி களும் பட்டர்களும் தங்கியிருந்தார்கள். சீரட்டயில் குஞ்ஞுமை களின் கணவன்மார்கள். வயதானவர்களும் நடுவயதுக்காரர்களும் யுவதிகளுமாகப் பதினேழு குஞ்ஞும்மைகள் அங்கே உண்டு. சிருதக்குஞ்ஞும்மைதான் அதிக வயதான குஞ்ஞும்மை. எண்பது வயதிருக்கும். இப்போதைய மூத்தக்கைமளின் சித்தி அவள். சிருதக் குஞ்ஞும்மை ஏழு பிள்ளைகளைப் பெற்றெடுத்தாள். அவர்களில் மூத்தபிள்ளைதான் குடும்பத்தின் அடுத்த காரணவர் ஆக வேண்டியவன். அவளுடைய கணவன் கணபதிப்போற்றி என்பவர். இப்போதும் மடத்தில் தான் தங்கியிருக்கிறார். ஆனால் சிருதக் குஞ்ஞும்மை கண்மூடிவிட்டால் கணபதிப் போற்றி படியிறங்க வேண்டியதுதான். அதற்குப் பிறகு பிறந்த வீட்டிற்குப் போய்க் காலம் கழிக்க வேண்டும். சம்பந்த வீட்டில் கிடைத்து வந்த சலுகைகள் எதுவும் பிறந்த வீட்டில் கிடைக்காது. ஆனாலும் போயே ஆக வேண்டும். அப்பா போகவேண்டாம் என்று பிள்ளைகள் சொல்வதும் இல்லை. எந்தக் குடும்பத்திலும் அப்படி

நடந்ததும் இல்லை. கணபதிப்போற்றி சீரட்டையிலிருந்து தகரப் பெட்டியைத் தூக்கிக்கொண்டு வெளியேறியதைச் சிருதக் குஞ்ஞும்மையின் பிள்ளைகள் தெரிந்துகொண்ட போதிலும் வந்து பார்க்கவில்லை. பிறந்த வீட்டிற்குச் சென்று மீதிக் காலத்தைக் கழிக்கவும், மரண காலம் வரை நிறைவேற்ற வேண்டிய சடங்கு களுக்கான பணம் அந்தத் தகரப் பெட்டியில் இருப்பதாகக் கணக்கு. சிருதக்குஞ்ஞும்மையின் கணவனாக இருந்துகொண்டு கணபதிப் போற்றி பிறந்த வீட்டிற்குக் குறைவான சொத்துக்களைத்தான் சம்பாதித்து வந்ததாகப் பேச்சு உண்டு. ஆனாலும் சிருதைக்கு முன்னதாகவே நான் சாகவேண்டும் என்று கணபதிப்போற்றி ஒவ்வொரு நாளும் பிரார்த்தனை செய்வார்.

சீரட்ட மடத்தில் மற்றொரு பிராமணன் குடியிருக்க வந்தான். அங்கிருந்தபடி சக்கிக் குஞ்ஞும்மைக்கு சேஷய்யன் புடவை எடுத்துக் கொடுத்துத் தாலி கட்டினான். ஆனாலும் கோடாந்த்ரயில் ஒன்றேகாலும் சலுகைப்படியும் அவன் வேண்டாமென்று ஒதுக்கிவிடவில்லை. கூட்டிப்பெருக்கும் வேலைக்காரி சக்கிக் குஞ்ஞும்மையின் சம்பந்தக்காரனுக்கு இனி கோடாந்த்ரயிலிருந்து ஒன்றேகாலும் சலுகைப்படியும் கொடுக்க வேண்டுமா என்ன? வேண்டுமென்று சேஷய்யன்கேட்டான். பட்டருடைய பேராசை!

***

நிலஅளவை வேலையை முடிக்க மற்றொரு குழு அதிகாரிகள் வந்தார்கள். அவர்கள் அளவையாள்கள். அக்குழுவின் தலைவர், நாகம்பிள்ளை என்ற ஒரு தமிழர். கைவாகும் அனுபவமும் அனுசரித்து நிலத்தை அளந்து சரிபார்த்து எல்லை நிச்சயித்துக் கல்நட்டு ஸ்கெட்ச் தயாரித்து சர்வே நம்பர் கொடுப்பது அவருடைய வேலை. ரொம்பநாள் தங்கியிருக்கவில்லை. க்லாசிப் பேர்க்கும் நாகம்பிள்ளைக்கும் இடையே சச்சரவு வந்துவிட்டது. நடைமுறையை அனுசரித்து எல்லை நிச்சயிக்கப்படவில்லை என்ற புகாருடன் விவசாயிகள் க்லாசிப்பேரை நேரில் பார்த்து சங்கடத்தைப் புலப்படுத்தியும் பயன் எதுவும் ஏற்படவில்லை. க்லாசிப்பேர்க்குத் தன்மீது அதிகாரம் செலுத்த முடியாது என்பது நாகம்பிள்ளையின் எண்ணம். அவருக்கும் நிறைய வந்துசேர வேண்டும். அதை வாங்கிக் கொடுக்க ஒரு தேவிடமுல்லக்காரன் அவருக்கில்லை. மொத்தத்தில் ஒரேயொரு ஏவலாள் மட்டுமே

அவருக்கு அந்த ஊரில் இருந்தான். பருத்திக்காட்டு ஔதை. கோன்னோத்துத் தொழுக்கூடத்தில் அவன் தங்கியிருந்தான். துடித்த ஒருத்தி வாரிப்பெருக்கி சுத்தப்படுத்தினாலும் அசிங்கமான தொழுவக்கூடம். க்லாசிப்பேர் எருமத்ர மடத்தில் ராஜபோகமாக வாழ்ந்து கொண்டிருந்தார். நாகம்பிள்ளையை யாரும் பொருட் படுத்தவில்லை. அவர் ஊராரிடம் பழி தீர்த்துக்கொண்டார். ஊரில் எல்லா எல்லைகளும் பிரச்சினைக்குள்ளாயின. க்லாசிப்பேர் நிலப்பதிவு செய்ததைச் சார்ந்து நாகம்பிள்ளையின் எல்லைகள் அமையவில்லை. புகார் சொல்லாத விவசாயி கிடையாது. தமிழனின் அட்டகாசத்தைத் தடுக்க முடியாத க்லாசிப்பேரின் இயலாமை ஊராருக்குப் புரியத் தொடங்கியது.

கடைசியில் நாகம்பிள்ளைக்கும் அன்பளிப்புச் செய்யுமாறு விவசாயிகளுக்குத் தேவிடிமுல்லக்காரன் உபதேசித்தான். அவ்வாறு நாகம்பிள்ளைக்கும் அன்பளிப்புச் செய்தவர்களின் புகார்களை அவர் சரிசெய்தார். அத்துடன் தினமும் அதிகாலை கோன்னோத்துத் தொழுவக்கூடத்தில் காக்கை கரையும் முன்பாகவே ஆட்கள் வந்து குழுமத் தொடங்கினார்கள். நாகம் பிள்ளையை ஊரார் ஆதரிக்கத் தொடங்கியதில் மிகவும் மகிழ்ச்சி அடைந்தது பருத்திக்காட்டு ஔதைதான்.

ஸ்தானிகளான கோடாந்த்ரக் குறுப்பாசானும் சீரட்டக் கைமளும் கோன்னோத்துபிள்ளையும் கலந்து ஆலோசித்தார்கள். ஊர் முழுக்க ஒருவருக்கொருவர் சண்டை அதைத் தீர்த்து வைக்க வேண்டியது சமூகத் தலைவர்களின் பொறுப்பு. நாகம்பிள்ளையின் தங்கலுக்குக் கோயிலை அடுத்திருந்த மாடிவீட்டை வசதிப்படுத்தித் தர தீர்மானித்தார்கள். அவருக்கும் அவருடன் வந்த குழுவின ருக்கும் செலவாகக்கூடிய நெல்லை தேவஸ்தானச் செலவுக் கணக்கில் சேர்த்தார்கள். இவ்வாறான சலுகைகள் கிடைத்ததும் நாகம்பிள்ளைக்கு ஒரு தெளிவு வந்தது. அவரும் குழுவினரும் போகும்போதும் வரும்போதும் ஊரார் எழுந்துநின்று கும்பிடத் தொடங்கினார்கள். க்லாசிப்பேருடைய அதிகாரம் மங்கத் தொடங் கியது போலிருந்தது. இப்போது சர்வேயர் நாகம்பிள்ளைதான் அதிகாரம் வாய்ந்த தலைவர். ஆனால் பணம் சேர்த்துக் குவித்த தென்னவோ க்லாசிப்பேர்தான்.

ஔதைக்கு மட்டும்தான் ஒரு சிக்கல் வந்து சேர்த்து. கோயில் மதிலுக்கு உள்ளேதான் நாகம்பிள்ளை தங்கியிருந்த மாடிவீடு. அங்கே கிறிஸ்தவர்கள் நுழைவதற்கு அனுமதி கிடையாது. நாகம்பிள்ளையின் தங்குமிடம் கோன்னோத்துத்

தொழுவக்கூடத்தில் இருந்தபோது அவரைச் சுற்றி சுற்றி ஔதை மட்டுமே வளைய வளைய வந்தான். அந்த சௌபாக்கியம் இப்போது கைநழுவிப்போய்விட்டது. பல தலைமுறைகளாக ஔதையின் குடும்பம் அந்த ஊரில்தான் நிலைகொண்டிருந்தது. நெடுங்காலத்திற்கு முன்பு கோயிலுக்குத் தேவையான தேங்கா யெண்ணெயைக் கொண்டுவந்து கொடுத்த ஒரு கிறிஸ்தவக் குடும்பத்தின் வழி வந்தவன்தான் ஔதை. கோயிலைச் சேர்ந்த பருத்திக்காட்டு வீடு அந்தக் குடும்பம் தங்கியிருக்க ஒதுக்கப் பட்டிருந்தது. எல்லா வீடுகளுக்கும் தேவையான புன்னைக்காய் எண்ணெயும் தேங்காயெண்ணெயும் ஆட்டிக்கொடுத்தது பருத்திக்காட்டு மாப்பிள்ளைமார்தான். இப்போது ஊரில் பத்து கிறிஸ்தவக் குடும்பங்கள் இருக்கின்றன.

நாகம்பிள்ளை வந்த பிறகு ஔதைக்குச் செக்காட்ட நேரமில்லை. மனைவி ஒறோதயும் மகன் வர்க்கியும் சேர்ந்து பகலும் இரவுமாகச் செக்காட்டியும் எல்லா வீடுகளுக்கும் தேவைப்பட்ட எண்ணெயைக் கொடுக்க முடியவில்லை. பெண்பிள்ளைகள் இருவரையும் நல்ல நிலையில் கட்டிக் கொடுத்து அனுப்பி வைத்த கௌரவம் ஔதைக்கு உண்டு. வாழ்க்கையில் பெரிய பாரத்தை இறக்கி வைத்தாயிற்று. இனி ஒரேயோர் ஆசைதான். ஊரில் ஒரு தேவாலயம் கட்டவேண்டும். அதற்கான இடத்தின் அனுமதி கிடைக்கத்தான் நாகம் பிள்ளையை அண்டி சேவகம் செய்வது. கோன்னோத்து பிள்ளையின் வீட்டில் திரி நனைக்க எண்ணெய் இல்லை. அதைக் கொடுப்பதில் தாமதப்படுத்திய ஔதையின் குடிசையைத் தீ வைத்துப் பொசுக்க வேண்டுமென்று அங்கிருந்த விவசாயி வந்து பயமுறுத்தினான். ஆனாலும் ஔதை அதைப் பொருட்படுத்தவில்லை. கோன்னோத்து எசமான் தன்னுடைய எசமானான நாகம்பிள்ளையின் சொல்லுக்கு அடங்கியவர் என்ற தைரியம்தான் ஔதைக்கு.

***

மங்கலச்சேரி இரவிப்பிள்ளை தன் பெயரில் புதிதாக ஆயிரம் மரக்கால் கரிசல் நிலத்தையும் சேர்த்து எழுதிக் கொண்டுவிட்டார். நாகம்பிள்ளைதான் அதற்கு உதவியாக இருந்தார். மங்கலச் சேரிக்காரருக்கு ஏற்கெனவே எவ்வளவு நிலம் இருந்தாலும் இன்னும் போதுமென்று தோன்றவில்லை. காரணம், அந்தக்

குடும்பத்தில் வாரிசுதாரர்கள் ஏராளமாக உண்டு. அவர்களில் எவருக்கும் வேலை செய்யாமல் சும்மா இருக்க முடியாது. இன்றுவரை விவசாயம் நடக்காத சதுப்பு நிலத்தில், காடு அழித்துச் சமன்படுத்த அவர்களுக்குச் சில தினங்களே போதுமானதாக இருந்தது. மங்கலச் சேரியில் வாட்ட சாட்டமானவர்களும் தேவஸ்தானம் சார்ந்த பதினைந்து விவசாயப் புலையர்களும் சேர்ந்து அந்தக் கரிசல் நிலத்தை வரம்பிட்டு, வேலியிட்டு உழுது விதைப்புக்கு ஆயத்தப்படுத்தினார்கள். இரவிப்பிள்ளை அந்த நிலத்திற்கு மங்கலச்சேரி கரிசல் என்று பெயரும் வைத்தார்.

மங்கலச்சேரிக்காரர்கள் நாயர் ஜாதியைவிடச் சற்றே தாழ்ந்தவர்கள். அங்கு பிராமணர்களுடன் சம்பந்தம் கிடையாது. அங்கு பெண்களின் எண்ணிக்கையும் அதிகரித்துக் கொண் டிருந்தது. ஆணும் பெண்ணும் பிள்ளைகளுமாக எத்தனைபேர் குடும்பத்தில் இருக்கிறார்கள் என்பதை அவர்களுக்கெல்லாம் செலவுக்குக் கொடுக்கும் காரணவர்கூட அறிந்திருக்கவில்லை. அந்த அளவுக்குப் பெற்றுப் பெருகினார்கள். இப்போது அங்கே பிரதானமாக இரண்டு தாய்வழிப் பரம்பரைகள் உண்டு. ஒன்று, இப்போதையக் காரணவரான இரவிப்பிள்ளையின் தாய்வழி. மற்றொன்று, இரவிப்பிள்ளையின் பாட்டியினுடைய தங்கை மகளின் மகன் மாதுபிள்ளைதான் அடுத்த காரணவர். இரவிப் பிள்ளையின் தாய்வழி வந்த இருபத்தாறு பேரும், மாதுபிள்ளையின் தாய்வழிக்காரர்களான முப்பதுபேரும், மாதுபிள்ளையின் தாய்வழிக்காரர்களான முப்பதுபேரும் குடும்பத்தில் ஒன்றாகவே சேர்ந்து இருந்து வந்தார்கள். அவர்களில் பலரைக் காரணவர்க்குத் தனித்தனியே அடையாளம்கூடத் தெரியாது. ஆனாலும் எல்லோருக்கும் மாதாமாதம் செலவுக்குத் தேவைப்படுகின்ற நெல்லளப்பது அந்தக் குடும்பத்தில் காரணவர்தான்.

இரவிப்பிள்ளையின் மனைவி கொச்சுஞ்ஞியம்மை. அவள் வாய்ப்பரச்சேரியில் இருந்தவள். மங்கலச்சேரி குடும்பத்தில் காரணவரின் மனைவிக்குக் குடும்பத்தில் பிரத்தியேக மரியாதை உண்டு. பெரியம்மா என்று மரியாதையுடன் அழைக்கப்பட்டாள். பரம்பரை பரம்பரையாக மங்கலச் சேரியில் பெரியம்மாக்களாக இருந்தவர்கள் வாய்ப்பரச்சேரிக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் எல்லோருமே நல்லவர்களாக இருந்தார்கள். வேறு குடும்பங்களிலிருந்து வந்து சேர்ந்த பெண்மணிகள் பெரியம்மாக் களாக இருந்த காலங்களில் மங்கலசேரிப் பெண்கள் கண்ணீரும் கம்பலையுமாக இருந்தார்கள்.

குஞ்ஞாண்டப்பிள்ளை மாமாவின் காலத்தில் பச்சாளத்து கோதை பெரியம்மாவாக இருந்தாள். பெரியம்மா என்ற பொறுப்பதிகாரத்தை வைத்தே அவள் தன்னுடைய பிறந்த குடும்பத்திற்குச் சொத்து சம்பாதித்துவிட்டாள். மங்கலச் சேரிப் பெண்களை அவள் கண்ணீரில் ஆழ்த்தினாள். அவளுடைய தலையணை மந்திரம் கேட்டுப் பெரியமாமா மாதக்கணக்கில் குடும்பச் செலவுக்கு எதுவும் கொடுப்பதில்லை. பெண்கள் பட்டினியால் சுருண்டு போனார்கள். வலியமாணி பாட்டி துன்பம் பொறுக்க மாட்டாமல் பெரியம்மாவின் முகத்திற்கு நேராகவே சொன்னாள். ஆம்பிளே போய்ச்சேரட்டும், பார்த்துக்கிடலாம், நீங்களெல்லாம் அனுபவிக்கத்தான் போறீங்க. குஞ்ஞாண்டப் பிள்ளை மாமா இறந்து காரியங்கள் முடிந்த மறுநாள் பச்சாளத்து கோதை பிறந்த வீட்டிற்குப் போனாள். போய்த்தான் தீரவேண்டும். கணவன் இறந்துவிட்டால் அதற்குப் பிறகு மனைவிக்குக் கணவன் வீட்டில் இடம் கிடையாது. சொந்தக் குடும்பத்தில் அவள் பட்டினி கிடந்தாள். பல ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு சமயம் அவள் மங்கலச் சேரிக்கு வந்தாள். முன்பு தங்களை மிகவும் வாட்டி வதைத்தவள் என்றபோதிலும் தங்களுடைய பழைய பெரியம்மா பட்டினி கிடக்கும் நிலைமையைக் கண்டு மங்கலச்சேரிப் பெண்களின் மனம் கலங்கியது. வலியமாணி பாட்டி அன்றையக் காரணவரிடம் எடுத்துச்சொல்லி, பெரியம்மாவுக்கு வருடாவருடம் செலவுக்குக் கொடுக்கும்படித் தேவையான ஏற்பாடுகளைச் செய்தாள். பெரியம்மாக்கள் தொடர்பான இந்த மாதிரியான கதைகள் நூற்றுக்கணக்கில் உண்டு.

என்றென்றும் குடும்பத்தில் பெண்மணிகளின் தேவைகளைக் காரணவர்களுக்குத் தெரியப்படுத்தி நிறைவேற்றி வைக்க வேண்டியது பெரியம்மாக்களின் பொறுப்பாக இருந்தது. கொச்சுகுஞ்ஞியம்மைக்கு அதையெல்லாம் சரிபார்த்துச் செய்யும் பழக்கம் உண்டு. இதற்கிடையே குடும்பத்தின் சந்தோஷத்திற்குத் தேவைப்படும் ஒருவிஷயத்தைச் சொல்லி இரவிப்பிள்ளையைத் தொந்திரவு செய்தாள். மங்கலச் சேரியில் பதினொன்று பெண் பிள்ளைகளின் கல்யாணங்களை நடத்திவைக்க வேண்டும். அவர் களில் மூத்தவளுக்கு வயது பதினைந்து ஆகிவிட்டது. இதற்கு மேல் தாமதித்தால் குடும்பத்திற்குத்தான் மானக்கேடு. ஆனால் இரவிப்பிள்ளை ஒரு பெரிய காரியத்தில் ஏற்கெனவே இறங்கியிருக் கிறார் அல்லவா! புதிய கரிசல் காட்டில் விவசாயம் செய்தாக வேண்டும். அதிகச் செலவு பிடிக்கும் காரியம் இது. அறுவடை

முடித்ததும் கல்யாணத்தை ஆடம்பரமாகச் செய்துவிடலாம் என்ற இரவிப்பிள்ளையின் அபிப்பிராயத்துடன் கொச்சுஞ்ஞியம்மை ஒத்துப்போகவில்லை. குடும்பத்தில் பெண்கள் சார்பில் அவள் வாதிட்டாள். கடைசியில், பெண்களின் கல்யாணத்தை உடனே நடத்தி முடிக்க இரவிப்பிள்ளை சம்மதித்தார்.

தம்பி முறைக்காரன் மாதுபிள்ளை அதற்கு ஒப்புக்கொள்ள வில்லை. அறுவடை முடிந்து விளைச்சல் எடுத்த பின்பு கல்யாணத்தை வைத்துக்கொண்டால் போதும் என்று அவன் அண்ணனிடம் சொன்னான். இரவிப்பிள்ளைக்கு முதலில் அதுதான் எண்ணமாக இருந்தது அல்லவா. கொச்சுஞ்ஞியம்மை தான் அந்த எண்ணத்தை மாற்றினாள். அது மட்டுமல்ல, குடும்பத்தின் இப்போதைய நிலைமையும் அப்படித்தான் இருந்தது. நான் முடிவு பண்ணிட்டேன். கல்யாணத்தை உடனே முடிச் சாகணும்னு. பதினோரு பொட்டைப்பிள்ளைங்க குடும்பத்திலே இருக்கு. பெண்ணை நிறுத்தி வச்சிருந்தா தப்பு நடந்துபோகும். இரவிப்பிள்ளை தீர்மானித்துவிட்டார். ஆனால் மாதுபிள்ளை விடுவதாக இல்லை. பெரிய குடும்பம். ஆறு சமூகத் தலைவர்களை அழைத்து விரைவில் கல்யாணம் நடத்த முடிவாயிற்று. அதிகச் செலவாகும். மங்கலச்சேரி கரிசல் நிலத்தை விவசாயத்திற்குச் சரிப்படுத்தி ஏற்பாடு செய்ததில் குடும்பம் பெருங்கடனில் ஆழ்ந்தது. இதற்கு மேலும் மங்கொம்பில் சுவாமியிடமிருந்து எவ்வளவு கடன் வாங்கினால் இந்த இரண்டு காரியங்களையும் சேர்த்துச் செய்ய முடியும்? அறுவடைக்குப் பிறகு கல்யாணத்தை வைத்துக் கொள்ளலாமென்று மாதுபிள்ளை மறுபடியும் வற்புறுத்தினான். காரணவர்க்கு எதிரில் நின்று வாதிடவும் கணக்குப் பார்க்கவும் மாதுபிள்ளைக்குத் தைரியம் வந்தது அவனுடைய மனைவியின் தலையணை மந்திரத்தின் சக்தியினால்தான். மாதுபிள்ளையின் மனைவி கொச்சுமாணியம்மைக்கு அந்தப் பெரியம்மாவின் அதிகாரத்தைக் கொஞ்சம் இறக்கிக் காட்டவேண்டுமென்ற நோக்கம் உண்டு. பெரியம்மாவுக்கு மங்கலச்சேரிப் பெண்களிடம் பிடிப்பு உண்டு. அவர்களுக்கும் பெரியம்மாவைப் பிடிக்கும். அவர் களுடைய கணிப்பில் கொச்சுமாணியம்மை ஒரு பொறாமைக்காரி. பெரியம்மா சொல்படி நடத்த நிச்சயித்திருக்கும் கல்யாணத்தை நிறுத்திக் காண்பிக்க வேண்டும். அதைத்தான் அவள் தன்னுடைய கணவன் மூலமாக நிறைவேற்ற முயன்று கொண்டிருந்தாள்.

இரவிப்பிள்ளை செலவை எண்ணிப் பின்வாங்கவில்லை. விவசாயச் செலவுக்கு தேவைப்படுவதான நெல்லை மங்கொம்பில்

சுவாமியிடமிருந்து கடன் வாங்கினார். மங்கலச்சேரி கரிசல் காட்டில் விதைப்பு நடத்தியதும் கல்யாணத்திற்கான பந்தல்கால் நட்டதும் ஒரே நாளாக இருந்தது. பந்தல்கால் நட்ட நிகழ்ச்சியில் கொச்சுமாணியம்மை கலந்து கொள்ளவில்லை. காரணவர்க்கும் மாதுபிள்ளையின் தாய் வழிக்காரர்களுக்கும் இடையேயான ஒரு விரிசலின் தொடக்கமாக அது இருந்தது.

மங்கலச்சேரியின் புதிய கரிசல் நிலத்தில் நான்கு நாட்கள் கழித்து நிலம் முழுக்க ஒரு மங்கல் தன்மை. கரிசல் நிலம் என்பதால் ஒரு புளிப்புத்தன்மை. அந்த இடம் முன்னொரு காலத்தில் பெரிய காடாக இருந்தது. காட்டுத் தீயில் அந்தக் காடு அழிந்து போயிற்று என்பது ஐதீகம். பாதி வெந்த நிலையில் பெரிய பெரிய மரங்கள் மண்ணின் அடியில் புதைந்தன. நெற்பயிர் மூழ்கும் அளவுக்கு வயல் முழுக்கத் தண்ணீர் பாய்ச்சி ஊறவைத்தால் புளிப்பு மாறிவிடும் என்பது தலைமைப் புலையனின் கருத்து. ஆனால் ஆயிரம் மரக்கால் நிலத்தில் தண்ணீர் இறைத்துத் தேக்கி வைக்கப் பெரிய உருளைகள் கொண்டு இரவும் பகலுமாக நின்றபடி மிதிக்க வேண்டும். பெரும் செலவாகும். ஆனாலும் செய்துதான் தீர வேண்டும். மங்கலச் சேரியிலிருந்த எந்த முரட்டு ஆளும் உருளை உருட்ட வரவில்லை. காரணம், மாதுபிள்ளையின் தாய்வழிக்காரர் களெல்லாம் மங்கலச் சேரியிலுள்ள மற்ற வயல்களுக்கு வேலைக் காகப் போய்விட்டார்கள். இறைத்த தண்ணீர் தானாக வற்ற வேண்டியதுதான். ஆறு வார் உருளைகள் இயக்கி மிதிக்க ஆளில்லாமல் நெற்பயிரெல்லாம் வேர் அழுகிச் சாய்ந்தன. கன்னி மண்ணில் பொன்விளைவிக்க வேண்டுமென்று இரவிப்பிள்ளை கணக்குப் போட்டிருந்தார். ஆனால் அந்த கரிசல் மண்ணுக்கு நிறைகுணம் இல்லை. காட்டுத் தீ காய்ந்த இடம். அது மட்டு மல்லாமல் மாதுபிள்ளையின் தாய்வழிக்காரர்களின் உதவியும் இல்லாமல் போய்விட்டது. இரவிப்பிள்ளையின் மனம் பற்றியெரிந்தது.

இதற்கிடையே நடப்பதான கல்யாணம் அந்தக் குடும்பத்தின் உறவுப் பிணைப்பைத் தகர்த்தெறிந்தது. இரவிப்பிள்ளைக்கு ஓர் அண்ணன் உண்டு, பப்பும்மாவன். வயதுப்படிக் காரணவராக இருக்க வேண்டியவர் பப்பும்மாவன்தான். ஆனால் அவருக்கு அதற்கான தகுதி இல்லை. அசடும் திக்குவாயனும் ஒழுகுவாயனு மான பப்பும்மாவன் எப்படிக் காரணவராக இருக்க முடியும்? அவர் கல்யாணம் முடித்தது, ஓர் ஏழைக் குடும்பத்து பெண் மணியை—சாணகத்தரை கொச்சுகோதை, பப்பும்மாவனும்

மனைவியின் வீட்டில்தான் தங்கியிருந்தார். மாதாமாதம் அவருடைய செலவுக்கான நெல்லைச் சாணகத்தரை குடும்பத்து வீட்டிற்கு இரவிப் பிள்ளை நேரில் போய்க் கொடுத்துவிட்டு வருவார். பப்பும்மாவின் குடும்பத்துக் காரியங்கள் எதிலும் தலையிடமாட்டார்.

ஆனால் நடக்க இருக்கும் கல்யாணத்தில் எந்தப் பெரியம்மா முன்னின்று அலங்காரங்கள் செய்வது? எல்லோருக்கும் மூத்த மாமாவின் மனைவி என்ற முறையில் கொச்சுகோதை அக்காதான் பெரியம்மாவாக முன்னின்று நடத்த வேண்டுமென்று கொச்சு மாணி சொன்னாள். கொச்சுஞ்ஞியம்மையை ஒரேயடியாய்க் கீழிறக்கக் கொச்சுமாணி தொடுத்த தந்திரம் இது. மாது பிள்ளைக்கும் மனைவியின் எண்ணம் புரிந்தது. அவளுடைய குடும்பத்தைச் சேர்ந்த ஆண்களும் பெண்களும் அந்தப் பக்கமாகச் சேர்ந்தார்கள். இரவிப் பிள்ளையின் தாய்வழிக்காரர்கள் அதை எதிர்த்தார்கள். இரவிப்பிள்ளைதான் செலவுக்குத் தருகிறார். படியளக்கிறவர்தான் பொறுப்பான மாமா. அதனால் கல்யா ணத்தில் பெரியம்மா என்கிற முதல் மரியாதை ஸ்தானம் அவருடைய மனைவியான கொச்சுஞ்ஞியம்மைக்குத்தான். இந்த வாக்குவாதம் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. குடும்பத்தில் பெண்கள் இரண்டு பக்கமாகப் பிரிந்தார்கள். பேச்சு முற்றியது. கொச்சுமாணிக்கு உற்சாகமாயிற்று. அவள் சாணகத்தரைக்குச் சென்று கொச்சுகோதை அக்காவைப் பார்த்து, பெரியம்மா பொறுப்பை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று வற்புறுத்தினாள். ஆனால் அது பெரும் செலவு பிடிக்கும் விஷயம். பெரியம்மா அலங்காரத்திற்கு வெறும் கையோடு போக முடியாது. ஆறு செப்புத் தாம்பாளம் நிறைய நெய்யப்பம் கொண்டுபோக வேண்டும். அதை எங்கிருந்து செய்வது? இரவிப்பிள்ளை மாதாமாதம் கொடுக்கும் பதினைந்து மரக்கால் நெல்லைக் கொண்டுதான் பப்பும்மாவனும் மனைவியும் கஞ்சி குடித்துக் கொண்டிருக்கிறார்கள். நெய்யப்பம் செய்வதற்கான செலவைக் கொச்சுமாணி ஏற்றுக் கொண்டாள்.

என்னவானாலும் சரி, சாணகத்தரை கொச்சு கோதையைப் பெரியம்மாவாக ஆக்கித் தீரவேண்டும். கொச்சுமாணி மீண்டும் மீண்டும் வற்புறுத்தினாள். கடைசியில் கொச்சுகோதை சம்மதித் தாள். ஆனால் இரவியை எதிர்க்கப் பப்பும்மாவன் தயாரில்லை. இரவியைப் பகைத்துக் கொண்டால் கஞ்சி குடிப்பது தடைப்படும் என்கிற விஷயம் பப்பும்மாவனுக்குத் தெரியும். அதை நினைவுப்படுத்தியபோது கொச்சுகோதையும் பெரியம்மா பொறுப்

பேற்கும் ஆசையைத் தவிர்த்தாள். கொகச்சுஞ்ஞியம்மையைக் கீழிறக்கக் கொச்சமாணியம்மை போட்ட திட்டம் இவ்வாறாகப் பலிக்காமல் போயிற்று.

கடைசியில் பெரியம்மா பொறுப்பேற்றது கொச்சுஞ்ஞியம்மை தான். முதல் மரியாதைக்குரிய மூத்த பெரியம்மா. அதற்கடுத்து சாணகத்தரை கொச்சு கோதை. கொச்சுமாணிக்கு மூன்றாவது இடம் என்றாயிற்று. எல்லாச் சடங்குகளிலும் பெரியம்மாவுடன் சிலுக்கிக்கிட்டுச் சண்டை போட்டாள் கொச்சுமாணி. பெரியம்மாக்கள் தயாரித்துக்கொண்டு வரவேண்டிய பலகாரங்கள் விஷயத்திலும் மற்றவற்றிலும் கொச்சுஞ்ஞியம்மை கொண்டு வந்ததைவிட இரண்டு மடங்கு அதிகமாகக் கொச்சமாணி கொண்டுவந்தாள். அதைப்போலவே பல தடவை தரத்தில் தோற்றது கொச்சுஞ்ஞியம்மை.

கல்யாணம் நல்லபடியாக நடந்து முடிந்தது. ஆனால் இரவிப்பிள்ளைத் தாய்வழிக்காரர்களுக்கும் மாது பிள்ளைத் தாய்வழிக்காரர்களுக்கும் இடையே விரிசல் ஏற்பட்டு இருசாராரும் பிரிந்தார்கள். மாதுபிள்ளையின் மனைவி கொச்சமாணியம்மை ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களை இரண்டு பிரிவாகப் பிரித்து விட்டாள் என்று சொல்வதே சரி. புதிய கரிசல் நிலத்தைச் சுற்றி வேலிபோட்டு விவசாயம் செய்த வகையில் குடும்பத்திற்கு ஏற்பட்ட நஷ்டத்தைப் பற்றிக் காரணவரிடம் கணக்குக் கேட்கும் தைரியம் மாதுபிள்ளைக்கு வந்து சேர்ந்தது. அன்றுவரை நடக்காதது அது. குடும்பம் சிதைந்து போவதற்கான அடையாளங்கள் கண்டு இரவிப்பிள்ளையின் மனம் எரிச்சலடைந்தது. இதற்கிடையே மாதுபிள்ளையைச் சார்ந்தவர்களுக்கு ஓர் ஆசை—அவர்களுக்கு வேறொரு சமூகக்கிளையாக மாறி வாழ வேண்டும். அப்படி ஆகி விட்டால் மங்கலச்சேரிப் பெரியம்மாவாக ஆவதான கொச்சு மாணியுடைய ஆசையும் நிறைவேறும். இரவிப்பிள்ளை ஒருவார காலத்திற்குள் ஊறுகாயிட்ட மாவடுபோலத் தளர்ந்து சுருங்கிப் போனார்; படுக்கையில் விழுந்தார்.

***

க்லாசிப்பேருடைய மனைவி குஞ்ஞுலட்சுமியம்மை கர்ப்பமானாள். ஒரு குஞ்சுகுழுவானைப் பார்க்க முடியுமென்று எதிர்பார்க்க வில்லை. அதனால் க்லாசிப்பேருடைய இருப்பிடமான எருமத்ர

மடத்தில் தினமும் புண்ணிய காரியங்கள்தான். பகவதி சேவை, கணபதி ஹோமம், பிராமணர்களுக்குக் கால்கழுவி நீராட்டு— இப்படிப்பல. ரொம்பவும் எச்சரிக்கையான கர்ப்ப சிஷ்ருஷையும் நடந்தது. பெண்குழந்தையாக இருக்கவேண்டும் என்பது குஞ்ஞு லட்சுமியின் ஆசை. கொச்சுபிள்ளைக்கு ஆண்குழந்தை வேண்டும். அவருக்குக் கோடாந்த்ரயில் ஒரு பெண் குழந்தை உண்டென்பது தான் அதற்குக்காரணம். குஞ்ஞுலட்சுமி ஒரு மகனைப் பெற்றெடுத்தால் கொச்சுப்பிள்ளைக்கு ஒரு மகள், ஒரு மகன் என்ற கணக்கு வரும். அந்தக் குழந்தை யாரைப்போல இருக்க வேண்டும்? ஆணானாலும் பெண்ணானாலும் அது குஞ்ஞுலட்சுமியைப் போல் இருக்கவேண்டும் என்று கொச்சுப்பிள்ளை ஆசைப்பட வழியில்லை. அந்தக் கரும்பூதத்தைக் கொச்சுப்பிள்ளை ரொம்பவும் விரும்பிக் கல்யாணம் பண்ணிக்கொள்ளவில்லை.

சீலாந்திப் பிள்ளியில் கல்யாணியம்மைக்கு ஒரு தனிப்பட்ட பொறுப்பு வந்து சேர்ந்தது. கல்யாணியம்மை அந்த ஊரில் கெட்டிக்கார மருத்துவச்சி. குஞ்ஞுலட்சுமியை எண்ணெயும் களிம்பும் கொண்டு தேய்த்துக் குளிப்பாட்ட வேண்டும். கிழக்கு வெளுக்கும் முன்பாகவே கல்யாணியம்மை எருமத்ரமடம் வந்து விடுவாள். கொச்சுப்பிள்ளை அதிகாலையிலேயே விழித்தெழுந்து வாசலில் நிலைப்படியில் வந்து நிற்பார். யாரையோ எதிர்பார்த்துக் கொண்டிருப்பதுபோல. தாமதமாகிவிட்டால் அவசர அவசரமாக வந்து சேர்வாள். ஓட்ட ஓட்டமாக வந்து நிற்பாள் கொச்சுப் பிள்ளையின் எதிரில். திகைத்துப்போன மான்குட்டியைப்போல அவள் வடக்குப்பக்கமாகப் பாய்ந்து செல்வாள். சுற்றுச் சூழலில் கஸ்தூரி மணம் கமழும். அவளை தன் வசமாக்க அந்த கந்தர்வன் துடித்தார். கல்யாணியம்மையின் மனதிலும் கொச்சுப்பிள்ளை ஒரு மன்மதன் ஆனார். அவளுடைய வருகை அதிகாலை என்றானது. ஒரு நாள் விடிவெள்ளியின் பிரகாசத்தில், கைத்தண்டில் தளர்ந்து விழுந்த காதலியிடம் அவர் சொன்னார். நான் உனக்குத் தாலி கட்டிரட்டுமா? அவள் அதற்குப் பதில் எதுவும் கூறவில்லை.

குஞ்ஞுலட்சுமியம்மைக்கு உடம்பு முழுக்க நீர்க்கோப்பு; அதனால் வீக்கம். மூச்சுமுட்டலும் சேர்ந்து கொண்டது. நிறையப் பேருக்குப் பிரசவம் பார்த்தவள் இந்தக் கல்யாணியம்மை. அந்தப் பணிவிடைகளுக்கிடையிலும் அவள் மற்றொரு வேலையை முடிக்கும் நெருக்கடியில் இருந்தாள். கீதகோவிந்தத்தின் பனையோலைச் சுவடி எழுத்தைப் பிரதியெடுக்கும் வேலை. சீலாந்திப்பிள்ளியில் கிரந்தச் சாவடியிலிருந்து இரண்டுநாள்

மெனக்கிட்டுத் தேடி எடுத்ததை எழுதத் தொடங்கியிருந்தாள். எல்லா ஓலைகளிலும் ராதாவின் படத்தையும் கிருஷ்ணனின் படத்தையும் எழுத்தாணி கொண்டு வரைந்தாள். இவ்வளவு அழகான பிரதியெடுப்பு யாருக்காகத் தயாராகிறது? முன்பு ஒரு சமஸ்கிருதப் பண்டிதன் அவளைத் திருமணம் செய்துகொண்டான். அவன் எங்கோ போய்விட்டான். போனபோது அவள் பிரதி யெடுத்த கிரந்தத்தை மறக்காமல் தன்னுடன் எடுத்துச் சென்றிருப்பானோ? தெரியவில்லை. கிரந்தங்களைப் படியெடுத்துக் கொடுக்கும்போது கல்யாணியம்மை எவரிடமும் கூலி பேசிய தில்லை. அது சீலாந்திப் பிள்ளிப் பெண்களின் குலத்தொழில். சில நாட்களாக அவளை யாரும் கிரந்தம் பிரதியெடுக்கச் சொல்லவில்லை. இப்போது அவள் படியெடுப்பது யாருக்காக?

குஞ்ஞுலட்சுமியம்மைக்கு மாதம் முடிவதற்குள்ளாகவே பிரசவவேதனை எடுத்தது. கடும் வேதனையாக இருந்தது. வைத்தியரும் ஊரில்தான் இருந்தார். நள்ளிரவு. ஒரு நட்சத்திரம்கூட இல்லை. வைத்தியர் ஒரு பச்சிலைச் சாறுபோலக் கொடுத்து களிம்பு போலத் தேய்க்கச் சொன்னார். அப்படியிருந்தும் பிரசவம் ஆகவில்லை. கர்ப்பிணி வேதனையினால் புரண்டு புரண்டு நெளிந்தாள். கல்யாணியம்மை வயிற்றைத் தடவிப் பார்த்தாள். சிசு வயிற்றில் அசையவே இல்லை. வெந்நீர் வைத்துத் தடவிய போது சிசு அசைந்து கொடுத்தது. பனிக்குடம் உடைந்தது. கெட்டிக்கார மருத்துவச்சி வயிற்றை மறுபடியும் தடவிக் கொடுத்தாள். ஒரு பெண்ணின் ஜீவித அபிலாஷை மனித உருக் கொண்டு பூமி நோக்கி வருகிறது. ஆனால் அது ஓர் அசிங்கமான அருவருக்கத்தக்க உருவத்தில் இருந்தது. ஒரு ரத்தக்குவியல். மேற்பக்கம் கூர்மையான தலை. மூடிய கண்கள். தொப்பூழ்க் கொடியைத் துண்டித்துக் குழந்தையைத் தனியே எடுத்தாள். அதற்கு உயிரில்லை. 'ஏன் என் குழந்தை அழவில்லை?" என்று ஈனக்குரலில் தாய் கேட்டாள். அப்போது கல்யாணியம்மைக்கு வயிற்றில் ஒரு சலனம் தட்டுப்பட்டது. ஏதோ அசைகிறது.

ஊரைக் கசக்கிப் பிழிந்து பணத்தை வாரிச் சேர்த்தற்கான தண்டனைதான் குஞ்ஞுலட்சுமிக்குக் கிடைத்தது என்பதாகப் பெண்களெல்லாம பேசிக் கொண்டார்கள். அதிகம் தாமதிக்காமல் நில அளவை வேலைகளை முடித்துக்கொண்டு க்லாசிப்பேர் கொச்சுப்பிள்ளையும் குடும்பமும் அந்தக் கிராமத்திலிருந்து திரும்பிப் போனார்கள்.

***

பொதுவாக அந்த வருடம் விவசாயம் நன்றாகவே இருந்தது. ஊரெல்லாம் ஒரு திருப்தி நிறைந்திருந்தது. தேவஸ்தானத்தில் எல்லா அறைகளிலும் நெல்நிறைந்தது. நெல் சேமிக்க இடம் போத வில்லை. நடப்பு ஆண்டு தேவஸ்தானச் செலவுக்கும் விவசாயச் செலவுக்கும் போக மிஞ்சியிருக்கும் நெல்லை விற்றால் ஒரு யானையை வாங்கலாம் என்ற எண்ணம் தலைதூக்கியது. தங்கக் குடை வாங்கினால்போதும் என்ற கருத்து சிலருக்கு இருந்தது. யானை வேண்டுமா? அல்லது தங்கக் குடை வேண்டுமா? ஊருக்குள் பெரிய விவாதம் எழுந்தது. வேலுச்சோவனின் கள்ளுக் கடையில் இதைக்கொண்டு வாய்ச்சண்டையும் அடிதடியும் நடந்தன. தேவஸ்தானத்தில் துப்புரவுக்காரிகளின் வாய்ச்சண்டை முற்றிப் பரஸ்பரம் ஏச்சுப் பேச்சுக்களாயிற்று. ஒவ்வொருவருடைய கள்ளத் தொடர்புக் கதைகள் வெளிப்பட்டு அரங்கேறின.

கோயிலில் முதல்தேதிக் கூட்டத்தின் ஆலோசனை விஷயமும் யானை வேண்டுமா, தங்கக் குடை வேண்டுமா என்பதுதான். முதல்தேதிக்கூட்டத்தில் மற்றொரு விஷயத்தையும் தீர்மானிக்க வேண்டியிருந்தது. வேழப்ர குடும்பத்தாரை சமூகத்திலிருந்து ஒதுக்கி வைத்து ஒருவருடம் முடிவடைகிறது. ஒரு முதல் தேதிக் கூட்டத்தின்போது சமூகத்தவர்கள் எல்லோருக்கும் பூஜைக்குப் பின் விருந்தளிப்பதற்காகத் தயாரித்த ஸர்வாணிச் சோற்றை வேழப்ர காரணவர் தொட்டு அசுத்தப்படுத்தினார். வேழப்ர குடும்பத் தார்கள் ராஜாக்களுக்குப் பல்லக்குத் தூக்கும் பள்ளிச்சான்மார்கள். நாயர்களாக இருந்தாலும்கூட, அவர்களை சமூகத்தவர்கள் தீண்ட மாட்டார்கள். ஸர்வாணிச் சோறு தொட்டு அசுத்தப்படுத்திய வேழப்ர காரணவரின் தான்தோன்றித் தனத்திற்கு தண்டனை கொடுத்தார்கள். வேழப்ர குடும்பத்தாரை சமூகத்திலிருந்து ஒதுக்கி வைத்தார்கள். ஒதுக்கிவைத்த குடும்பத்தில் சாவு நடந்தாலும்கூட ஊர்க்காரர்கள் எவரும் போவதில்லை. எவரும் அவர்களுடன் பேசுவதுகூட இல்லை. கடுமையான தண்டனைதான். இப்போது ஒரு வருடம் முடிந்துவிட்டது. இனி அதைத்தள்ளுபடி செய்யத் தீர்மானம் கொண்டுவர வேண்டும். அதற்கான பிராயச்சித்தம் நிச்சயிக்க வேண்டியது ஊரில் அதிகம் படித்த, எல்லோருக்கும் குருநாதரான சீலாந்திப்பிள்ளை பரமு வாத்தியார்தான். தடங்க லில்லாமல் தினமும் ஒரு பிராமணனுக்குக் கோயிலில் மத்தியானச் சாப்பாடு கொடுக்கத் தேவையான நெல் வரியாகக் கிடைக்கும் அளவில், இருபது மரக்கால் நிலத்தை தேவஸ்தானத்திற்குக் குத்தகையாக விடவேண்டும் என்று பரமுபிள்ளை வாத்தியார்

பிராயச்சித்தம் விதித்தார். வேழப்ர காரணவர் அதற்குச் சம்மதித்தார். அத்துடன் ஊர்க்கட்டுப்பாட்டிலிருந்து விடுபட்டார்.

கோடாந்த்ரப் பெரியவர்கள் சமூக முதல்தேதிக் கூட்டம் இவ்வாறாக முடிந்ததென்றால், சீரட்டக்கைமளுடைய சமூகத்தவர் களுடைய யானை வேண்டுமா அல்லது தங்கக் குடைவேண்டுமா என்ற தர்க்கத்தில் ஒருவருக்கொருவர் வேறுபட்டு நின்றார்கள். சிலர் தேவஸ்தானத்தின் வரவுசெலவுக் கணக்குக் கேட்டார்கள். மங்கலச்சேரியில் மாதுபிள்ளைதான் முதலில் சமூகத் தலைவரிடம் இப்படிக் கணக்குக் கேட்டவர். கோன்னோத்துப்பிள்ளையின் சமூகத்திலும் சில தர்க்கங்கள் இடம் பெற்றன. தேவஸ்தானத்து நிர்வாகத்தில் ஊரார் தலையிட உரிமையில்லை என்பது சீரட்டக் கைமள், கோன்னோத்துப்பிள்ளை ஆகியோரின் அபிப்பிராயம். தேவஸ்தானத்துக் காரியங்கள் சமூகத்தலைவர்கள் தீர்மானிப்பது போல நடந்தால் போதும் என்ற அவர்களுடைய அபிப்பிராயத்தில் மற்றொரு சமூகத்தின் தலைவரான கோடாந்த்ர மூத்தாசானுக்கு உடன்பாடில்லை. கணக்குகளை அவர்களுக்குத் தெரியப்படுத்து வதில் என்ன தவறு? முடிந்தால் யானையும் வாங்க வேண்டும், தங்கக் குடையும் வாங்க வேண்டும். அப்படி ஊராருக்குக் கீழ்ப் படிய சீரட்டக்கைமள் தயாராக இல்லை. சமூகத் தலைவர்களைக் கணக்குக் கேட்பதற்கும், அவர்களுக்கு உபதேசிப்பதற்கும் ஊரார்க்கு என்ன உரிமை என்பதுதான் கைமளுடைய கேள்வி. ஆனால் அது நடந்தது. மங்கலச்சேரி மாதுபிள்ளை குடும்பத்துக் காரணவரைக் கேட்பதைப்போல, சமூகத்தலைவர்களிடமும் கணக்குகளைக் கேட்டார். மாதுபிள்ளையின் பக்கம் சேர்வதற்கும் ஊர்க்காரர்கள் இருந்தார்கள். இது தேவஸ்தானத்தின் சரித்திரத்தில் நினைத்துக்கூட பார்த்திராத ஒரு திருப்புமுனையாக இருந்தது. ஒருவேளை, காலத்தின் மாறுதலாக இருக்கலாம்.

சீலாந்திப்பிள்ளில் ஆண்பெண் அனைவரும் எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள். அங்குள்ள பெண்களுக்கு இரண்டு வேலைகள். எல்லாக் காலத்திலும் ஒருத்தியாவது மருத்துவச்சியாக இருப்பாள். மற்றொன்று, ஓலைச்சுவடியைப் பிரதி எடுப்பது. அவர்கள் அதில் பரம்பரையாகக் கெட்டிக்காரர்கள். எந்தப் புராணத்தையும் அங்கே பிரதி எடுத்துக் கொள்ளலாம். விலை கொடுத்தும் வாங்கலாம். அது அவர்களுக்கு ஒரு வருமானம். அங்கிருந்த பெண்கள் வெளுத்த முண்டு உடுத்தி நடப்பார்கள். அவர்கள் அழகிகள். அவர்கள் வீட்டில் இருக்கும்போதுகூடத் தங்கநகை அணிந்திருப் பார்கள். பொட்டு வைத்திருப்பார்கள். அவர்களுடைய உதடு

சிவந்திருக்கும். கறுப்பு நிறம் அங்கு எவருக்கும் இல்லை. அவர்கள் நடக்கும்போது ஒரு வாசனை கமழும். ஆனால் அவர்கள் ஜாதியில் தாழ்ந்தவர்கள். அவர்களைத் தொட்டுப் பழகக் கணவன்மார்கள் இல்லை. அவர்களுக்கென்றால், எந்த வீட்டிற்குப் போனாலும் மரியாதைக்குரிய விருந்தாளிகளுக்குக் கொடுப்பது போல சாப்பிடக் கொடுப்பார்கள். ஊரில் தென்படும் இளவட்டங்களை யெல்லாம் கருப்பையிலிருந்து பூமிக்குக் கொண்டுவந்தவள் கல்யாணியம்மைதான். எல்லோருக்கும் அவள்தான் செவிலித்தாய். கல்யாணியம்மை பிரதியெடுக்கும் கிரந்தங்களுக்கு ஊரில் பிரத்தியேகப் பிரியம் உண்டு. எழுத்துக்கள் தெளிவாக மாதிரியான வடிவமைப்பில் இருக்கும் எழுத்துப் பிழையே இருக்காது.

சீலாந்திப்பிள்ளியில் தெற்குவீட்டில் பரம்பரையாகத் திரட்டிப் பாதுகாக்கப்பட்ட கிரந்தங்கள் உண்டு. வைத்தியம், சோதிடம், ஆராய்ச்சி, மந்திரம், தந்திரம் முதலிய எல்லா விஷயங் களையும் பற்றிய அதிகாரபூர்வ கிரந்தங்கள். பெரிய தர்க்கவாதி களும் வைத்தியர்களும் சோதிடர்களும் காவிய வல்லுநர்களும் பிறந்த குடும்பம் அது. பழங்காலம் முதலே ஊரில் உயர்ந்த படிப்பு என்பது சீலாந்திப்பிள்ளியில் குருமார்களிடம் படிப்பதுதான். இப்போதைய காரணவர் பரமு வாத்தியார் மகா கெட்டிக்காரர். ஊரில் எல்லோருக்கும் அவர்தான் குருநாதர். அவருக்கு மரியாதை செலுத்தும் தலைமுறைதான் இன்று ஊரில் இருக்கிறது. பரமு வாத்தியார் முன்பு ஆலப்புழையில் ஒரு மிளகுக் கிட்டங்கியில் கணக்குப் பிள்ளையாக இருந்தார். கிருஷ்ணன்கோவிந்தன் என்பவர் அவருக்கு மேலாளர். கிருஷ்ணன்கோவிந்தனின் மனைவி வார்யந்தற கொச்சிட்டூலியம்மை. அவளுக்கு நான்கு சகோதரர்கள் இருந்தார்கள். எல்லோரும் இணைந்து கூட்டுக்குடும்பமாக வார்யந் தறயில் குடியிருந்தார்கள். ஒரு சமயம் ஆலப்புழை வட்டாரத்தில் படர்ந்து பரவிய வைசூரிக்கு ஆட்பட்ட கொச்சிட்டூலியம்மையின் நான்கு சகோதரர்களும் கணவர் கிருஷ்ணன்கோவிந்தனும் இறந்து போனார்கள். அந்தப் பெண்மணி அநாதையானாள். அந்த ஊரில் அவளுக்கு நாதியில்லை. அவளுடைய பூர்வீகக் குடும்பம் அங்கிருந்து தொலைவில் மலபாரில் இருந்தது.

மலபாரில் கப்ளங்காட்டுமனையில் அண்டிப் பிழைக்கும் வர்க்கத்தைச் சேர்ந்த ஒரு நாயர் குடும்பத்தில் ஒரு கன்னிப் பெண்—அவளுடைய பெயர் கொச்சிட்டூரி. அவள் அந்த வீட்டிற்கு வந்த ஒரு தெற்கத்தி நம்பூதிரி வாலிபனின் மனதைக் கவர்ந்தாள். அவர்கள் காதலித்தார்கள். ஒரு சமயம் அவர்கள் சேந்தாற்போல்

ஒரே பாத்திரத்தில் சோறு சாப்பிட்டார்கள். ஒரு சூத்திரப்பெண் பிராமணத்துவத்தை நசிக்கச் செய்யும் காரியமாகும். இந்தப் பாவத் திற்குக் கடுமையான தண்டனை உண்டு. தன்னுடைய வீட்டாருக்கு இதனால் ஜாதிப்பிரஷ்டம் ஏற்படுவதைக் காண இயலாமல் கொச்சிட்டீரி தன் காதலன் உண்ணிநம்பூதிரியுடன் ஊரைவிட்டுப் போய்விட்டாள். அவர்கள் ஆலப்புழையிலுள்ள திருவாம்பாடிக்கு வந்து குடியேறினார்கள். அப்படி உண்டானதுதான் வார்யந்தற குடும்பம். அந்தக் குடும்பத்தில் எஞ்சியிருந்த சந்தானம்தான் கொச்சிட்டூலி. கணவர் கிருஷ்ணன்கோவிந்தன் அவளுக்குக் கண்கண்ட தெய்வமாக இருந்தார். அன்பின் பொக்கிஷமாக இருந் தார்கள் சகோதரர்கள். அவர்களெல்லாம் ஒன்று சேர்ந்தாற்போல் மரணமடைந்தபோது கொச்சிட்டூலி தனியாளானாள்.

அன்று வாலிபனாக இருந்த சீலாந்திப்பிள்ளி பரமு வாத்தியார் கொச்சிட்டூலியைத் தன்னுடைய ஊருக்கு அழைத்துச் சென்றார். தேவஸ்தானத்தைச் சேர்ந்த வயல் பகுதியில் ஒரு வீடு பார்த்து அங்கே குடியிருக்கச் செய்தார். பரமு வாத்தியார் அந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டார். பரமு வாத்தி யாருக்குக் கொச்சிட்டூலி மூலம் ஒரு மகள் பிறந்தாள். அந்த மகளுக்கும் கல்யாணம் செய்து முடித்து; அவளும் பிரசவித்தாள். செல்லப் பெண் குஞ்ஞுமாளுவின் மேல் பரமு வாத்தியாருக்கு உயிர்; குஞ்ஞுமாளுவுக்கோ தாத்தா என்றால் உயிர்.

திடீரென்று அந்தச் செய்தி ஊரில் பரவியது. பரமு வாத்தியார் காசிக்குப் போகிறார். ஒரு சிறு மூட்டையுடன் வாத்தியார் சீலாந்திப்பிள்ளியிலிருந்து புறப்பட்டார். திரும்பி வராத யாத்திரை, கடைசி முறையாகக் குடும்பத்தை ஒரு தடவை பார்த்து விட்டு வாத்தியார் நடந்தார். திடீரென்று இந்த முடிவெடுக்க ஏற்பட்டதற்கான காரணம்தான் என்னவாம்? முந்தின நாள் தன்னுடைய கிரந்த அறையில் வாத்தியார் சில சோதிட கிரந்தங் களைப் பார்த்துக் கொண்டிருந்தபோது சகோதரி கல்யாணியம்மை அவருக்கு எதிரில் போய் நின்றாள். சாதாரணமாக சகோதரி மார்கள் காரணவர்களின் எதிரில் போய் நிற்பதில்லை. அதனால் கல்யாணியம்மை கர்ப்பிணியான விவரம் வாத்தியாருக்கு அதுவரை தெரியாதிருந்தது. கணவனால் விலக்கிவைக்கப்பட்டு வாழ்ந்து கொண்டிருப்பவள் கர்ப்பம் தரித்திருக்கிறாள்! உப்பிய வயிற்றோடு கல்யாணியம்மையைப் பார்த்தபோது தன்மானக் காரரான பரமு வாத்தியார் கோபத்தில் தன்னை மறந்தார். பக்கத்திலிருந்த தடிக்கம்பை எடுத்துக்கொண்டு ஒரு காட்டுக்

கூச்சலுடன் அவர் சகோதரியின் முன்னே தாவிக் குதித்தார். முதலில் அடி வாங்கித் தாளமுடியாமல் அவள் பின்னால் தள்ளி நின்றாள். வாத்தியார் சம்ஹாரருத்ரனைப் போல இரண்டாவது தடவையும் எட்டி அடித்தார். கல்யாணியம்மைக்கு அதற்குப் பின்னால் தள்ளி நிற்க இடமில்லை. உயிருக்குப் பயந்த அவள் தன்னுடைய உப்பிய வயிற்றைச் சுற்றியிருந்த புடவையின் கட்டவிழ்த்துவிட்டாள். கர்ப்பிணிகள் தாறுபாய்ச்சிக் கட்டுவ தில்லை. வாத்தியார் பின்புறம் திரும்பிக்கொள்ள வேண்டிய தாயிற்று. தடிக்கம்பு கீழே விழுந்தது.

செய்தி காட்டுத்தீபோல் ஊர் முழுக்கப் பரவிற்று— பரமுவாத்தியார் காசிக்குப் போகிறார். அவரை ஒரு முடிவிலிருந்து பின்வாங்கச் செய்ய யாராலும் முடியாது. சீலாந்திப் பிள்ளி யிலிருந்து புறப்பட்ட வாத்தியார் கோயிலில் பஜனை மண்டபத்தில் போய் உட்கார்ந்தார். ஆறேழு நாட்கள் அங்கே பஜனை செய்தார். சகத்தலைவர்களும் சீடன்மாரும் ஆக எல்லோரும் வாத்தியாரிடம் வந்து வணங்கி தட்சிணை கொடுத்தார்கள். காசிக்குப் போக நிச்சயித்துவிட்டவரிடம் அவரைப் போகக்கூடாது என்று சொல்வது பாவம். மனைவி கொச்சிட்டூலிக்கு அவரை நேரில் பார்த்து யாத்திரைக்கு வழியனுப்பி வைக்கக்கூடச் சம்மதமில்லை. மகளுக்கும் பேத்திக்கும் ஆக யாருக்கும் அவரைத் தடுக்க உரிமையில்லை.

மாமாவை அவமானப்படுத்த வேண்டியல்ல, உயிர் மீதிருந்த ஆசையினால் தான் துணியை அவிழ்த்துவிட்டதாகக் கல்யாணி யம்மை சொன்னது உண்மைதான். ஆனால் யார் மூலமாக கர்ப்பம் தரித்தாள் என்பதை மட்டும் யார் கேட்டும் அவள் சொல்ல வில்லை. கேள்வி கேட்டவர்களுக்கெல்லாம் நான் ஒரு ஆம்பிளையைக் காதலிச்சேன் என்பது மட்டுமே அவளுடைய பதிலாக இருந்தது.

ஏழு நாட்கள் ஆன பின்னரும் வாத்தியார் ஏன் காசிக்குப் போகவில்லை என்று சிலர் கேட்கத் தொடங்கினார்கள். பரமு வாத்தியாரைக் குடைந்து கொண்டிருந்த ஒரு பெரிய விஷயம் எஞ்சியிருந்தது. குடும்பமோ மனைவியோ குழந்தைகளோ பற்றியதல்ல அது. சீலாந்திப்பிள்ளியில் பாதுகாக்கப்பட்டுள்ள கிரந்தங்கள் அழிந்துவிடுமா என்ற பயம். பாதுகாத்துக் காப்பாற்ற வேண்டுமென்று யாரிடம் சொல்வது! பாதுகாக்கத் தெரிந்தவள் கல்யாணியம்மை மட்டுமே. அவளிடம் எப்படிச் சொல்வது? கடைசியில் தன்னுடைய ஒரு சிஷ்யனை வரவழைத்து வாத்தியார்

சொன்னார். அந்தச் சண்டாளிகிட்டச் சொல்லு, கிரந்தக் கட்டு களைப் பத்திரமாப் பாத்துக்கிடணும்னு. இந்தக் கட்டளையைப் பிறப்பித்துவிட்டு, தட்சணையாகக் கிடைத்த தங்கம், வெள்ளி, தங்கக் காசு ஆக எல்லாவற்றையும் கோயில் நிலைப்படியில் வைத்துவிட்டு யாரிடமும் சொல்லிக்கொள்ளாமல் வாத்தியார் காசிக்குப் புறப்பட்டார். திரும்பி வராத யாத்திரை.

சித்திரை ஒன்றுமுதல் பத்துவரை கோயிலில் படேணித் தெருக்கூத்து. இரவு பூஜை முடிந்தால் இந்தப் பத்து நாட்களும் துள்ளல் ஆட்டம் நடக்கும். இரண்டாம் நாள் முதல்சோவன், கீதங்கள், பறயன், காக்கான் முதலான துள்ளல் ஆட்டங்கள் இருக்கும். ஒரு வருடமாக ஊரில் நடந்த விஷயங்களெல்லாம் இந்தத் துள்ளல் ஆட்டங்களில் எள்ளல் முறையில் வெளிப்படும். ஔதை சர்வேயர் நாகம்பிள்ளைக்குக் கள் வாங்கிக் கொண்டு போய்க் கொடுத்துக் காக்காய் பிடித்ததும், கோயிலில் யானை வேண்டுமா குடை வேண்டுமா என்ற தர்க்கம் கிளம்பியதும், சீரட்டக்கைமள் சமூகத் தலைவர்களைப் புல்லாக மதித்ததும், மங்கலச் சேரியில் மருமகன்மார்கள் சொந்த சமூகத்தைவிட்டு வெளியேறிப் புதிதாகத் தங்களுக்கென்று தனியே குடும்பம் அமைத்துக் கொண்டதும், கோன்னோத்துக் குடும்பத்தில் செலவுக்கு நெல் இல்லாமல் போகவே தேவஸ்தானத்திலிருந்து நள்ளிரவில் ஒரு படகு அளவு நெல்லை யாருக்கும் தெரியாமல் கடத்திக்கொண்டு போனதும் ஆக எல்லாமே துள்ளலாட்டத்தின் நடுநடுவே சொன்ன கதைகள்மூலம் வெளிப்பட்டன. கோடாந்த்ரயில் குஞ்ஞும்மைக்கு கர்ப்பம் உண்டாக்கிய கந்தர்வன் க்லாசிப்பேர் கொச்சுப்பிள்ளைதான் என்கிற விஷயத்தையும் அவ்வாறு ஊராரெல்லாம் அறிந்தார்கள். அந்தக் கதையை இப்படித்தான் காக்கான் துள்ளலாட்டம் அரங்கேற்றியது.

வைக்கோலால் செய்த ஒரு குழந்தை உருவத்தை விளக்கு வெளிச்சத்தில் தூக்கிப் பிடித்தபடிக் காக்கான் தன்னுடைய மனைவியிடம் கேட்டான்:

"அடியே, இந்தக் குழந்தை யாரைப்போல இருக்குடீ?"

"அது உங்களை மாதிரி இருக்கு."

காக்கான் உற்றுப் பார்த்தான், "இது என்னோடது இல்லை."

"அப்படீன்னா?"

"இடுப்பிலேருந்து மேலே வரை க்லாசிப்பேர் எசமானைப் போல நல்லஅழகன். இடுப்புக்குக் கீழே சேஷய்யன் சுவாமியைப் போல."

“அதெப்படி ஒரு குழந்தை ரெண்டு பேருடையதா இருக்கும்?”

“இந்தக் காலத்திலே அப்படித்தாண்டீ”

காக்காத்தி சொன்னாள், “இவன் கந்தர்வனோட மகனாக்கும்.

“ஆமா ஆமா, பகலெல்லாம் சர்வே வேலை. ராத்திரியிலே கந்தர்வவேலை.”

அந்த வேலை எங்கே நடந்ததென்று எல்லோருக்கும் புரிந்தது.

## 2

கோன்னோத்து வல்யச்சன் மரணப்படுக்கையில் இருக்கிறார். இந்தப் படுக்கையிலிருந்து இனி அவர் எழுந்திருக்கப் போவதில்லை. மூச்சுத் திணறல் தொடங்கியிருந்தது. சில நாட்களுக்கு முன்புதான் கோடாந்த்ர மூத்தாசான் இறந்தார். மரணத் தறுவாயில் கோன்னோத்து வல்யச்சனும் சீரட்டக்கைமளும் பக்கத்தில் இருந்தார்கள். அந்தக் கண்கள் மூடுவதைக் கண்ணீருடன் பார்த்து நின்றார்கள் அந்த இருவரும். கோடாந்தர மூத்தாசான் நல்ல மனிதராக வாழ்ந்தார்; நல்ல வழி நடப்பவர். அவருடைய மரணத் துடன் கோயில் காலை நைவேத்தியப் பிரசாதத்தின் ருசியைப் பிரித்தறிந்து இனங்காண எவரும் ஊரில் இல்லாமல் போனார்கள். இப்போது கோடாந்த்ரயில் மூத்தாசான் அய்யப்பக்குறுப்பு; அவன் இறந்துபோன மூத்தாசானின் மருமகன். அதைப்போலவே கோன்னோத்து வல்யச்சன் இறந்துவிட்டால் கல்லறய்க்கல் ராமன் பிள்ளை கோன்னோத்து வல்யச்சனாகிவிடுவார். கோன்னோத்து குடும்பத்தின் மற்றொரு கிளைப்பிரிவுதான் கல்லறய்க்கல். கோன்னோத்திலோ கலலறய்க்கல்லிலோ வயதால் மூத்தவர்தான் கோன்னோத்து வல்யச்சன் ஆவார். இரண்டு பிரிவுகளின் நிர்வாகமும் அந்த நபருடையதாக இருக்கும். கல்லறய்க்கல் ராமன் பிள்ளை இப்போது சாகக் கிடக்கும் காரணவரின் படுக்கையருகில் கண்ணிமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தார். சீரட்டக்கைமளும் பக்கத்தில் இருந்தார். தான் தனிமைப்படுத்தப்படுவதான துக்கம் அவருடைய முகத்தில் தெரிந்தது. ஒரு ஜீவித காலத்தில் மற்றொரு கூட்டாளியும் விட்டுப் பிரிகிறான்.

மூச்சுத் திணறலிடையே கோன்னோத்து வல்யச்சன் தலையணை அடியிலிருந்து எதையோ தடவி எடுத்தார். கனமான ஒரு சாவிக்கொத்து, தேவஸ்தானத்து கஜானா, நெல் களஞ்சியங்கள்

ஆகியவற்றின் சாவிக்கொத்து அது. முன்பு அது கோடாந்த்ர மூத்தாசானின் பொறுப்பில் இருந்தது. மூத்தாசான் சாகும் தருவாயில் அதைக் கோன்னோத்து வல்யச்சனிடம் ஒப்படைத்தார். கோன்னோத்து வல்யச்சன் அதை இனிமேல் யாரிடம் ஒப்படைப்பார் என்பதைத் தெரிந்துகொள்ள அங்கு கூடி இருந்த எல்லோருக்கும் ஆர்வம் ஏற்பட்டது. கோன்னோத்து வல்யச்சன் முறைப்படி அதைச் சீரட்டக்கைமளிடம் கொடுத்தார். இதற்குக் காரணம், வாழ்ந்து கொண்டிருக்கும் சமூகத் தலைவர்களில் இனி மூத்தவர் சீரட்டக்கைமள்தான். கண்ணீருடன் இரண்டு கை களையும் நீட்டிக் கைமள் அதை வாங்கிக் கொண்டார். கோன் னோத்து வல்யச்சன் சாகும்போது தேவஸ்தானத்து கஜானாவின் சாவிக்கொத்தை தன்னிடம் தருவார் என்பதாக அந்தக் குடும் பத்தில் அடுத்த காரணவரான ராமன்பிள்ளை எதிர்பார்த்தார். கோடாந்த்ர மூத்தாசன் சாகும் தருவாயில் சாவிக்கொத்தைத் தன்னிடம் ஒப்படைப்பார் என்று அய்யப்பக்குறுப்பும் எதிர் பார்த்தார். ஆனால் பழைய தலைமுறைக்குப் புதிய தலைமுறை மீது நம்பிக்கை குறைவு. புதிய தலைமுறையினர் பொறுப்பில்லாத வர்கள் என்று பழைய தலைமுறைக்காரர்களுக்கு எண்ணம். எல்லாக் காலத்திலும் இவ்வாறாகத்தான் இருந்து வந்திருக்கிறது. அடுத்துவரும் தலைமுறை மோசமென்று எல்லோரும் சொல் கிறார்கள். ஆனாலும் தலைமுறைகள் முன்னோக்கிப் போகின்றன.

இப்போது தேவஸ்தான கஜானாவின் சாவிக்குச் சீரட்டக் கைமள் சொந்தக்காரர் ஆனார். கோன்னோத்து வல்யச்சன் இறந்த போது ஆறு சமூகத்தவர்களும் கூடியிருந்தார்கள். ஒரு குறுநில மன்னர் நாட்டைவிட்டுப் போனதுபோல் இருந்தது.

கோன்னோத்து வல்யச்சனின் மரணத்திற்குப் பின்னர் கல்லறய்கல் பிரிவினருக்குத்தான் முக்கியத்துவம். காரணம் அந்தப் பிரிவினருக்கும் செலவுக்கான நெல்லை அந்தந்த மாதம் அளந்து கொடுப்பவர் காரணவர்தான். கோன்னோத்து வல்யச்சன் காரணவராக இருந்தபோது கல்லறய்க்கல் பிரிவுப் பெண்கள் வயிறு நிறையச் சாப்பிட்டதே இல்லை. இப்போது கல்லறய்க்கல் ராமன் பிள்ளை காரணவரானதும் கோன்னோத்துப் பிரிவுக்காரர்கள் பாதிப்பட்டினி கிடக்கிறார்கள். கணக்கீட்டின்படி அளப்பதற்கான நெல் குடும்பத்தில் இல்லை. முன்பு வீட்டுச் செலவுக்கு நெல் இல்லாமல் போகும்போதெல்லாம் தேவஸ்தானத்து நெல் களஞ் சியத்திலிருந்து கோன்னோத்து வல்யச்சன் நெல் கொண்டுவருவார். அன்றைக்குச் சாவி கோன்னோத்து வல்யச்சன் கையில் அல்லவா

இருந்தது. இப்போது அது சீரட்டக்கைமளுடைய கையில் இருக்கிறது. செலவுக்குக் கொஞ்சம்கூட நெல் இல்லாமல் ராமன் பிள்ளை தடுமாறினார். ஒருவழிதான் உண்டு, மங்கொம்பில் கணபதி அய்யரிடமிருந்து கடன் வாங்குவது. ஆனால் இறந்து போன காரணவர் சுவாமியிடமிருந்து நிறைய கடன் வாங்கி யிருக்கிறார். இனி நெல் கொடுக்க வேண்டுமென்றால் ஏதாவது ஒரு ஏற்பாடு செய்துகொள்ள வேண்டுமென்று சுவாமி முடிவாகச் சொல்லியிருந்தார். முந்தின தலைமுறை வாங்கின கடன் கொஞ்ச நஞ்சமல்ல. இளைய தலைமுறைக்குப் பொறுப்பில்லை என்று கூறும் மூத்த தலைமுறை ஏற்கெனவே குடும்பத்தைக் கடனில் மூழ்கடித்திருக்கிறது என்பதை அறிந்தபோது ராமன்பிள்ளைக்குப் பொறுக்கவில்லை. ஆனாலும் தற்போதைக்கு எழுந்து நிமிர்ந்து நிற்கும் வழியை ஆலோசித்தார். சில சொத்துக்களை சுவாமிக்கு அடமானமாக எழுதிக் கொடுக்கவில்லையேல் சுவாமி இனிமேல் கடன்கொடுக்க மாட்டார். கடைசியான நாற்றங்கால் நாறு எனப்படும் நாற்பது ஏக்கர் நிலத்தை அடமானமாக எழுதிக் கொடுத்து முந்தின தலைமுறை உண்டாக்கி வைத்த கடனைத் தீர்த்தார். தற்போதையத் தேவைக்கான நெல்லையும் கடன் வாங்கிக் கொண்டார்.

ஊரில் மிகவும் நல்ல நிலங்களில் ஒன்று நாற்றங்கால் நாறு என்பது. கோன்னோத்து குடும்பத்திற்குச் சொந்தமான அந்த நிலம் மங்கொம்பில் சுவாமியிடம் அடமானமாயிற்று. புதிய நில அளவை மாற்றங்களின்படி பத்திரம் போடப்பட்டது. பருத்திக்காட்டு ஔதை மாப்பிள்ளை அந்த நிலத்தில் விவசாயம் செய்ய கணபதி அய்யரிடமிருந்து குத்தகை எடுத்தார். ஔதை மாப்பிள்ளைக்கு நிலத்தைக் குத்தகை விடும் விஷயத்தை பழைய சர்வேயர் நாகம்பிள்ளைதான் கணபதி அய்யரிடம் சிபாரிசு செய்தார். நாகம் பிள்ளை சொல்லிவிட்டால் கணபதி அய்யர் தட்ட மாட்டார். விதைநெல்லை சுவாமி கொடுப்பார். ஆனால் ஔதை மாப்பிள்ளை மட்டும் தனியாக அந்த விவசாயத்தைத் தொடங்க வில்லை. அவருடைய மகன் வர்க்கி, ஆற்றுக்கடவில் அந்தோணி, கோலில் மத்தாயி முதலான பத்து கிறிஸ்தவர்கள் கூட்டாகச் சேர்ந்து பங்கு போட்டுக்கொண்ட கூட்டு விவசாயம் அது. பிள்ளைகள் மருமகள்கள் என்று அவர்களுக்கு வேலைசெய்ய ஆட்களுண்டு. நிறைய மாற்றங்கள் தலையெடுத்தன; இனி வர விருக்கும் காலம் முழுக்க முழுக்க மாறிவிடும் என்று சிலருக்குத் தோன்றியது.

***

நான்கைந்து தலைமுறைகளுக்கு முன்பு தமிழ்நாட்டிலிருந்து தாணு அய்யர் என்ற ஒரு பிராமணர் துணி வியாபாரியாகக் குட்டநாடு வந்தார். மங்கொம்பிலில் குடியிருந்துகொண்டு வியாபாரம் செய்தார். கடன் கொடுத்த சரக்கு விலை மூலமாகக் காலப் போக்கில் நான்காயிரம் மரக்கால் நெல்லின் சம்பாத்தியம் கிடைத்தது. நான்காயிரம் மரக்கால் நெல்லை எங்கே சேமித்து வைப்பது? சொந்த ஊருக்குக் கொண்டுபோகவும் வழியில்லை. அந்த பிராமணருடைய சங்கடத்தைப் பார்த்துச் சில விவசாயி களின் மனம் இளகியது. அன்றைக்கு விவசாயத்திற்குத் தேவையான நெல்லைக் கடன் வாங்கிக் கொள்ளும் ஏற்பாடு இருந்தது. விவசாயிகள் எல்லோரும் சுவாமியிடமிருந்து நெல்லைக் கடன் வாங்கிக் கொள்வார்கள்; பத்துக்கு இரண்டு வட்டிக்கு. பிராமணருடைய முதல் மூலமாக எல்லோரும் அறுவடைமுடிந்த வுடன் முதலும் வட்டியுமாகச் சேர்த்து சுவாமியிடம் நெல் அளப் பார்கள். அந்தக் கணக்கு பெருகிற்று. நெல்லும் நீளநீளமாக இருந்தது; எடைப்பிடிப்போடும் இருந்தது. தாணு அய்யர் தன்னுடைய குடும்பத்தையும் மங்கொம்பிலுக்குக் கொண்டுவந்து சேர்த்தார். குடியிருப்பதற்கு ஒரு பெரிய வீட்டைக் கட்டினார். தலைமுறைகள் பல கழிந்தன. இப்போதைய விவசாயிகளெல்லாம் கணபதி அய்யரின் வாடிக்கையாளர்கள்; விவசாயத்திற்கு மட்டுமல்ல வீட்டுச் செலவுக்கும்கூட அப்படித்தான்.

நிலஅளவை முடிந்து முதலில் பத்திரம் போட்டது கோன்னோத்து பிள்ளையுடையதுதான். பத்திரத்தைப் படித்துப் பார்த்தபோது கணபதி அய்யருக்கு ஒரு பாதுகாப்பு உணர்வு ஏற்பட்டது. பழங்காலத்து ஓலைச் சுவடி போன்றதல்ல. சொத்துக்கு நிலஅளவை நம்பர் உண்டு. பத்திரத்திற்கு பலமுண்டு. ஆனாலும் இன்னொரு சங்கதி சுவாமியை சங்கடப்படுத்தியது. பழைய ஆட்களெல்லாம் ஒவ்வொருவராக இறந்துகொண்டிருந்தார்கள். அவர்களைப் போல சத்தியத்திற்குக் கட்டுப்பட்டிருப்பார்களா இளைய தலைமுறைக்காரர்கள்? அவர்களுக்குப் பழையவர்களைப் போல பிராமண பக்தி ஏற்படுமா? தலைமுறை மாறுகிறது. நில அளவை நடைமுறைக்கு வந்திருக்கிறது. அது ஒரு மாற்றம். மனிதர் களும் மாறிவிட்டார்கள்? அதையெல்லாம் பார்த்துக் கொண் டிருக்க வேண்டியிருக்கிறது. புதிய வாடிக்கையாளர்கள் ஆண்டு தோறும் கடனாக வாங்கும் நெல்லைத் திரும்ப அளந்து கொடுத்துக் கடனை அடைத்துவிடுகிறார்கள். ஆனாலும் எவருடைய கடனும் தீர்ந்தபாடியில்லை. வீட்டில் நெல் குவிகிறது. தீர்க்க முடியாமல்

போகும் கடன்களுக்குப் பதிலாக நிலங்களை எழுதி வாங்கிக் கொள்வது என்பதுதான் சுவாமியின் நோக்கம். கடன்காரர்களை அவர்களுடைய வீடுகளுக்குச் சென்று பார்ப்பார். அப்படிப்பல குடும்பங்களின் நிலங்கள் சுவாமியின் பெயருக்குமாறிப் போயிருக்கின்றன. சுவாமிக்கு மண்ணின் மீதான தாகம் அதிகரித்தது. கோனோத்துப்பிள்ளை நாற்றங்கால் நாறு வயலை சுவாமிக்கு அடமானம் எழுதி வைத்ததுபோல வேறு பலரிடமிருந்தும் அவர்களுடைய நிலங்களை சுவாமி எழுதி வாங்கிக் கொண்டார். சீரட்டக்கைமள் எட்டாயிரம் மரக்கால் நெல்லை சுவாமியின் வீட்டிற்குக் கொண்டுபோய்க் கொடுப்பார். இப்போதையக் கைமள் இறந்தால் அடுத்த வாரிசு கிட்டுண்ணிக்கைமள். அவர் சத்தியவானல்ல என்பது சுவாமியின் அபிப்பிராயம்.

கிட்டுண்ணிக்கைமளுக்கு ஆற்றித்தறவீட்டுக் குடும்பத்தில் சம்பந்தம். மனைவியின் வீட்டிற்குச் சொந்த வீட்டுச் சொத்தைக கடத்திக் கொண்டுபோவதில் எந்தத் தயக்கமும் காட்டாதவர். களத்திலிருந்து நெல்லை வாரிக்கொண்டு சொந்த வீட்டிற்குப் போவது என்பது நடைமுறை. ஆனால் சொந்த வீட்டிற்குள் வரக் கூடாதென்று காரணவர் சட்டம் போட்டிருந்தார். அதனால் அவர் மனைவி வீட்டிலேயே தங்கிவிட்டார். சீரட்டக் குடும்பத்தார் அன்று வரையிலும் ஆற்றித்தறவீட்டுக் குடும்பத்தாரைத் தொட்டு விட்டால் குளிக்காமல் சோறு சாப்பிடுவதில்லை. கிட்டுண்ணிக் கைமள் அந்தத் தீண்டாமையைப் பொருட்படுத்தியதில்லை. இந்த நியமத்தை மீறுபவர்களைக் குடும்பத்திலிருந்து தள்ளி வைத்து விடுவார்கள். பல குடும்பங்களில் இத்தகைய இளவட்ட மருமகன் மார்கள் உருவாகத் தொடங்கினார்கள். சொந்தக் குடும்பத்திலிருந்து நெல்லும் தேங்காயும் பதப்படுத்தி மனைவி வீட்டிற்குக் கொண்டுபோய்க் கொடுப்பதும், அங்கேயே தங்கிக் குடும்பம் நடத்த இளவட்ட மருமகன்மார்கள் ஆரம்பித்துவிட்டனர். நியமப்பழக்க வழக்கங்களை மீறி இப்படி உள்ளவர்களுக்கு பிராமண பக்தி ஏற்படுமென்று எப்படி எதிர்பார்க்கலாம்? கலி முற்றிவிட்டதற்கான அறிகுறிகள் இவையெல்லாம். காரணவர்களின் காலம் முடிந்து விட்டால் இவர்களெல்லாம் தனக்குத் தரவேண்டிய நெல்லை அளக்க மாட்டார்கள் என்ற எண்ணம் சுவாமிக்கு உண்டு. அதனால் நிலபுலன்களை அடமானமாகவோ விலைக்கோ வாங்கிக் கடனைத் தீர்த்துக்கொள்ளவேண்டுமென்று சுவாமி சீரட்டக்கைமளிடம் வற்புறுத்தினார். அது நியாயம்தானே என்று கைமளுக்குத் தோன்றியது. கடன் இருக்கும்போது சொத்துக்கு

மதிப்பில்லை. அவ்வாறு சீரட்டக் குடும்பத்தைச் சேர்ந்த சில நிலங்கள் கணபதி அய்யருக்குச் சொந்தமாயின.

கோடாந்த்ரயில் இப்போதைய காரணவரான அய்யப்பக் குறுப்பின் மனைவி அகவூர் நாணி நல்ல அழகி. அவள்தான் இப்போது கோடாந்த்ரயில் அம்மாவி—மதிப்பிற்குரிய பெண்மணி. அய்யப்பக் குறுப்பைக் கிழித்த கோட்டுக்குள் நிற்கச் செய்யும் தலையணை மந்திரம் அவளுக்குக் கைவந்த கலை. மனைவியின் எந்த ஆசையையும் அவர் நிறைவேற்றி வைப்பார். இரண்டாயிரம் மரக்கால் நெல்லை மங்கொம்பில் சுவாமியிடமிருந்து கடன் வாங்கித்தான் அவர் மனைவியின் பெயரில் பதினைந்து மரக்கால் நிலம் வாங்கிக் கொடுத்தார். அன்றைய தேதி வரை எந்தக் கணவனும் மனைவி வீட்டுக்காரர்களுக்குச் சொத்து வாங்கிக் கொடுத்ததில்லை. குடும்பச் சட்டத்தை மீறிய செயல் இது. போதாக் குறைக்கு, அய்யப்பக்குறுப்பு வட்டிக்குக் கடன் வாங்கித்தான் இத்தகைய சமூகச் சட்டத்திற்குத் துரோகம் செய்திருக்கிறார். அது தான் தலையணை மந்திரத்தின் சக்தி.

நங்கையார் படுகிழமானாள். சின்னப்பெண் குஞ்ஞும்மைக் காகத்தான் அவள் வாழ்ந்து கொண்டிருக்கிறாள். குஞ்ஞும்மையோ தன்னுடைய குழந்தையுடன் தனித்த உலகத்தில் இருந்தாள். தன்னுடைய கந்தர்வன் என்றைக்காவது ஒருநாள் திரும்பி வருவான் என்ற எதிர்பார்ப்புதான் குஞ்ஞும்மையை வாழவைத்துக் கொண்டிருந்தது. குஞ்ஞும்மையின் மகள் திரிபுரசுந்தரியிடம் அய்யப்பக் குறுப்புக்கு அதிக பாசம் ஏற்பட்டிருந்தது. காரணம், இந்தப் பெண்குழந்தை வளர்ந்து அதனுடைய சந்ததி மூலமாகத் தான் கோடாந்த்ர குடும்பம் நிலைத்தாக வேண்டும். ஆனால் அகவூர் நாணி கோடாந்த்ர வீட்டில் இருக்க நேர்ந்ததனால் அய்யப்பக்குறுப்பு தன் சகோதரியும் அவளுடைய மகளையும் மறந்துபோனார். திரிபுரசுந்தரியின் அப்பா கந்தர்வனுமல்ல, சேஷய்யனுமல்ல, கலாசிப்பேராக வந்துபோன கொச்சுபிள்ளை தான் என்ற ரகசியமும் அகவூர்நாணி சொல்லித்தான் அய்யப்பக் குறுப்பு அறிய நேர்ந்தது. சீலாந்திப்பிள்ளி கல்யாணியம்மைக்கு ஒரு மகன் உண்டு. அவன் சிவப்பாக அழகாக இருப்பான். திரிபுர சுந்தரிக்கு அவனுடைய சாயல் உண்டு என்று முதலில் கண்டு பிடித்ததும் அகவூர்நாணிதான். அதையும் அவள் தன் கணவனிடம் சொன்னாள். அத்துடன் அவருக்கு சகோதரி மீதும் மற்ற குடும்ப உறவுக்காரர்கள்மீதும் கொஞ்சம்கூடப் பிடிப்பில்லாமல் போயிற்று. இது எதுவும் குஞ்ஞும்மைக்குத் தெரியாது. அந்த சாதுப்பெண்

அவளும் தனது கந்தர்வனும் மட்டுமே இருக்கும் கனவு உலகத்தில் வாழ்ந்துகொண்டிருந்தாள்.

ஊரில் முதன் முதலாக ஒரு அரசாங்கப் பள்ளிக்கூடம் ஆரம்பித்தார்கள். சீலாந்திப்பிள்ளை கல்யாணியம்மை தனது மகன் கேசவனை அந்தப் பள்ளிக்கூடத்தில் சேர்த்தாள். ஒரு தமிழ்ப் பிராமணர்தான் வாத்தியார். கேசவன் துடிப்பானவன். அவன் படித்துப் பெரிய உத்தியோகஸ்தன் ஆவான் என்பது சுவாமியின் கணிப்பு. கல்யாணியம்மைக்கும் அதுதான் ஆசை; கேசவன் படித்துப் பெரியவனாக வேண்டும்.

கோயிலில் திருவிழா தொடங்கிவிட்டது. ஐந்தாம்நாள் திருவிழாவின்போதுதான் அபிஷேகப் பீடத்தையும் தங்கக் குடையையும் பிறவற்றையும் வெளியில் எடுப்பது. ஆனால் பெரிய கஜானாவைத் திறந்து அவற்றையெல்லாம் எடுத்துக் கொடுப்பதற்கு சாவிக்கொடுத்து வைத்திருக்கும் சீரட்டக்கைமள் வந்துசேரவில்லை. ஆள் போய்க்கூப்பிட்டும் அவர் புறப்பட்டு வருவதற்குப் பொருட் படுத்தவில்லை. கடைசியில் அபிஷேகப் பீடமும் தங்கக் குடையும் இல்லாமலே சப்பர ஊர்வலம் நடந்தது. ஆறு சமூகங்களைச் சேர்ந்த ஊர்க்காரர்களெல்லாம் கூடி ஒரே ரகளையாகிவிட்டது. ஆனாலும் சீரட்டக்கைமள் அசைந்து கொடுக்கவில்லை. இளவட்டங்களான புதிய ஸ்தானிகளுடன் அனுசரித்துப்போக அவரால் முடிய வில்லை. அதுதான் வராமல் இருந்ததற்கான காரணம். சாயங்காலம் ஊர்வலம் தொடங்குவதற்கு முன்பாவது கஜானாவைத் திறந்து அபிஷேகப் பீடத்தையும் மற்றவற்றையும் எடுத்துத் தரவில்லை யானால் ஊரார் ஸ்தானிகளைச் சும்மா விடமாட்டார்கள். அபிஷேகப் பீடத்தை ஸ்தானிகள் திருடிவிட்டார்களோ என்று கூடச் சிலர் சந்தேகப்பட்டார்கள். கடைசியில் கோடாந்த்ர அய்யப்பக் குறுப்பும் கோனாத்து ராமன்பிள்ளையும் மங்கலச்சேரி மாதுபிள்ளையும் சேர்ந்து ஊராரின் முன்னிலையில் கஜானாவின் பூட்டை உடைத்துப் பீடத்தையும் குடையையும் வெளியே எடுத்தார்கள். கஜானாவை வேறொரு பூட்டினால் பூட்டினார்கள். ஸ்தானிகளின் இந்த நடவடிக்கைக்கு எதிராகச் சீரட்டக்கைமள் வழக்கு தொடர்ந்தார். ஊரையெல்லாம் கலக்கிய ஒரு நடவடிக்கை யாக அது அமைந்தது. இதில் ஒரு முக்கியத்துவத்தை உண்டாக் கியது மங்கலச்சேரி மாதுபிள்ளைதான். அவரும் ஸ்தானிகளில் ஒருவரானார். கோடாந்த்ரக் குறுப்பும் கோன்னோத்து பிள்ளையும் சேர்ந்து மங்கலச்சேரி மாதுபிள்ளைக்கு ஸ்தானிப் பதவியை உருவாக்கிக் கொடுத்தார்கள் என்பதாகச் சிலர் அபிப்பிராயப்

பட்டார்கள். குடும்பத்துக் காரணவர்களைக் கொம்பு சீவிவிட்டுக் குளிர் காய்ந்தவர் மாதுபிள்ளை. அவர் இனி கஜானாவின் சாவிக்கு உரியவராகவும் இருப்பார். சீரட்டக்கைமளிடமிருந்த சாவிக் கொத்துக்கு இனி எந்தவித உபயோகமும் இல்லை. அவர் கோயிலுக்கு வருவதையே நிறுத்திவிட்டார். உடம்பில் தளர்ச்சி வந்துவிட்டது. மனதும் நலிந்துவிட்டது. குடும்பக் காரியங்களை மருமகன் கிட்டுண்ணிக்கைமள்தான் நடத்திக் கொண்டிருந்தார். இந்த ஏற்பாட்டினால் சுகத்தை அனுபவித்தவர்கள் கிட்டுக் கைமளின் மனைவி வீட்டுக்காரர்கள்தான். ஆற்றித்தரக் குடும்பத் தார்க்கு உதவ வேண்டும் என்பதுதான் அவருடைய எண்ணம். சீரட்டக் குடும்பத்துப் பெண்கள் தான் கஷ்டத்தை அனுபவித் தார்கள்.

திருவிழாவுக்குக் கொடியேற்றிவிட்டால் மாளிகைகளின் மேல்மாடிகளில் நடமாடும் வாய்ப்பு ஸ்தானிகளின் பிறந்தவீட்டுக் குடும்பத்துப் பெண்களுககு மட்டும்தான் உண்டு. மற்ற குடும்பத்துப் பெண்களெல்லாம் மாளிகையின் கீழ்ப்பகுதியில் நின்று திருவிழா பார்ப்பதுதான் வழக்கம். ஆனால் இந்தத் தடவை வழக்கத்திற்கு மாறாக ஸ்தானிகளின் மனைவிமார்களும் மாளிகை மாடியில் இடம்பிடித்தார்கள். அகவூர் நாணியும் ஆற்றித்தர பாப்பியும் கடம்மாட்டு கொச்சிக்கியும் மாளிகை மாடியிலிருந்து திருவிழா பார்த்தார்கள். கோடாந்த்ர, சீரட்ட, கோன்னோத்து ஆகிய ஸ்தானி குடும்பங்களின் குஞ்ஞும்மமார்கள் மாளிகையின் மாடியில் இருந்த போதிலும் அவர்களில் எவருக்கும் அவர்களுக்குரிய பழைய பெருமை இல்லை. அவர்களுடைய மாமன்மார்களும் சகோதரர் களும் பற்றிய அசட்டுப்பிசட்டுக் கதைகளை அவர்களுக்குள் பேசிக் கொண்டார்கள். அகவூர் நாணிக்குத்தான் இப்போது முதல் மரியாதை. அவள் பழைய நகைகள் சிலவற்றை அணிந்து கொண்டிருந்ததை எல்லோரும் கவனித்தார்கள். அகவூர்நாணிக்கு எங்கிருந்து இந்தப் பழைய நகைகள் கிடைத்தன? கோடாந்த்ர எட்டுக்கட்டு மனையில் திறக்கப்படாத அறை ஒன்று உண்டு. அய்யப்பக் குறுப்பும் அகவூர்நாணியும் சேர்ந்து அதனுடைய பழைய பூட்டை உடைத்துத் திறந்தார்கள். அதில் ஒரு பெட்டி இருந்தது. அதில் நிறைய பழைய நகைகள். முந்தின தலைமுறை களில் கோடாந்த்ர குஞ்ஞும்மார்கள் அணிந்திருந்த நகைகள். அகவூர்நாணி அது முழுவதையும் தனக்குச் சொந்தமாக்கிக் கொண்டாள். அதனுடைய உண்மையான வாரிசான கொச்சுப் பெண்ணு குஞ்ஞும்மைக்கு இந்த விவரம் எல்லாமே தெரியும்.

கோன்னோத்து எட்டுக்கட்டு வீட்டிலும் இதே மாதிரியான யாரும் திறக்காத ஓர் அறை இருந்தது. அங்கும் பழைய நகைகள் இருந்திருக்கும். கல்லறய்க்கல் பிரிவுப் பெண்களெல்லாம் கூடி ஆலோசித்தார்கள். கோன்னோத்து அறையின் பழைய நகைகளை இட்டிராமன் மாமா கையாடியிருப்பாரோ? தங்களுக்கு வந்துசேர வேண்டியவை அல்லவா அவை- யாரிடம் கேட்பது? கல்லறய்கல் ராமன்பிள்ளையும் இட்டிராமன் பிள்ளையும் தங்களுக்குள் பேசிக் கொள்ள மாட்டார்கள். கோன்னோத்தில் இரண்டு பிரிவுகள்— இரண்டும் தனித்தனியே போய்விட்டன. சொத்துக்களையும் பாகம் பிரித்துவிட வேண்டும் என்பதுதான் இட்டிராமன் பிள்ளையின் வாதம். தேவஸ்தானத்து கஜானா பூட்டை உடைத்த வழக்கில் தனக்கெதிரே சீரட்டக்கைமளுடன் நின்ற இட்டிராமன்பிள்ளை யிடம் தீராத பகை கல்லறய்க்கல் பிள்ளைக்கு. கோன்னோத்துப் பிரிவு பெண்களுக்கு வயிறு நிறையச் சாப்பிடுவதற்கான நெல்லைக் கொடுப்பதில்லை என்பதாக இட்டிராமன்பிள்ளை, கல்லறய்க்கல் பிள்ளையைச் சாடினார். சீரட்ட குடிசை வேய்ந்து ஆண்டு களாயின. கணக்கில்லாதபடி குடும்பச் சொத்துக்களை விற்றுத் தொலைக்கிறார் என்பதையும் அவர்மீது இட்டிராமன்பிள்ளை குற்றம் சுமத்தினார். முன்பிருந்த காரணவர்கள் வாங்கிய கடனைத் தீர்க்கத்தான் தான் சொத்துக்களை விற்றதாகக் கல்லறய்க்கல் பிள்ளை தன் பக்கத்துச் செயலை நியாயப்படுத்தினார். அந்த விவாதம் அவ்வாறாக நீண்டுகொண்டே போயிற்று. அவர்கள் ஒருவருக்கொருவர் நேருக்கு நேராகப் பார்த்துக் கொள்வதுகூட இல்லை. அந்த வருடம் அறுவடை முடிந்தபோது களத்திலிருந்து கிடைத்த விளைச்சலில் சரிபாதி கோன்னோத்துப் பிரிவுக்கு அளக்கவேண்டும்; இல்லாவிட்டால் கணபதி அய்யருடைய கடனுக்கான நெல்லை அளக்கக்கூடத் தான் சம்மதிக்க முடியாது என்று திட்டவட்டமாகச் சொல்லிவிட்டார். பலபேர் மத்தியஸ்தம் செய்தும்கூட அவர் வளைந்துகொடுக்கவில்லை. கடைசியில் எழு நூறு மரக்கால் நெல்லுடன்தான் இட்டிராமன்பிள்ளை களத்தி லிருந்து திரும்பினார்.

இந்த நிலையில் கோன்னோத்துக் குடும்பத்திற்கு போவதற்கு ராமன்பிள்ளைக்குத் தயக்கம் ஆனாலும் போகத்தான் வேண்டி யிருந்தது. அவருடைய பிரிவைச் சேர்ந்த பெண்களெல்லாம் நிர்ப் பந்தித்தார்கள். கோன்னோத்தில் திறக்கப்படாதிருந்த கதவைத் திறந்துபார்க்க மனைவி கடம்மாட்டுக் கொச்சிக்கும் ஆசையுண்டு. அகவூர் நாணியைப் போலத்தானும் பழைய நகைகளையெல்லாம்

போட்டுப்பார்க்கவேண்டுமென்று ஆசை. கடைசியில் ராமன் பிள்ளை கோன்னோத்துக்குச் சென்றார். அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த இட்டிராமன்பிள்ளை அங்கே இல்லை. கோன்னோத்துப் பிரிவுப் பெண்கள் அதிசயித்தார்கள். நீண்ட காலம் கழித்துக் காரணவர் அந்தக் குடும்பத்திற்கு வருகிறார். வீடு வேயவில்லை; வீடு நனைந்து நைத்துப் போயிருந்தது. கோன்னோத்தின் மூத்தக் குஞ்ஞும்மை கஷ்டங்களைச் சொன்னாள். "எல்லாத்தையும் உங்க இட்டிராமன்பிள்ளைகிட்டச் சொல்லிக்கிங்க—கல்லறய்க்கல் ராமன்பிள்ளை அதற்குமேல் எதுவும் பேசவில்லை. நனைந்து நைந்த வீட்டைப் பார்க்க வேண்டுமென்ற சாக்கில் காரணவர் உள்ளே போய் உள்ளறையைக் கண்டுபிடித்தார். அறைக்குள்ளே இன்னோர் அறை. சூனியம்! பழைய நகைகளுக்காக மூக்கு வியர்த்திருந்த கடம்பாட்டு கொச்சக்கியும் கல்லறய்க்கல் குஞ்ஞும்மைகளும் அவ்வாறாக நாமம் போட்டுக் கொண்டார்கள்.

***

திருவிழாவில் ஊர்வலக் களியாட்டம் நடந்துகொண்டிருந்தபோது கோடாந்த்ரயின் கொச்சுப்பெண் குஞ்ஞும்மையின் கண்கள் யாரையோ தேடின. களியாட்டக்காரர்களுக்குப் பின்னால் கொடி பிடித்திருக்கும் சிறுவர்களின் கூட்டத்தில் குஞ்ஞும்மை தன்னுடைய கந்தர்வனைக் கண்டாள். குடுமி வைத்து, வெளுத்துச் சிவந்த ஓர் அழகுச் சிறுவனாக கந்தர்வன் வந்திருக்கிறான். மாளிகைக்குக் கிழக்குப்பக்கம் எழுந்தருள்வதற்கு முன்பாக ஒற்றைத் தாள வட்டம் என்ற களியாட்டம் இருக்கும். மாடியிலிருந்து குஞ்ஞும்மை அவனைப் பார்த்தாள். கொடிபிடித்திருந்தவர்களின் இரண்டாம் வரிசையில் அவன் துள்ளல் ஆடினான். குஞ்ஞும்மை களியாட்டம் பார்க்கவில்லை. மேளச்சத்தம் கேட்கவில்லை. குடமுல்லை, கஸ்தூரி ஆகியவற்றின் நறுமணம் நிறைந்த ஒரு தனி உலகில் அவள் நீந்திக் கொண்டிருந்தாள். குஞ்ஞும்மையிடம் ஏற்பட்ட மாற்றத்தைக் கண்டு நங்கையார் பயந்துபோனாள். ஏதோ நினைவுத் தடுமாற்றம் என்பது அவளுக்குப் புரிந்துவிட்டது. குழந்தை திரிபுரசுந்தரி தேம்பி அழுதாள். மகளுடைய அழுகை குஞ்ஞும்மையை இந்த உலகத்திற்கு இழுத்து வந்தது. குஞ்ஞும்மை மகளை வாரியணைத்து முத்தம் கொடுத்து மூடிக்கொண்டாள். ஆனாலும் அவள் முழுமையாக பூமிக்கு வந்து சேரவில்லை. நீண்ட

நீண்ட நேர முத்தங்கள். மகளல்ல, வேறு யாரோ அவளுடைய கைகளில் அடங்கியிருந்தார்கள். குழந்தை உச்சக்குரலில் அழுதாள். நங்கையார் தலையிட்டும்கூட அவள் குழந்தை மீதான பிடியை விடவில்லை. பின்னர் மயங்கிச் சாய்ந்தாள், நங்கையாருடைய மடியில் தலைவைத்துப்படுத்துக் கிடந்தாள் பச்சைக் குழந்தையைப் போல. கோடாந்த்ர கந்தர்வன் கோடாந்த்ர குடும்பத்திற்காக வேண்டி ஒரு சிறுவனாக வந்து கொடியும் குடையும் பிடித்துத் துள்ளலாட்டம் ஆடினான் என்பதாகக் குஞ்ஞும்மை எண்ணினாள். உண்மையில் அது சீலாந்திப்பிள்ளி கல்யாணி யம்மையின் மகன் கேசவன்.

மாம்பழக்காலம் வந்தது. ஊரிலுள்ள எல்லா மாந்தோப்பு களிலும் குழந்தைகள் மாம்பழம் பொறுக்க ஓடோடித் திரிவார்கள். ஒரு மார்பு அகல மாம்பழக்கூடை நிறைவதற்குக் கால்நாழிகை போதும். அப்படி மாம்பழம் உதிரும் காலம் அது. கோடாந்த்ர வளாகத்தில் கந்தர்வனின் கோயிலுக்குத் தெற்குப்பக்கம் ஆகாயம் வரைக்கும் வளர்ந்த மாமரம் ஒன்று இருந்தது. ஒருநாள் அங்கே பிள்ளைகள் யாரும் வரவில்லை. ஒரேயொரு குழந்தை மட்டும்— சீலாந்திப்பிள்ளி கேசவன். அவன்தான் மாம்பழம் பொறுக்க முதலில் வந்தான்.

அடர்ந்த நீளமான குடுமி இடது வசமாகக் கட்டப்பட் டிருந்தது. அதில் ஓர் அரச இலை செருகப்பட்டிருந்தது. பளிச் சென்று வெள்ளையாக ஒரு துண்டு உடுத்தியிருந்தான். வெளுத்துச் சிவந்த வடிவமைப்பான உடம்பு. கோடாந்த்ர குஞ்ஞும்மை அவனைப் பார்த்து ஸ்தம்பித்து நின்றுவிட்டாள். மாம்பழம் பொறுக்க ஒரு சுந்தர பாலனாக கந்தர்வன் வந்திருக்கிறான் என்றுதான் அவளுக்குத் தோன்றியது. குஞ்ஞும்மை அவனுக்கு நேராகக் கைநீட்டி மாடிக்கு வரச்சொல்லி அழைத்தாள். கேசவன் பயந்து ஓடி ஒளிந்தான். குஞ்ஞும்மை விம்மி அழுதாள். இரவில் வசீகர உடையணிந்து வாசனைச் சந்தனம் பூசிய கந்தர்வன் இனி வரமாட்டானா? திருவிழாக் களியாட்டக்காரர்களின் பின்னால் கொடியெடுத்துத் துள்ளலாடியும், மாந்தோப்புக்கு வந்து மாம்பழம் பொறுக்கியும் நடந்து திரியும் குழந்தைதானோ கந்தர்வன்? குஞ்ஞும்மை தளர்ந்து சோர்ந்து போனாள். தான் கந்தர்வனைக் கண்ட கதையை நங்கையாரிடம் சொன்னாள். இனிமேலும் கந்தர்வன் மாந்தோப்புக்கு வருவானென்று குஞ்ஞும்மை எதிர் பார்த்தாள். குழந்தை திரிபுரசுந்தரியும் கந்தர்வனைக் காண்பதற் காகக் காத்திருந்தாள்.

தான் மாம்பழம் பொறுக்கிக் கொண்டிருந்தபோது நடந்த சம்பவத்தைக் கேசவன் அம்மாவிடம் சொன்னான். கோடாந்த்ர வளாகத்தில் மாம்பழம் பொறுக்கிக் கொண்டிருந்தபோது வெளுத்து மெலிந்த ஒரு பெண்மணி அவனை உற்றுப் பார்த்ததும் கைநீட்டி அழைத்ததுமான சம்பவம். யக்ஷியாக இருக்காது என்று கல்யாணி யம்மை அவனுடைய எண்ணத்தைத் திருத்தினாள். கொச்சுப்பெண் குஞ்ஞும்மையின் பெயர் போன காரியத்தைக் கல்யாணியம்மை நினைத்துப் பார்த்தாள்-தங்கக்கட்டி போன்ற ஒரு குழந்தையைப் பெற்றெடுத்ததுதான் அது. அந்தக் குழந்தைக்கு யாருடைய சாயல் என்பதும் அவளுக்குப் புரிந்தது. கல்யாணியம்மை தன்னை யறியாமலே மகனிடம் சொன்னாள், "மகனே, உனக்கு ஒரு அக்கா உண்டு". கோடாந்த்ரயில் இருக்கும் குழந்தை திரிபுரசுந்தரி, தன்னுடைய வயிற்றில் பிறந்த கேசவன் ஆகிய இருவருடைய அப்பா க்லாசிப்பேர் கொச்சுப்பிள்ளைதான் என்பதை மட்டும் கல்யாணியம்மை வெளிப்படையாகச் சொல்லவில்லை.

***

செக்குக்காரன் பருத்திக்காட்டு ஔதையைச் சிலர் ஔதை மாப்பிள்ளை என்று கூப்பிடத் தொடங்கினார்கள். விவசாயியாக மாறியதனால் கிடைத்த மரியாதை. நாற்றங்கால் நானூறு நிலத்தை கணபதி அய்யரிடமிருந்து குத்தகை பெற்ற ஔதை, மகனுக்காகத் தான் அதை ஏற்றுக்கொண்டான். மகன் வர்க்கி முதலாக பத்துப் பேர் சேர்ந்த பங்கு விவசாயமாகத்தான் முதலில் இருந்தது. பங்கு விவசாயத்தைத் தொடங்குவதற்கு முன்பு ஔதை எல்லாரிடமும் சொன்னான்; அறுவடை முடிந்ததும் முதலில் கணபதி அய்யருக்கு ஆயிரத்து இருநூற்றி ஒன்று மரக்கால் நெல்லை குத்தகை அளக்க வேண்டும். மேல்குத்தகையாக இருநூறு மரக்கால் நெல்லை ஔதைக்குக் கொடுக்க வேண்டும். தன் குத்தகையிலிருந்து எடுத்து இன்னொருவருக்கு மேல்குத்தகையாகக் கொடுக்கும்போது எனக்கு அதில் ஒரு லாபம் இருக்கவேண்டும். அந்த இருநூறு மரக்கால் நெல் வயதான எனக்கும் என் மனைவி ஒறோதையின் செலவுக்கும் சரியாக இருக்கும். இவ்வளவு காலமும் ஒரோதையும் வர்க்கியும் செக்கு ஆட்டித்தான் அந்தக் குடும்பம் நடந்துகொண்டிருந்தது. வேலை செய்யாமல் சும்மா சுற்றித் திரிந்து பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தவன் தன் அப்பா என்று வர்க்கி ஔதையைக் குற்றம்

சொல்வான். அவன் சொல்வதில் தப்பில்லை. ஆனால் வயதான காலத்தில் இனி அப்படிப் பேச்சு வாங்கக்கூடாது என்று கருதித் தான் ஒளதைக்கு உதவி செய்ய நாகம்பிள்ளை முன்வந்தார். கணபதி அய்யரிடமிருந்து நாற்றங்கால் நானூறு நிலத்தைக் குத்தகைக்கு எடுக்க ஒளதைக்காக ஜாமீன் ஏற்றது சர்வேயர் நாகம் பிள்ளை என்பதைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

ஆனாலும் இருநூறு மரக்கால் நெல்லை குத்தகையாகக் கேட்பது கொஞ்சம் அதிகம்தான் என்று பங்குதாரர்களில் ஒருவனான கோலில் மத்தாயி அபிப்பிராயப்பட்டான். அவன் அதை வெளிப்படையாகவே சொன்னான். அந்த விஷயமாக ஒளதையும் மத்தாயியும் தங்களுக்குள் சண்டை போட்டுக்கொள்ள நேர்ந்தது. முதல் விவசாயம் நல்ல விளைச்சலைத் தந்தது. பங்கு விவசாயிகளான பத்துப்பேரும் அவர்களுடைய மனைவிமார்களும் பிள்ளைகளும் ஆக எல்லோருமாகச் சேர்ந்துதான் விவசாய வேலை முழுவதையும் செய்தார்கள். அதனால் எல்லாருக்கும் நல்ல லாபம் கிடைத்தது. முதல் விவசாயம் முடிந்ததும் கோலில் மத்தாயியும் வட்டத்ர பீலியும் பங்கு எடுத்துக்கொண்டு பிரித்துவிட்டார்கள். அதற்குச் சில நாட்களுக்கு முன்பு சங்கனாச்சேரியில் மத்தாயியும் பீலியும் குஞ்சச்சனைச் சந்திக்க நேர்ந்தது. மத்தாயியின் அத்தை மகளைக் கட்டியவன் இந்தக் குஞ்சச்சன். அவன் இப்போது கிழக்குத் தொடர்ச்சிமலையில் கொஞ்சம் இடம் வாங்கி விவசாயம் செய்துகொண்டிருந்தான். பெரிய தோட்டம் துரவு வைத்திருந்த சில வெள்ளைக்காரத் துரைமார்களுடன் அவனுக்குப் பழக்கம் உண்டு. பாலாய்க்குக் கிழக்கே பெரிய காடுகளை வெட்டிச் சரிப் படுத்திக் குஞ்சச்சன் ரப்பர் விவசாயம் தொடங்கியிருந்தான். அவன் இன்னொரு பணக்காரன். குஞ்சச்சனின் உபதேசத்தின்படி மத்தாயியும் பீலியும் ஒரு கூட்டு வியாபாரம் தொடங்கினார்கள். குட்டநாட்டிலிருந்து நெல்லை விலைக்கு வாங்கி வந்து, படகு மூலமாகக் கொண்டு போய்ப் பாலா முதலான மலையோரப் பிரதேசங்களில் விற்பனை செய்தால் நல்ல லாபம் கிடைக்கும். அரிசி வியாபாரம் முடிந்து திரும்பி வரும்போது காட்டிலிருந்து மரத்தடிகளைப் படகுமூலம் கொண்டுவரலாம். மத்தாயி, பீலி ஆகிய இருவரும் தொடங்கிய இந்த வியாபாரம் நல்ல வளர்ச்சி கண்டது. குட்டநாட்டில் இப்போது நெல்லின் விலையை நிர்ணயிப்பது அவர்கள்தான்.

மத்தாயியின் வளர்ச்சியில் ஒளதை மாப்பிள்ளைக்குப் பொறாமை இல்லை. ஆனால் மத்தாயி ஓர் ஏமாற்றுக்காரன்

என்பதைக் கிழவர் அறிவார். கணபதி அய்யருக்குத் தெரியாமலே மேல்குத்தகையாக இருநூறு மரக்கால் நெல்லைப் பங்காளிகளிடமிருந்து ஔதை வாங்கிக் கொண்டிருக்கிறார் என்ற விஷயத்தை அய்யரின் இருப்பிடத்திற்குச்சென்று தெரியப்படுத்தியது மத்தாயி தான். இது உண்மைதானா என்று சுவாமி ஔதையைக் கூப்பிட்டு விசாரித்தார். ஔதைக்கு வியர்த்துப் போயிற்று. ஔதை சத்திய சந்தன் என்று சுவாமிக்கு நம்பிக்கை உண்டு. குத்தகையை முறைப் படியாகவும் அளப்பான். ஆனால் தனக்கும் தெரியாமல் ஔதை அதிலொரு லாபம் சம்பாதித்தான் என்பது சுவாமிக்கு மன வருத்தம். ஆனாலும் ஔதைக்குக் கிடைத்துக் கொண்டிருந்த குத்தகை ஔதைக்கே போய்ச்சேரட்டும் என்று சுவாமி அனுமதி கொடுத்தார். பங்காளிக் கூட்டத்தில் இருப்பவர்களைக் கண் காணிப்பில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று உபதேசமும் செய்தார். மத்தாயியை உத்தேசித்துத்தான் கணபதி அய்யர் அப்படிச் சொன்னார் என்பது ஔதைக்குப் புரிந்தது. கூட இருந்த எட்டுப்பங்குதாரர்களும் பிரிந்தார்கள். இப்போது ஔதையின் மகன் வர்க்கியும், ஆற்றுக்கடலில் அந்தோணியும் மட்டுமே கூட்டுச் சேர்ந்து விவசாயம் செய்கிறார்கள.

ஔதைக்கு இரவில் தூக்கம் கெட்டது. அவர் ஒரு பெரிய ஆபத்தைக் கண்முன்னே கண்டார். மத்தாயி ஒவ்வொரு நாளும் மேலும் மேலும் பணக்காரனாகிக் கொண்டிருந்தான். கோன் னோத்துப் பிரிவான கல்லறய்க்கல் ராமன்பிள்ளையும் இப்போது மத்தாயிடமிருந்துதான் தேவைக்கான பணத்தைக் கடன் வாங்கிக் கொள்கிறான் கல்லறய்க்கல் ராமன்பிள்ளை பெரிய பணமுடையி லிருந்தான். மனைவி வீட்டுக்காரர்களுககு அவன் ஒரு வீடு கட்டிக் கொடுத்தான். கல்லறய்க்கல் வீட்டை மராமத்து செய்தான். எல்லாமே மத்தாயியிடமிருந்து கடன் வாங்கிய பணத்திலிருந்து தான். இந்த நிலையில் இப்போது அவசியப்பட்டால் கல்லறய்க்கல் பிள்ளை நாற்றங்கால் நானூறின் அனுபவ உரிமையை மத்தாயி பெயருக்கு எழுதிக் கொடுக்க நேரலாம். கணபதி அய்யருக்குக் கொடுக்க வேண்டிய கடனைத் தீர்த்தால் இது நடக்கக்கூடும். அதுதான் ஔதையை பயமுறுத்திக் கொண்டிருந்தது. இந்தக் குழப்பத்திலிருந்து விடுபட ஒரே ஒருவழிதான் உண்டு. எந்த விதத்திலும் நாற்றங்கால் நானூறின் உரிமையை வாங்கிவிட வேண்டும். ஔதை நேராகக் கொல்லத்திற்குப் போய்த் தன்னுடைய கண்கண்ட தெய்வமான நாகம்பிள்ளையைச் சந்தித்தார். பதினாயிரம் மரக்கால் நெல்லுக்கு சுய ஜாமீன் கொடுத்து, அதை

ஔதைக்குத் தரும்படி சுவாமிக்கு நாகம்பிள்ளை ஒரு பத்திரம் எழுதிக் கொடுத்தார். ஔதை திரும்பி வந்து நாகம்பிள்ளை கொடுத்த ஜாமீன் பத்திரத்தைக் கொடுத்து எல்லா நெல்லையும் சுவாமியிடமிருந்து கடன் பெற்றார். அந்த நெல்லை நல்ல விலைக்கு விற்றுப் பணமாக்கி, கடம்மாட்டுக்குப் போய்க் கல்லறய்க்கல் பிள்ளையைச் சந்தித்தார். தாமதப்படுத்தாமல் ஆலப்புழை பதிவாளர் அலுவலகத்தில் இரண்டு பத்திரங்கள் போடப்பட்டன. ஒன்று, ஔதையின் பெயருக்கு நாற்றங்கால நானூறின் உரிமைப் பதிவு. மற்றொன்று, தான் வாங்கிய உரிமைப் பதிவை நாகம் பிள்ளைக்குப் பணயப்படுத்தியதான பத்திரப்பதிவு. அன்று இரவு பாடி முதல் பருத்திக்காட்டு வரையிலான குஞ்ஞுஞ்ஞியின் பயணம் மிக நீளமாக இருந்தது. வழியில் பார்த்தவர்களையெல்லாம் ஔதை பிடித்து நிறுத்திச் சொன்னார். "நாற்றங்கால் நானூறு இனிமேல் ஔதைக்குச் சொந்தம்". வீட்டிற்குப் போனதும் ஒறோதப் பெருமாட்டியை வாரியெடுத்து ஔதை மாப்பிள்ளை ஒரு தட்டாமாலை சுற்றினார். கூடவே படைவீரர் அணிவகுப்பின் போதான எக்காள முழக்கம். அந்தத் துள்ளலாட்டத்தின் நடுவே ஔதை தனது ஒறோதப் பெருமாட்டிக்கு ஒரு முத்தம் கொடுத்தாரோ என்று கூடச் சந்தேகம்.

ஊரில்-மிகவும் நல்லநிலம், கோன்னோத்துக் குடும்பத்தின் மிகப்பெரிய சொத்தான நானூறுமரக்கால் நிலம், அது கணபதி அய்யர், கோன்னோத்துப் பிள்ளையிடமிருந்து அடமானமாக எழுதி வாங்கிய நிலம்; அய்யர் சுவாமி சொந்தமாக்கிக் கொள்ள வேண்டுமென்று ஆசைப்பட்டநிலம். ஆனால், அது சுவாமிக்குக் கூடத் தெரியாமல் செக்காட்டி ஔதையின் வசமாகிவிட்டது. ஊரில் எவரும் கேட்டதும் நம்ப முடியாத ஒரு செய்தியாக அது இருந்தது; ஔதையின் மகன் வர்க்கிக்குக் கூடத்தான். "இனிமேல் நாற்றங்கால் நானூறு எனக்குச் சொந்தம், நான் செத்த பிறகு உனக்குச் சொந்தம்." பதிவுப் பத்திரத்தை வர்க்கிக்கு முன்னால் வீசியபடி ஔதை சொன்னார்.

ஔதை தன்னை இப்படி ஏமாற்றியதில் கணபதி அய்யருக்குப் பெரிய அவமானம் ஆயிற்று. தன்னுடைய கையிலிருந்து நெல்லை வாங்கி விற்று, தன்னுடைய அனுபவ பாத்தியதையிலிருந்த நிலத்தின் உரிமையை யாருக்கும் தெரியாமல் அவன் சுருட்டிக் கொண்டுவிட்டான். தன்னிடம் எதையும் கேட்காமல் கொள்ளாமல் பத்திரம் எழுதிக்கொடுத்த கோன் னோத்துப்பிள்ளையின் நன்றிகெட்ட தனத்தையும் சுவாமியினால்

பொறுத்துக்கொள்ள முடியவில்லை. கோன்னோத்துக் குடும்பத்தில் பழைய காரணவர்கள் இப்படி நடந்துகொண்டதில்லை. சத்தியத்திற்குக் கட்டுப்பட்டவர்களாக இருந்தார்கள். நாற்றங்கால் நானூறு தனக்கு அடமானமாக எழுதிக்கொடுத்த காலத்தில் இப்போதையக் கோன்னோத்துப் பிள்ளையான ராமன்பிள்ளை நல்லவனாக இருந்தான். எவ்வளவு திடீரென்று குடும்பத்துக் காரணவர்கள் சதிகாரர்களாகவும் பிராமணபக்தி அற்றுப் போனவர்களாகவும் மாறிவிட்டார்கள்? கோன்னோத்துப் பிள்ளையை மனதாரச் சபித்துக்கொட்டினார் கணபதி அய்யர்! ஔதையையும் சபித்தார். ஆனால், பிராமணன் கிறிஸ்தவனைச் சபித்தால் அந்தச் சாபம் எடுபடுமா என்று சுவாமிக்கும் சந்தேகம் உண்டு.

அதைவிடப் பெரிய அடி விழுந்தது கோலில் மத்தாயிக்குத் தான். நாற்றங்கால் நானூறைப் பட்டா எழுதி வாங்கிவிடலாம் என்ற எதிர்பார்ப்போடுதான் தேவைப்பட்ட போதெல்லாம் ராமன் பிள்ளைக்கு மத்தாயி கடனாகப் பணம்கொடுத்துக்கொண்டே இருந்தான். இப்போது அந்த நிலம் ஔதை கைக்குப் போய்விட்டது. கொடுத்த பணத்தைத் திருப்பி வாங்க ராமன்பிள்ளையின் மனைவி வீடான கடம்மாட்டு வீட்டிற்கு மத்தாயி போனான். தான் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த பணம் என்றும், அதை உடனே திருப்பித்தர வேண்டும் என்றும் மத்தாயி சொன்னான். அடுத்த அறுவடையின் நெல்லைத் தருவதாகவும், அது முடியவில்லை யானால் நிலத்தை எழுதிக் கொடுப்பதாகவும் சொல்லி வாங்கிய பணம். நாற்றங்கால் நானூறு நிலத்தை எழுதிக் கொடுத்ததுடன் இனி ராமன்பிள்ளையின் சொந்தத்தில் பெரிய நிலம் எதுவும் இல்லை என்பது மத்தாயிக்குத் தெரியும். இனி எஞ்சியிருக்கும் பெரிய நிலங்களெல்லாம் கோன்னோத்துப் பிரிவைச் சேர்ந்தவை. ஆனாலும் தான்தான் இப்போதும் கோன்னோத்துக் காரணவர் என்றும், கோன்னோத்து வசமுள்ள எந்த நிலத்தையும் எழுதிக் கொடுத்து விற்கும் உரிமை தனக்கு உண்டென்றும் ராமன்பிள்ளை சொன்னான். ஆனால் அது வீண் வார்த்தை என்பது மத்தாயிக்குத் தெரியும். தான் கொடுத்த பணம் திரும்பக் கிடைத்தால் மத்தா யிக்குப் போதும். ஔதை கொடுத்த பணம் இருக்கும் அல்லவா, அதைக்கொண்டு தன்னுடைய கடனைத் தீர்க்க வேண்டியது தானே! மத்தாயி எகிறினான். 'இப்போ தர்றதுக்கு என் கையிலே பணம் இல்லை'—கல்லறய்க்கல் ராமன்பிள்ளை தீர்மானமாகச் சொன்னான்.

மத்தாயி விடவில்லை, "'நீங்க இப்படிச் சொல்றது சரிதானா? ஒழுங்கு முறைதானா? இப்பத்தானே நாற்றங்கால் நானூறு விற்ற பணம் கிடைத்தது? அப்படியிருக்கப் பணமில்லேன்னு சொல்றது குடும்பத்திலே இருக்கிறவங்க பேசுற பேச்சா? நான் பட்டினி கிடந்து சேர்த்த பணமாக்கும், அது இப்போ எனக்கு வந்தாகணும்."

கோலில் மத்தாயி தன்னை சந்தி சிரிக்க வைத்துவிடுவான் என்று கோன்னோத்துப்பிள்ளைக்குப் பயமாகிவிட்டது. ஔதை கொடுத்த பணம் கையில் இருக்கிறது. அதைக்கொடுத்து மத்தாயியின் தொந்திரவைத் தீர்த்துவிட அவர் நிச்சயித்தார். உள்ளே போய் மனைவியைக் கூப்பிட்டார். ஆனால் பணம் வைத்திருந்த முந்தானை காலி! ராமன்பிள்ளை கற்சிலைபோல நின்றார். ஔதை கொண்டுவந்து கொடுத்த பணம் முழுவதையும் சாமான்கள் வாங்கி நிறைக்க மனைவி அவளுடைய அண்ணனிடம் கொடுத்துஅனுப்பிவிட்டாள் போலிருக்கிறது! நிலம் விற்றுக்கிடைத்த பணம், கொண்டு வந்ததும் வராததுமாக மனைவியிடம் ஒப்படைத்தபோது இப்படி ஒரு சதி நடக்குமென்று நினைத்துப் பார்க்கவில்லை. கோன்னோத்துப்பிள்ளை நடைப்பிணமானார். மத்தாயி தன்னை அவமானப்படுத்தப்போகிறான். இனி எதுதான் போக்கிடம்? தன்னுடைய பெயரில் சிறிய நிலங்கள் சில உண்டு. அவை எல்லாவற்றையும் சேர்த்து எழுதித் தருவதாக மத்தாயிடம் சொன்னார். மத்தாயிக்கு அது தேவையில்லை. நாற்றங்கால் நானூறுக்கு ஆசைப்பட்டு வந்தவன் மத்தாயி. அது கிடைக்கவில்லை. இனி, கொடுத்த பணத்தைத் திருப்பிக் கொடுக்க வேண்டும். அதை வாங்கும் விதமாக வாங்கிக் கொள்வதாகப் பயமுறுத்திவிட்டு மத்தாயி போய்ச் சேர்ந்தான்.

வியாபாரத்தில் மத்தாயியைவிட அதிக முன்னேற்றம் கண்டது வட்டத்ர பீலிதான். அவன் மத்தாயியுடன் பங்குபிரித்துக் கொண்டு போய்ச் சொந்தமாக வியாபாரத்தைத் தொடங்கினான். அது அபிவிருத்தியாகிவிட்டது. பீலியின் மூத்த மகன் தோமா கிழக்குத் தொடர்ச்சி மலைகளில் தோட்டங்களுக்குச் சொந்தக்காரன் ஆனான். பெரிய பணக்காரன் ஆனான். ஊர்ப்புறத்திலும் கொஞ்சம் விவசாயம் செய்யவேண்டுமென்று அவனுக்குத் தோன்றியது. மங்கொம்பில் இரண்டு சுவாமிமார்களுக்குச் சொந்தமான ஆயிரத்து ஐந்நூறு மரக்கால் நிலங்களைக் குத்தகைக்கு எடுத்தான். முண்டம்பாடம் என்பது அந்தப் பெரிய வயல் வெளிக்குப் பெயர். ஊரில் மிகவும் பெரிய நிலப்பரப்பு அது. ஆற்றங்கரையில் அமைந்திருந்தது. கொஞ்ச காலமாக விவசாயம்

செய்யப்படாமல் கிடக்கும் பூமி. அவ்வளவு பெரிய நிலத்தைக் குத்தகைக்கு எடுத்து விவசாயம் செய்யத் தோமாவைத் தவிர வேறு யாருக்கும் தைரியம் வரவில்லை. காரணம், தோமாவின் கையில் தேவையான பணம் இருந்தது. நாட்கணக்கில் வேலைபார்த்து சுற்றுவேலி கட்டி முடித்தான். தாழ்வான வயல். பழைய முறையில் அவ்வளவு பெரிய வயலிலிருந்து உருளை உருட்டித் தண்ணீர் வடிப்பதென்றால் மாதக்கணக்காகும். தோமா எவ்வளவு சீக்கிரத்தில் புதிய இயந்திர முறையில் தண்ணீரை வடித்தெடுத் தான்! என்ஜின் வைத்துத் தண்ணீர் வடிக்கும் வேலையை கிராமத்தாரும் முதன்முதலாகப் பார்த்தார்கள். ஆட்கள் இந்த அற்புதத்தைப் பார்த்து அயர்ந்து போனார்கள். விறகிட்டு எரித்துத்தான் என்ஜின் வேலை செய்தது. அது வேலை செய்யும் சத்தம் வெகு தொலைவுக்குக் கேட்கும். இந்த இயந்திர வேலை சாதாரண நடைமுறைக்கு வந்துவிட்டால் உருளையும் வடக்கயிறும் எதுவும் தேவையில்லை.

வேலையாட்களுக்குக் கூலி கொடுப்பதிலும் தோமா ஒரு புதிய சம்பிரதாயத்தை நடைமுறைப்படுத்தினான். நெல்லுக்கு பதிலாகக் கூலியைப் பணமாகக் கொடுப்பதுதான் அது. நெல் எங்கேயும் கிடைக்கும். பணத்திற்குத்தான் எல்லோருக்கும் தட்டுப்பாடு. ஊரிலிருந்த விவசாய வேலைக்காரர்களுக்கெல்லாம் தோமாவின் வயலில் விவசாயம் செய்ய உற்சாகமாக இருந்தது. அவ்வாறு பணம் கொடுத்துத் திட்டவட்டமான ஒரு வேலையை முறைப்படுத்துவது அதற்கு முன்பு இருந்ததில்லை. எங்கிருந்து தோமாவுக்கு இவ்வளவு பணம்? அந்தக் கதை ஊரில் சிலருக்குத்தான் தெரியும்.

முந்நூறு சக்கரம் சீதனம் வாங்கிக் கொண்டுதான் தோமா குஞ்ஞேலியைக் கல்யாணம்செய்துகொண்டான். அன்று குஞ்ஞேலி நெஞ்சு வற்றி, கன்னம் ஒட்டி, கண்கள் குழி விழுந்து எலும்பும் தோலுமாய் இருந்தாள். இன்று அதே குஞ்ஞேலி தடித்துக் கொழுத்துப் பார்ப்பதற்கு அழகியாக இருக்கிறாள். அவள் உடுத்தும் ஆடை சீமையிலிருந்து கொண்டுவரப்பட்டது. அவள் இப்போது ஒரு வெள்ளைக்கார துரையின் பெண்டாட்டி மாதிரி இருக்கிறாள். தோமா இப்போது ஒரு முக்கியமான ஆள். கிழக்குத் தொடர்ச்சி மலையில் குடியிருந்த காலத்தில் குஞ்ஞேலி நான்கு பிள்ளைகளைப் பெற்றாள். நான்காவது குழந்தை பிறந்ததும் இறந்து போயிற்று. அந்தக் குழந்தையின் தலைமுடி செம்பட்டையாக இருந்தது. அது ஒரு வெள்ளைக்கார துரையின் குழந்தையாக இருக்க வேண்டும்.

அதைப் பெற்றெடுத்தபோது குறைப் பிரசவமாக இருந்தது; வயிற்றிலேயே கொன்று விட்டதாகவும் கதை உண்டு. காட்டில் அதெல்லாம் சர்வசகஜம் என்று ஊரார் பேசிக்கொள்ளும் கதை முண்டம்பாடத்தில் விவசாயத்தைப் பார்க்க வெள்ளைக்கார துரை வந்தார். அதை வேடிக்கை பார்க்க ஊராரெல்லாம் ஓடி வந்தார்கள். துரையை ஊராரில் பலர் அப்போதுதான் முதல்முதலாகப் பார்க்கிறார்கள். "இந்த வெள்ளைக்காரருக்குக் கப்பம் கொடுத்துத் தான் நமது பொன்னுதம்புரான் ஊரை நாட்டாண்மை செய்கிறார்' என்ற விஷயத்தைச் சிலர் நினைத்துப் பார்த்தார்கள். இவர் இந்த ஊரின் ஆசாரங்களை மாற்றிவிட முனைகிறார், இனி இவருடைய பாஷையைக் கற்றுக்கொண்டால்தான் சர்க்கார் வேலை கிடைக்கும். இந்த மாதிரியான விஷயங்களையெல்லாம் தெரிந்து வைத்திருந்தவர்கள் ஊரில் சிலர்தான். துரைவட்டத்ரவுக்கு வந்து சாப்பிட்டு முடித்து, முண்டம்பாடத்து விவசாயத்தைக் கண்காணிக்கப் படகில் ஏறியபோது குஞ்ஞேலியைக் கைத்தாங்கலாகப் பிடித்து ஏற்றித் தன்னருகில் உட்காரவைத்துக் கொண்டார். தோமா கூடவே இருக்கிறான் என்பதோ, ஊரார் கூடி நின்று கொண்டிருக்கிறார்கள் என்பதோ துரையின்காதல் லீலைகளுக்குத் தடங்கலாக இல்லை. அந்த நிலா இரவில் முண்டம்பாடத்தின் வயல் வரப்புகளினூடே துரைக்குச் சமமாகக் குஞ்ஞேலி நடந்து சென்றாள். அவளுடைய இடது கை துரையின் இடுப்பைச் சுற்றிப் பற்றிக் கொண்டிருந்தது.

***

பாலூத்ரகுஞ்ஞன் தேவஸ்தானத்து விவசாயி. கல்யாணம் செய்து கொள்ளக்கூட அவன் மறந்துபோனான். காரணம், தேவஸ்தான நிலங்களில் விவசாயக் காரியங்களைச் செய்து முடிக்கவே அவனுக்கு நேரம் சரியாக இருந்தது. விவசாயம் நடக்கும் மாதங்களில் பாலூத்ர விவசாயி வயலுக்குச்சென்ற பிறகுதான் சூரியனே உதிப்பான். ஸ்தானிகள் தேவஸ்தானத்திற்குச் சொந்தமான நெல்லைத் தங்கள் சொந்தக் குடும்பங்களுக்கு எடுத்துச் செல்வதில் அவனுக்குக் கோபம் உண்டு. அதை வெளிப் படுத்த ஒரு சந்தர்ப்பம் வாய்த்தது. அந்த வருடம் தேவஸ்தானத் திற்குச் சொந்தமான எல்லா நிலங்களிலும் விதைக்க வேண்டு மென்று ஸ்தானிகளின் முன்பு வாதித்தான். மூவாயிரம் மரக்கால்

நிலத்து விதைப்பாட்டுக்கான நெல் தேவஸ்தானத்து அறைகளில் இல்லை. அதுவுமில்லாமல் ஸ்தானிகள் நடத்திய கடத்தல் காரண மாகத்தான் பாலூத்ர வாயைத் திறந்தான். கோடாந்த்ர அய்யப்பக் குறுப்பு, சீரட்ட இட்டுண்ணிக்கைமள், கோன்னோத்து ராமன் பிள்ளை ஆகிய இந்த மூவரைத் தவிர இன்னொரு நான்காவது ஸ்தானியும் இருக்கிறாரே மங்கலச்சேரி மாதுபிள்ளை. குடும்பத் திற்கு மாதுபிள்ளை கொண்டுபோன நெல்லின் அளவைப் பாலூத்ர சொன்னபோது மாதுபிள்ளை கோபத்தில் குதித்தார்.

அந்தக் கூலிக்காரனுக்கு ஒரு பாடம் புகட்டுவதாக பயமுறுத்தி விட்டுத்தான் மாதுபிள்ளை போனார். மற்ற ஸ்தானிகள் கடத்திக் கொண்டுபோன நெல்லின் கணக்கைப் பாலூத்ர சொன்னபோது அவர்கள் தலைகுனிந்து கொண்டார்கள். எப்படிக் கணக் கிட்டாலும் பாதி நிலத்தில் மட்டுமே விவசாயம் செய்வதற்கான நெல் தேவஸ்தானத்தில் இருந்தது. அந்த அளவுக்கு விவசாயம் செய்தால் போதும் என்று ஸ்தானிகள் கட்டளையிட்டார்கள். விவசாயி அதை எதிர்த்தான். இருக்கிற நெல்லைக்கொண்டு நிலம் முழுவதையும் உழுது விவசாயம் செய்யத்தான் தீர்மானித்திருப்ப தாகக் குஞ்ஞன் சொன்னான். தேவஸ்தானத்து நிலங்களில் வேலை செய்யும் புலையருக்கு தினமும் பாதிக்கூலி கொடுத்தபடி நிலம் முழுவதையும் அவன் விவசாயம் செய்தான். அந்த வருடம் நல்ல விளைச்சலும் கிடைத்தது. அறுவடை முடிந்ததும் பாக்கி நிற்கும் கூலி முழுவதையும் புலையர்களுக்குக் கொடுத்து விடுவதாக அவன் அவர்களிடம் சொல்லியிருந்தான். அவர்களுக்குப் பாலூத்ர குஞ்ஞன் மீது நம்பிக்கை ஏற்பட்டிருந்தது. அவர்களுக்குக் கண் கண்ட தெய்வமாக இருந்தான் குஞ்ஞன். ஆனால் கதிர் அறுத்துக் களங்களில் சேர்த்தபோது ஸ்தானிகள் வந்து களங்களைக் கைப்பற்றினார்கள். வழக்கம்போல் ஸ்தானிகளின் வீடுகளுக்கு நெல் நிறைத்த பரிசல்கள் போயின. மீதி நெல் தேவஸ்தானத்து அறைகளுக்குப் போய்ச் சேர்ந்தது. புலையர்களுக்கு அளக்க வேண்டிய மீதிக் கூலி நெல் குஞ்ஞனுக்குத் தேவைப்பட்டது. ஸ்தானிகள் கொடுக்கவில்லை. புலையர்களுக்குச் செய்ய நேர்ந்த நம்பிக்கை துரோகம் குஞ்ஞனை நிலைகுலையச் செய்தது. அந்தத் துக்கத்தை அவனால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. தேவஸ் தானத்துப் பெரிய நெல் களஞ்சியத்தின் திண்ணையில் ஒரு கயிற்றுக்கட்டிலில் குஞ்ஞன் உறங்குவான். ஒரு விடியற் காலையில் குஞ்ஞன் எழுந்திருக்கவே இல்லை. தன்னிடம் நம்பிக்கையும் அன்பும் கொண்டிருந்த புலையருக்கு நம்பிக்கைத் துரோகம் செய்ய

நேர்ந்ததில் அவருடைய இருதயம் நைந்து உயிர் பிரிந்திருக்கிறது.

கோன்னோத்து மூத்தவரான கல்லறய்க்கல் ராமன் பிள்ளையைக் கெட்டவராகக் காட்டுவதற்காக இட்டிராமன் பிள்ளை வழக்குத் தொடுத்தார். கோன்னோத்துப்பிள்ளை இனிமேல் நிலம் எதையும் எழுதிக்கொடுத்து விற்க முடியாது; கடன் வாங்க முடியாது; தேவஸ்தானத்துக் காரியங்களிலும் தலையிட முடியாது. எல்லாவற்றிலிருந்தும் விலக்கி வைத்தது நீதிமன்ற ஆணை. அந்தச் செய்தியைக் கேட்டு மத்தாயியின் மனம் அலைக்கழிந்து அலறியது. கடன் வாங்கிய பணத்திற்கு விலையாகச் சில்லறை நிலங்களை எழுதித்தருவதாகக் கோன்னோத்துப்பிள்ளை கூறியபோது தான் அதை ஏற்றுக் கொள்ளவில்லை. இனி ஒரு அங்குல நிலத்தைக்கூட விற்பதற்கு கோன்னோத்துப்பிள்ளைக்கு உரிமை இல்லை. கோன்னோத்துப்பிள்ளைக்கும் இருக்கப் பொறுக்கவில்லை. அவர் தன்னுடைய கூட்டாளிகளான ஸ்தானி களிடம் நேரில் உதவி வேண்டிப்போனார். புல்லாற்றுக் குடும் பத்துக் காரணவர் கோந்திக்கைமளுக்குத் தன்னை அண்டிவந்த கோன்னோத்துப்பிள்ளைக்கு உதவ வேண்டுமென்ற எண்ணம் உண்டு. ஆனால், இட்டிராமன்பிள்ளைக்குத் தெரியவந்தால், தனக்கு அடங்கி நடப்பவர்களையும் அவர் தனக்கெதிரே திருப்பிவிடுவார். மங்கலச்சேரி மாதுபிள்ளையைப் போய்ப்பார்த்த போது, அவர் இதைவிடப் பெரிய சிக்கலில் அகப்பட்டிருப்பதை அறிய நேர்ந்தது. மாதுபிள்ளையுடன் ஏற்பட்ட மோதலில் தளர்ந்து படுக்கையில் விழுந்துவிட்ட இரவிப்பிள்ளை இறப்பதற்கு முன்பு, மங்கலச்சேரியைச் சேர்ந்த சில நிலங்களை கணபதி அய்யருக்குப் பணயமாக எழுதிக் கொடுத்திருந்தார். மாதுபிள்ளையின் கிளைக்காரர்களுக்கு வாரிசுரிமையாக இருநத நிலங்கள் அவை. அன்று இரவிப்பிள்ளை எழுதிப்பதிவு செய்த பணயப்பத்திரங் களின் அடிப்படையில் முதலும் வட்டியும் கணக்கிட்டு கணபதி அய்யர் பிராது கொடுத்திருக்கிறார். அதற்கான சம்மனுடன் கோர்ட் சிப்பாய் வந்திருந்தான். மாதுபிள்ளை சம்மனை வாங்கிக் கொள்ளவில்லை. ஆனாலும் இனி வழக்கிற்குப் போயாக வேண்டும். அல்லது முதலும் வட்டியுமாக கணபதி அய்யரின் கடனைத் தீர்க்கவேண்டும். இரவிப்பிள்ளையின் மனைவி வாய்பரச்சேரி கொச்சுகுஞ்ஞியம்மையின் வேண்டுகோளின்படிதான் அவ்வாறு கடன் வாங்கியதாகச் சொல்வதுண்டு. மாதுபிள்ளையும் மனைவி கொச்சுமாணியம்மையும் சேர்ந்து இரவிப்பிள்ளைக்கும் அவருடைய கிளையினருக்கும் செய்த துரோகங்களுக்குப்

பதிலாகப் பழிதீர்த்துக்கொண்டாள், கொச்சுஞ்ஞியம்மை. இரவிப்பிள்ளை இறந்த பதினாறாம்நாள் சடங்கு முடிந்து கொச்சுஞ்ஞியம்மை பிறந்த வீட்டிற்குத் திரும்பிப்போனபோது மீதிக் காலத்தைக் கழிப்பதற்கான சொத்தைச் சேர்த்துக் கொண்டு தான் போனாள். இரவிப்பிள்ளை இறப்பதற்கு முன்பே அதற்கான முன்னேற்பாடுளை அவள் செய்துவிட்டிருந்தாள். மாது பிள்ளைக்கும் கிளைக்காரர்களுக்கும் அதுபெருத்த அடி. இரவிப்பிள்ளை வாங்கிய கடனுக்கு இனி மாதுபிள்ளைதான் நீதிமன்றம் ஏறியாக வேண்டும்.

கோன்னோத்து வல்யச்சனைக் கெட்டவராக்கிக் காட்டும் நீதிமன்றச்சட்டம் உண்டானபோது கணபதி அய்யர் அதிர்ந்து விட்டார். இனி எல்லாக் குடும்பங்களிலும் இதைப்போன்று மருமகன்மார்கள் காரணவர்களுக்குக் கெட்ட பெயர் உண்டாக்கு வதற்காக பிராது தாக்கல் செய்வார்கள். காரணவர்கள்தான் மடத்திலிருந்து ஆயிரமும் பதினாயிரமுமாகக் கடன் வாங்கிக் கொண்டிருக்கிறார்கள். எல்லாக் கடன்களையும் முதலும் வட்டியுமாகக் கணக்குத் தீர்த்துக்கொள்ளத் தாமதிக்கக் கூடா தென்று சுவாமிக்கு ஒரு பொறிதட்டியது. எல்லாக் குடும்பத்துக் காரணவர்களுக்கும் எதிராக நீதிமன்றங்களில் அவசர அவசரமாகப் பிராது தொடுக்க அவர் தொடங்கினார். கணபதி அய்யர் கொடுத்த பிராதுகளின்மீது சம்மன்போகாத காரண வர்களே இல்லை. அப்படித்தான் மாதுபிள்ளைக்கும் சம்மன் கிடைத்தது. மாதுபிள்ளை கெட்டிக்காரர். அப்படிப்பட்ட இரவிப் பிள்ளையை ஒதுக்கி மூலையில் கிடத்திய கெட்டிக்காரர். அப்படிப்பட்ட மாதுபிள்ளைக்கே இப்போது என்ன செய்வதென்று தெரியவில்லை. அவருடைய தாட்டிகமும் பெருமையும் எங்கே போயின என்பது காரணவர்களுக்கு வியப்பாக இருந்தது.

கோர்ட் சிப்பாய் கோடாந்த்ரய்க்கும் வந்தான். தனக்குக் கீழ்ப்பட்ட மருமகன்மார்கள் இல்லாததனால் தன் பெயரைக் கெடுக்க யாரும் வரமாட்டார்கள் என்றுதான் அய்யப்பக்குறுப்பு எண்ணியிருந்தார். ஆனால் அவருக்கும் சம்மன் கிடைத்தது. பதினையாயிரம் மரக்கால் நெல்லுக்கும் வட்டிக்கும் கணபதி அய்யர் பிராது கொடுத்திருந்தார். இந்தக் கடனை எப்படித் தீர்ப்ப தென்று குறுப்புக்குப் புரியவில்லை. கோடாந்த்ரக் குடும்பம் இருக்கும் பண்ணைவீடும் சில நிலங்கள் மட்டும் இனி எஞ்சியிருக் கின்றன.

கோர்ட் சிப்பாய் ஏறி இறங்காத குடும்பங்களே இல்லை.

ஊர் முழுவதும் கணபதி அய்யரின் வலைக்குள்ளேதான். ஒவ்வொரு வீட்டுக்காரரும் கையில் கிடைத்த காகிதங்களை வைத்துக்கொண்டு அங்குமிங்குமாக ஓடினார்கள். நீதிமன்றத்திற்குப் போவதற்கு முன்பு சிலர் சுவாமியை நேரில் சென்று பார்த்தார்கள். ஊரில் சத்தியத்திற்கு இடமில்லை. சமூகத்தவர்களுக்கு தலைவர்கள் இல்லாமல் போனார்கள். குடும்பங்களுக்குக் காரணவர்கள் இல்லாமல் போனார்கள். பிராமணபக்தி இல்லாது போயிற்று. இந்த நிலையில் கடன் கொடுத்த முதலும் வட்டியும் தனக்கு வந்து தீரவேண்டுமென்று சுவாமி சொல்லிக் கொண்டிருந்தார்.

கனக்குளத்து பப்புபிள்ளைக்கும் சம்மன் வந்தது. பப்பு பிள்ளையைப் போன்று வாக்குச் சுத்தமானவரும் சத்தியவந்தனும் வேறு யாரும் கிடையாது. எல்லா வருடமும் கணபதி அய்யரிட மிருந்து வாங்கும் நெல்லை அசலும் வட்டியும் சேர்த்து ஒழுங்கு முறையாக அளந்துகொடுத்துவிடுவார். ஆற்றுக்குப்பக்கத்தில் வண்டல் படியும் நூறு மரக்கால் நிலத்தில் பப்புபிள்ளை விவசாயம் செய்து வந்தார். முதல்தரமான விளைச்சல் கிடைக்கும். அதற்கு அடுத்திருக்கும் ஐந்நூறு மரக்கால் நிலம் சுவாமியுடையது. இதைக் குத்தகைக்கு விட்டிருந்தார். எல்லா வருடமும் ஐந்நூறில் குத்தகைதாரரிடம் நடைமுறையிலுள்ளதைவிட அரைப்பங்கு அதிகமாக சுவாமி கேட்பார். ஆற்றருகிலுள்ள நூறு மரக்காலையும் இந்த ஐநூறுடன் சேர்த்துக் கொடுத்தால் ஐந்நூறில் விவசாயம் பிரமாதமாக இருக்கும். அப்படிக் கிடைத்தால் குத்தகையைக் கூட்டித் தருகிறேன் என்று குத்தகைக்காரன் கூறினான். அன்று முதல் பப்புபிள்ளையின் நூறு மரக்கால் நிலத்தைச் சொந்தமாக்கிக் கொள்ளவேண்டுமென்ற எண்ணம் சுவாமிக்கு வந்தது. இந்தக் குறிக்கோளோடுதான் பப்புபிள்ளையின் பெயருக்கும் பிராது தாக்கல் செய்தார். ஆயிரத்து ஐந்நூறு மரக்கால் நெல்லுக்குப் பிராது. அந்த ஆண்டு வாங்கிய எண்ணூறு மரக்கால் நெல் மட்டும்தான் பப்புபிள்ளை கொடுக்க வேண்டியது. அதையும் அடுத்த அறுவடைக்குப் பிறகுதான் கொடுக்க வேண்டியது. நேர்மையானவ ரான பப்புபிள்ளை விவரம் புரியாமல் மடத்திற்குச் சென்று கணபதி அய்யரைப் பார்த்தார். எந்த நிலுவையும் வைத்துக் கொள்ளாத தன்னுடைய பெயரில் பிராது அனுப்பியது எதற்காக என்று பலர் கூடியிருக்க பப்புபிள்ளை கேட்டார். மடத்தில் கள்ளக்கணக்கு எதுவும் கிடையாது என்பது சுவாமியின் வாதம். பல வருஷங்களா மடத்தோடே தொடர்பு வச்சிருக்கீங்ளே, வருஷா வருஷம் நாலஞ்சி மரக்கா நெல்லு குறைவாவே அளந்து

வந்திருக்கலாம். அந்தக் குறைநெல்லும் அதற்கான வட்டியுமா இருக்கலாம். சுவாமியின் இந்த வார்த்தைகளைக் கேட்டதும் பப்பு பிள்ளையின் உடம்பு சிலிர்த்தது. கோபத்தை அடக்க முடிய வில்லை.

"நீரென்னவே இப்படிப் பேசறது? நீரெல்லாம் ஒரு பிராமணனா? பாண்டி நாட்டிலே எங்கிட்டோ கிடந்த மறவன். பறையனைவிடக் கீழே! பறையனுக்குச் சத்தியமுண்டு. மறவனுக்கு அதுவுமில்லே. தூ! உம்ம மடமும் நீரும் சத்தியமும்!"

பப்புபிள்ளையின் குரல் பெரியது. ஊரெல்லாம் அது கேட்கும். தானுண்டு தன் வேலையுண்டு என்றிருப்பவர். அனாவசியமாக எதுவும் பேசாத பப்புபிள்ளை, கணபதி அய்யரை மறவன் என்று கூப்பிட்டார். கணபதி அய்யரும் இப்படியொரு பேச்சை முதல் முதலாக இப்போதுதான் கேட்கிறார். ஊர் முழுக்க இந்தப் பேச்சு பாவியது. எல்லோருடைய பெயரிலும் பிராது ஃபைல் செய்திருந்த கணபதி அய்யரை எல்லோரும் வெறுத்திருந்த சமயம் அது. அந்த நிகழ்ச்சியினால் ஊரில் எல்லோரிடையிலும் பப்புபிள்ளை மரியாதைக்குரியவரானார். ஊர் முழுவதையும் உலுக்கியெடுத்த இந்த சம்பவத்திற்குப் பிறகு கணபதி அய்யர் தன் இருப்பிடமான மடத்தைவிட்டு வெளியே வரவே இல்லை. இப்போது கொடுக்கல் வாங்கல் செய்வது அவருடைய மகன்தான்.

***

கோடாந்த்ர வளாகத்தில் நாகபூஜைத் தளங்கள் ஒவ்வொரு நாளும் பெருகின. இதனால் அந்த வனங்கள் முழுவதுமே ஒரு காடாக மாறிவிட்டது. எட்டுக்கட்டு மனையின் மூலைக்கால்கள் நைந்து சிதைந்து விட்டங்கள் பிடிப்புவிட்டுக் கீழே உட்கார்ந்து விட்டன. வடக்குக்கட்டின் அடுக்களைப் பகுதி மட்டும் கூரை வேயப்பட் டிருந்தது. நங்கையாருக்கு அதிக வயதாகி உடம்பெல்லாம் நடுக்கம் பாதித்திருந்தது. கொச்சுபெண்ணு குஞ்ஞும்மை எப்போதும் ஏதோ சூனியத்தைப் பார்த்தவாறிருந்தாள். வெடி வெடித்தாலும் குஞ்ஞும் மைக்குத் தெரியாது. ஒருநாள் திரிபுரசுந்தரியைக் காணாமல் நங்கையார் அவளைத் தேடியபடி வயலுக்குச் சென்று பார்த்த போது கந்தர்வனின் கோயிலுக்கு அடுத்து மகள் எதையோ பார்த்துக் கொண்டு நின்றிருப்பதைப் பார்த்தாள். சற்று தூரத்தில் இரண்டு பாம்புகள் பிணைந்து கிடந்தன. ஆண்பாம்பும், பெண்

பாம்புமாக முயங்கிக் கொண்டிருந்தன. பாம்புகள் முயங்குவதைப் பார்த்துக் கொண்டுநிற்பது ஆபத்தானதாகும். வாலிப வயதை எட்டிவிட்ட பின்னரும் திரிபுரசுந்தரி அதையெல்லாம் புரிந்து கொள்ளும் வளர்ச்சியைப் பெற்றிருக்கவில்லை. நங்கையார் அவளைப் பிடித்து இழுத்துக் கொண்டுபோனாள். இனிமேல் அந்த வயலில் முட்டையிடும் பிராயத்துப் பாம்புகள் அதிகரிக்கும். அப்படி அடர்ந்த காடு அந்த வளாகத்தில். கந்தர்வனின் கோயிலைப் போலவே கோடாந்த்ர எட்டுக்கட்டு மனையும் பார்வைக்குத் தென்படாமல் காண முடியாததாகிவிடும். அங்கே குள்ளநரி ஊளையிடும். மரண அறிவிப்புக் கொடுக்கும் காலன் கோழிகள் மரங்களின் உச்சியில் கூடு கட்டும். ஒரு காலத்தில் அங்கே ஒரு வீடு இருந்ததாக அடுத்து வரும் தலைமுறை பிற்காலத்தில் பேசிக்கொள்வதாயிருக்கும்.

கோடாந்த்ர அடுப்படியைச் சேர்ந்த அறையில்தான் நங்கையார் குஞ்ஞும்மையும் திரிபுரசுந்தரியும் தூங்குவார்கள். நடுவில் நங்கையார் அந்தப் பக்கமும் இந்தப் பக்கமும் அம்மாவும் மகளும். இரவு முழுவதும் அகல்விளக்கு எரிந்துகொண்டிருக்கும். மல்லாந்து படுத்திருக்கும் நங்கையாரை அப்படி இப்படிப் புரண்டு படுக்க அம்மாவும் மகளும் விடுவதில்லை. இருவரும் அவளைக் கட்டிப்பிடித்தபடித் தூங்குவார்கள். புயலடித்த ஒரு நள்ளிரவில் காற்றின் இரைச்சலை மீறிக்கொண்டு ஓர் அலறல் கேட்டது. நங்கையார் மட்டும் கண்விழித்தாள். எமகிங்கரர்களின் அலறல் சத்தம் என்று அவளுக்குத் தோன்றிற்று. பொழுது விடிந்தது. உலகம் நிசப்தமாக இருந்தது. கோடாந்த்ரயில் மாங்காய் காம்பொடிந்து கீழே விழும் ஓசைதான் இரவில் கேட்ட ஓசை. முந்தின நாள் தூங்குவதற்காகப் படுத்த நங்கையார் விழித்தெழவில்லை. திரிபுரச் சுந்தரியும் குஞ்ஞும்மையும் நங்கையாரை உசுப்பிக் கூப்பிட்டார்கள். அசையவில்லை. இருவருக்கும் மரணம் என்றால் என்னவென்று தெரியாது. திரிபுரசுந்தரி குடிசை வீட்டிற்குப் போய் மூச்சாதானைக் கூப்பிட்டுக் கொண்டுவந்தாள். நங்கையாரின் மரணச் செய்தியைக் கேள்விப்பட்டு சமூகத்தவரெல்லாம் கூடிவிட்டார்கள். கோடாந்த்ர வளாகத்தில் அவளை எரித்தார்கள். குஞ்ஞும்மையும் திரிபுர சுந்தரியும் அழுது அரற்றவில்லை. திரிபுரசுந்தரிக்கு அழக்கூடத் தெரிந்திருக்கவில்லை. குஞ்ஞும்மைக்குக் கண்ணீர் வற்றிப் போயிருந்திருக்கலாம்.

அந்தத் தாயையும் மகளையும் எங்கே தங்கவைப்பது என்பது மூத்தாசானின் மனைவி அகவூர் நாணியின் சிந்தனையாக

இருந்தது. குடும்பம் சீரழிந்ததில் அகவூர் நாணிக்கும் பங்குண்டு என்றாலும் சித்ரவதைகள் கண்டு அவளுடைய மனமும் இப்போது கசிவதாக இருந்தது. காடு மண்டிக்கிடக்கும் எட்டுக்கட்டு மனையி லிருந்து குஞ்ஞும்மையையும் மகளையும் அவள் மச்சுவீட்டுக்குக் கூட்டிக்கொண்டு போனாள். மூத்தாசான் இதையெல்லாம் கண்டு கொள்ளவே இல்லை. கணபதி அய்யரின் பிராதியின்மீது அவர் வழக்குப்போட்டார். சுவாமி வைத்திருக்கும் கணக்குச் சரியில்லை என்றும், கடன் வாங்கியதைத் திருப்பிக் கொடுத்தது எதையும் சுவாமி வரவு வைக்கவில்லை என்றும் குறுப்பு வாதிட்டார். அவர் சொல்வது சரிதான். ஆனால் திருப்பிக் கொடுத்த தொகைக்குக் கையெழுத்து எதுவும் இல்லை. கணபதி அய்யர் ஜெயித்தார். கோடாந்த்ர ஜப்தியாயிற்று; காலி செய்து வெளியேற வேண்டிய வழக்கின் நடவடிக்கைகளின் ஒவ்வொரு கட்டத்திலுமாக முதலில் குஞ்ஞும்மையும், அடுத்து திரிபுரசுந்தரியுமாக இறந்தார்கள். அகவூர் நாணியை அவளுடைய குடும்பத்திற்கு அவர் அனுப்பிவைத்தார்.

ஆண்டுகள் பல கழிந்தன. கோடாந்த்ர மூத்தகுறுப்பு தினமும் காலையில் கோயிலில் பெரிய அடுப்படியின் வாசலுக்குச் செல்வார். சேஷய்யன் ஒரு பிடிசோற்றை எடுத்து தாமரை இலையில் வைத்துக் கொடுப்பார். மதியம் உச்சிக்கால பூஜை நைவேத்தியச் சோறும் கிடைக்கும். ஸ்தானி என்ற நிலையிலுள்ள வாரிசுச் சலுகைகள் இவை. கோடாந்த்ர மனை அழிந்துவிட்ட போதிலும் மூத்தகுறுப்பு சாகும்வரை ஸ்தானிக்கான சலுகைகள் கிடைத்துக் கொண்டிருக்கும். எல்லாக் காரியங்களிலும் கோடாந்த்ரக் குறுப்பின் ஒப்புதல் கையெழுத்து இருக்க வேண்டும் என்பதே இதற்குக் காரணம்.

***

மும்மூர்த்திகள்! இப்படித்தான் அவர்களை ஊரில் அழைத்தார்கள். உப்பம்பறம்பில் குஞ்ஞன், முக்கோலில் பாமன் கர்த்தாவு, சூதாரத்து இட்டுண்ணான்—அவர்கள் மூவரும் சமவயதுக்காரர்கள்; கூட்டாளிகள்.

இளவட்டப் பருவத்தில் மங்கலச்சேரியில் உழவுக் காரனாய் இருந்தவன் குஞ்ஞன். மங்கலச்சேரிக்குச் சொந்தமான நூறு மரக்கால் நிலத்தைக் குத்தகைக்கு எடுத்து குஞ்ஞன் விவசாயம் செய்துகொண்டிருந்த காலம். அப்போது இரவிப்பிள்ளையும்

அவனது மனைவி கொச்சுஞ்ஞியம்மையும் சேர்ந்து குஞ்ஞனிடம் சொன்னார்கள். "குஞ்ஞா, நீ அந்த நாணிப் பெண்ணுக்கு ஒரு புடவை வாங்கிக் கொடுத்து அவளைக் கல்யாணம் பண்ணிக்கோ." வாய்பரச்சேரியில் இருந்தாள் நாணி; கொச்சுஞ்ஞியம்மையின் சகோதரியின் மகள். தான் ஜாதியில் தாழ்ந்தவன் என்று சொல்லி குஞ்ஞன் சம்மதிக்க மறுத்தான். அதற்குக் காரணம் உண்டு. அவன் மங்கலச்சேரியில் ஒரு பெண்ணைக் காதலித்தான்—இரவிப் பிள்ளையின் ஓர் உறவுக்காரியான தேவிக்கு அவனைப் பிடித் திருந்தது. ஆனால் உழவுக்காரன் குஞ்ஞன் மங்கலச்சேரியில் ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்ள முடியுமா? ஆதரவில்லாத காதலன் ஓர் அந்திநேர மயக்கத்தில் காதலியிடம் தொண்டை இடறக் கேட்டான், நான் என்ன செய்யட்டும், தேவி? தேவி சொன்னாள் "என்கூட எப்பவும் ஆசையா இருந்தாப் போதும்." இரவிப்பிள்ளையின் கட்டளையை மீறக் குஞ்ஞனால் முடியவில்லை. அடுத்த ஆவணியில் வாய்பரச்சேரி அறவாதுக் கல்லில் குஞ்ஞன் நாணிக்குப் புடவை கொடுத்துத் தாலி கட்டினான். ஆனால், குஞ்ஞன் ஒருபோதும் நாணியைப் பார்க்கப் போகவில்லை. நாணி எல்லா இரவுகளிலும் அவனுக்காகக் காத்திருந்தாள். அவள் தினமும் கோயிலுக்குச் சென்று கடவுளிடம் தன் துயரத்தை முறையிட்டுக் கொள்வாள். கணவனுக்காக வேண்டிக் கொள்வாள். ஆனால், அவன் அவளை நாடிச் சென்ற தில்லை. குஞ்ஞனின் விவசாயம் செழித்தது. இரவிப்பிள்ளை அவனுக்கு உதவியாக இருந்தார். குஞ்ஞன் நாணிக்குத் தாலிகட்டிய பிறகு அவளிடம் போகவே இல்லையென்று ஒரு சமயம் கொச்சுஞ்ஞியம்மை இரவிப்பிள்ளையிடம் சொன்னாள். இரவிப் பிள்ளையால் என்ன செய்ய முடியும்! குஞ்ஞனாலும் தேவியை மறக்க முடியவில்லை. இதற்கிடையே தேவிக்குக் கொடுபுன்னக் காரனான ஒரு ஸ்தானிநாயர் புடவை கொடுத்துத் தாலி கட்டினான். கல்யாணச் சாப்பாட்டுக்குக்கூட வழி செய்ய இயலாமல் நின்ற பரிதாபநிலை குஞ்ஞனுக்கு. தேவி ஒரு கற்சிலை போல நின்று புடவையை வாங்கிக் கொண்டாள். ஒரு துணியை வாங்கிக் கொள்வதில் என்ன இருக்கிறது? அவளுடைய இருதயத்தில் வேறொருவன் இருந்தான். தேவிக்குப் புடவை கொடுத்தவனின் மாமா இறந்ததும் அவன் அந்தக் குடும்பத்தின் காரணவன் ஆனான். அங்கே இனிமேல் குடும்பத்தின் மூத்தவள் என்ற பொறுப்புடன் இருந்து செயல்பட வேண்டியவள் தேவிதான். கணவன் என்ற முறையில் அவன் தன் குடும்பத்திற்கு அழைத்துப்

போகவந்தான். தேவி போகவில்லை.

இரவிப்பிள்ளையின் காலம் கழிந்தது. மாதுபிள்ளையின் பிரதாப காலமும் அஸ்தமித்தது. மங்கலச்சேரியில் பெண்கள் கொடும் பட்டினியில் விழுந்தார்கள். தேவியின் நிலையை நினைக்கும்போது குஞ்ஞுனுக்குப் பொறுக்க முடியவில்லை. தன்னை எண்ணித்தான், கணவர் வந்து அழைத்தபோதும் அவள் போகாமலிருந்தாள். அன்று கணவனுடன் கூப்பிட்ட குரலுக்குப் போயிருந்தாளானால் எவ்வளவு செல்வாக்குடன் வாழ்ந்து கொண்டிருக்க வேண்டியவள்! ஒரு வீடு கட்டிக்கொடுத்து தேவியைக் குஞ்ஞுன் காப்பாற்ற வேண்டும் என்பது இட்டுண்ணானின் அபிப்பிராயம். ஆனால், தான் புடவை கொடுத்த நாணியுடனான பந்தம் ஒழியாமல் அது சரியில்லை என்பது குஞ்ஞுன்பிள்ளையின் எண்ணம். வருடங்கள் கழிந்த பின்னும் நாணி அவனுக்காகக் காத்திருக்கிறாள்.

பரமன்கர்த்தாவின் குடும்பத்தாரோ, முன்னாலேயே ஜாதிப் பிரஷ்டம் செய்யப்பட்டவர்கள். மரக்கான் கர்த்தாவு என்பதாக அந்தக் குடும்பத்தவர்களுக்கு மரியாதைப் பெயருண்டு. கோன்னோத்துக் குடும்பத்திற்குப் பரிசலோட்டியாய் இருந்தான் பரமன் கர்த்தாவு. கர்த்தாவை எதிர்பார்த்துக் காத்திருக்கும் ஒரு குஞ்ஞும்மை இருந்தாள் அங்கே—காளிக்குஞ்ஞும்மை. அவளுடைய எந்த ஆசையையும் கர்த்தாவு நிறைவேற்றிக்கொடுப்பான். பரமன் கர்த்தாவு மூலமாக அவள் கர்ப்பிணியானாள். ஆனால் பிரசவத்தின்போது காளிக்குஞ்ஞும்மை இறந்துபோனாள். முன்பே குஞ்ஞும்மையின் சம்பந்தக்காரனாக வயறன் போற்றி என்றொருவன் இருந்தான் என்ற போதிலும் அந்தக் குழந்தையின் அப்பன் பரமன் கர்த்தாவு என்பதை அறியாதவர்கள் கிடையாது. அந்தக் குழந்தைக்கு லட்சுமி என்று பெயரிட்டார்கள். கர்த்தாவு விரும்பி வைத்த பெயர் அது. குழந்தைக்கு வேண்டியதையெல்லாம் அவன் கொண்டுவந்து கொடுத்தான். குழந்தை லட்சுமிக்குக் கர்த்தாவு என்றால் ரொம்பப்பிடிக்கும். ஆனால் அவள் பரமன் கர்த்தாவை அப்பா என்று மட்டும் கூப்பிடமாட்டாள்; யாரும் அப்படிச் சொல்லிக்கொடுக்கவும் இல்லை. லட்சுமி வளர்ந்த பின்னர் அவளுக்கு ஒரு புடவை கொடுத்தான். குழந்தைகளும் பிறந்தார்கள். கோன்னோத்துக் குடும்பமும் நொடிந்தது. லட்சுமிக்கும் குழந்தைகளுக்கும் செலவுக்கான நெல்லை மாதந்தோறும் பரமன்கர்த்தாவு கொண்டு போய்க்கொடுத்துக் கொண்டிருந்தான். ஆனால் கோன்னோத்துக் குடும்பத்தில் மற்ற பெண்களெல்லாம்

பட்டினி கிடக்கும்போது லட்சுமியும் குழந்தைகளும் மட்டும் பிரத்தியேகமாக அரிசிச்சோறு சாப்பிட முடியுமா? கர்த்தாவு கொண்டுவந்து கொடுக்கும் நெல் இரண்டு மூன்று நாட்களில் தீர்ந்துவிடும். அதற்குப்பிறகு பட்டினிதான். எதுவும் சாப்பிடாததால் கண்கள் செருகி, முகம்வாடிச் சோர்ந்திருக்கும் தன் மகளையும் குழந்தைகளையும் பார்க்கும்போது பரமன் கர்த்தாவின் தொண்டை கரகரக்கும். இருதயம் நொந்து கர்த்தாவு இதை யெல்லாம் சொல்வான். இதற்குக் குஞ்ஞன்பிள்ளை ஒரு பரிகாரம் கூறினான்; நீ அந்த ஈர்யேத்ர மனையிடத்திலே ஒரு வீடுகட்டு. பிறகு அவளையும் குழந்தைகளையும் கூட்டிக்கொண்டு போய் அங்கே பராமரிச்சிக் காப்பாத்து. பரமன் கர்த்தாவுக்குத் தன்னுடைய நண்பனின் உபதேசம் ஏற்றுக்கொள்ளக்கூடியதாக இருந்தது. அவ்வாறாக ஈர்யேத்ர மனையிடத்திலும் கோன்னோத்துக் குடும்பத்தின் ஒரு கிளை உண்டாயிற்று.

இட்டுண்ணானின் கதை இதைவிடச் சுவையானது. வாட்ட சாட்டமான ஆள் இட்டுண்ணான். எவரையும் பொருட்படுத்தாத குணம். அவன் மூன்று கல்யாணங்கள் செய்திருந்தான். முதலில் புடவை எடுத்துக் கொடுத்துச் சம்பந்தம் செய்த பெண்ணுக்கு இவனைப் பிடிக்காதிருந்தது. புடவை கொடுத்த அன்று இட்டுண்ணான் இரவுச் சாப்பாடு முடித்து அந்தப் பெண்ணின் வீட்டிற்குச் சென்றான். அவள் கதவைத் திறக்கவில்லை. வெளியில் பாயைச் சுருட்டி வைத்துவிட்டிருந்தாள். பெண்ணுக்கு அவன் தேவையில்லை என்பதன் அடையாளம் அது. எதுவும் பேசாமல் இட்டுண்ணான் திரும்பிப் போய்விட்டான். இரண்டாவதாகப் புடவை கொடுத்த பெண்ணுக்கு மற்றொரு கள்ளத்தொடர்பு இருப்பதை அறிந்தபோது அவளையும் நிராகரித்தான். இந்த அனுப வங்களினால் இட்டுண்ணானுக்குச் சில கொள்கைப்பாடுகள் ஏற்பட்டன. ஒரு பெண்ணிடம் அவளுடைய விருப்பம் என்ன வென்று காரணவர்கள் கேட்டறிய வேண்டும். பெண்ணானாலும் ஆணானாலும் கல்யாணம் என்று ஒன்று நடந்துவிட்டால் நெறிமுறையோடு இருக்கவேண்டும். புடவை கொடுத்து வாங்கிக் கொண்டுவிட்டால் அவள் சாகும்வரையிலும் அவனுடைய வளாகவே இருக்க வேண்டும். அவன் அவளை விட்டுவிட்டுப் போக முடியாது. அன்றுவரை கேட்டறியாத விஷயங்களை இட்டுண்ணான் சொன்னான். சில நாட்கள் கழித்து இட்டுண் ணானின் கொள்கைகளுக்கு ஏற்றபடியான ஒரு பெண் கிடைத்தாள்—அரய்க்காட்டு கொச்சுநாணி. அவர்களுக்குள் நல்ல

பொருத்தம். சக்திக்கு ஏற்ற சங்கரன். கொச்சுநாணிக்காகவே தெய்வம் இட்டுண்ணானைப் படைத்ததாகவே தோன்றும். அவனைப்போலவே அவளும் கறுத்து, தடித்து, குள்ளமானவள். கொச்சுநாணி முன்னதாக எவரையும் காதலித்ததில்லை. யாரும் அவளையும் காதலித்ததில்லை. அவன் அவளை அழைத்துக் கொண்டு போனான். அவர்கள் ஒரு தனிக்குடும்பமாக வாழ்ந் தார்கள். அன்றுவரைக்கும் அந்த ஊரில் நடைமுறையில் இல்லாத ஒரு விஷயம் அது.

பழைய ஸ்தானிகளின் பிரதாபமெல்லாம் போயிற்று. இப்போது மும்மூர்த்திகள் என்பதாகப் பெயர்பெற்ற மேற்கூறிய மூன்று பேருந்தான் அந்த சமூகத்தவர்களின் தலைவர்கள். ஊரில் எந்த விஷயமாக இருந்தாலும் உப்பம் பறம்பில் குஞ்ஞன் பிள்ளையை நாடிச் செல்வார்கள். குஞ்ஞன்பிள்ளை தனியாக அல்ல, மும்மூர்த்திகள் கூடி ஆலோசித்துத் தீர்மானம் செய்வார்கள். அவர்கள் சேர்ந்துவிட்டால் முடியாத காரியம் கிடையாது. அவர் களைப் புறக்கணிப்பவர்களுக்கு அதனால் தண்டனை கிடைக்கும். எல்லோருக்கும் அவர்களைக் கண்டால் பயம். முன்பு கூலி வேலைக்காரார்களாக இருந்தவர்கள் அவ்வாறாக ஸ்தானி களுக்குச் சமமாக ஆனார்கள். முாட்டு மரங்கள் பட்டுப்போகத் தொடங் கியதும், கீழே வளர்ச்சி தடைப்பட்டிருந்த பாழ்மரங்கள் வளர்ந்து தழைத்துப் பந்தலிடுகின்றன. மூவருக்கும் இப்போது நெல்லாகவும் பணமாகவும் நல்ல சம்பாத்தியம். மற்றவர்களுக்கு உதவும் நல்ல மனமும் உண்டு.

தேவஸ்தானத்தில் அன்றாட அன்னதானத்திற்குக்கூட நெல் இல்லை. கணக்குவழக்குப் பார்க்கக்கூட ஆளில்லை. முன்பணம் போட்டு நடத்த முடிந்த ஒரு நிர்வாகி அமைந்தால் விவசாயம் நடக்கும். அதற்கான ஒரே ஓர் ஆள்தான் உண்டு. உப்பம்பறம்பில் குஞ்ஞன்பிள்ளை. ஆனால் யார்போய் அதைச் சொல்வது? ஊரில் மிகவும் வயதானவர் தெருமத்து கோந்திக்குறுப்புத்தான். வயது நூறுக்குப் பக்கத்தில் என்றபோதிலும் தினமும் கோயில் தரிசனத் திற்கு வந்து போகிறவர். கோயில் சீரழிந்து கொண்டிருப்பதில் கிழவருக்குத் துக்கம். ஒருநாள் கோந்திக்குறுப்பு உப்பம்பறம்புக்குப் போய்க் குஞ்ஞன் பிள்ளையிடம் சொன்னார் 'குஞ்ஞு தேவஸ்தானத்து நிர்வாகத்தை ஏற்கணும்' கோயில் நிர்வாகத்தைத் தொட்டால் கையைச் சுடும் என்று குஞ்ஞன்பிள்ளைக்குத் தெரியும். ஒதுங்கித் தப்பித்துக் கொள்ளப்பார்த்தான். கோந்திப் பெரியவர் வற்புறுத்தியபோது அவன் சம்மதித்தான். மும்மூர்த்திகள் கூடி

ஆலோசித்த பின்னர்தான் முடிவெடுத்தார்கள். அவ்வாறாக உழவு நடவுக்காரனாயிருந்த குஞ்ஞுண்பிள்ளை கோயிலின் நிர்வாகி யானான். அந்த வருடம் தேவஸ்தானத்து விவசாயம் நன்றாக இருந்தது.

வகுப்பில் மிகவும் கெட்டிக்கார மாணவன் கேசவன். சீலாந்திப்பிள்ளி கல்யாணியம்மை தன் மகனுக்காகத்தான் உயிர்வாழ்ந்து கொண்டிருந்தாள். கேசவனுடைய வகுப்பில் ஒரு பெண் படித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய பெயர் கொச்சு தேவி. கேசவனுக்குக் கொச்சுதேவியைப் பிடிக்கும். அவனுடைய சிநேகிதியின் விவகாரங்களை அவன் அம்மாவிடம் சொல்வான். அப்படிச் சொல்லும்போது அவனுடைய முகம் ஒளிர்வதாகக் கல்யாணியம்மைக்குத் தோன்றும். ஒருதடவை அவன் அம்மா விடம் கேட்டான். அம்மா, என் அப்பா எங்கே? அங்கே தொலைவில் திருவனந்தபுரத்தில் இருப்பதாக எந்தத் தயக்கமும் இல்லாமல் அம்மா பதில் சொன்னாள். பின்பு ஒருநாள் கேட்டான். கொச்சுபிள்ளை யாரென்று? உன்னோட அப்பா பெயர்தான் அது என்று சொன்னாள் கல்யாணியம்மை. அம்மாவுக்கு மகனுடைய சிநேகிதியைப் பற்றி மேலும் தெரிந்துகொள்ளவேண்டும். அவள் நல்ல பெண் என்பதாக அவன் கூறும்போது, மகன் விரும்பும் அந்தப் பெண்ணைப் பார்க்க அவளுக்கு ஆர்வம் ஏற்பட்டது. அன்புக்காக ஏங்கிக் கொண்டிருப்பவள் கல்யாணியம்மை. எங்கிருந்தும் அன்பு கிடைக்கவில்லை. ஏமாற்றங்களே கிடைத்திருக் கின்றன. ஆனால் நிராசையினால் மனம் இன்னும் கலங்கிவிட வில்லை. எப்போதும் பிரகாசமாகவே அவளுடைய முகம் இருந்தது.

கேசவன் ஆறாம் வகுப்புக்குப் போனான். அந்தப் பள்ளிக் கூடத்தில் படிப்பு முடிந்துவிட்டது. ஒருவேலை கிடைத்தது. கொச்சு தேவியைக் கல்யாணம் செய்துகொண்டு வாழ்வதான வாழ்க்கையை அவன் கனவு கண்டான்.

கொச்சுதேவிக்கு அக்கா ஒருத்தி உண்டு—கொச்சூட்டி. அவளுடைய மாமன் மகனுக்கு அவளைக் கொடுக்க முடிவு செய் திருந்தார்கள். ஆனால் அவளுடைய தாய்மாமன் கொச்சுண்ணி நாயர் அதற்கு இணங்கவில்லை. மற்றொருவனுக்கு அவளைக் கொடுக்க அவர் தீர்மானித்திருந்தார். கிழக்கே எங்கேயோ இருந்து ஆச்சோமன் என்றொரு கறுத்த தடியனை அவர் அழைத்துக் கொண்டு வந்தார். சொந்தக்காரன்தான். ஆனால் அவன் கொச்சுக் குட்டிக்குப் பொருத்தமானவன் அல்ல என்று எல்லோருக்கும் தோன்றியது. கரும்பனைமரம் போன்ற தோற்றம் அவனுக்கு.

காரணவரை எதிர்த்துப் பேச யாரால் முடியும். கொச்சுண்ணி நாயரின் விருப்பத்திற்கு மாறாக அந்த வீட்டில் எதுவும் நடக்க முடியாது. கொச்சுக்குட்டியின் புடவைக் கொடை வைபவம் மிக விமரிசையாக நடந்தது. அடுத்து வந்த திருவாதிரைக்கு ஆச்சோமன் அந்தக் குடும்பத்திற்காக ஒரு பரிசல் நிறைய திருவாதிரைச் சீர், கொண்டுவந்தான். நேந்திரங்காய், வள்ளிக்கிழங்கு முதலிய எல்லாமே சீரில் இருந்தன. சாதாரணமாக உறவினர் வீடுகளி லிருந்து கொண்டுவரப்படும் திருவாதிரைச் சீர் குடும்பத்துப் பெண் களிடம் ஒப்படைக்கப்பட்டுவிடும். ஆனால் கொச்சுண்ணி நாயர் அதையெல்லாம் அறைக்குள் வைத்துப் பூட்டினார். மறுநாள் ஒரு நேந்திர வாழைக்குலையும் ஓரடுக்கு வெற்றிலையும் நான்கு புகையிலைச் சுருள்களுமாகக் கொச்சுண்ணிநாயர் கோன்னோத்து வல்யச்சன் தங்கியிருந்த கல்லறய்க்கல் போனார். மூத்த மருமகளின் பூத்திருவாதிரைக்கு சமூகத்துத் தலைவரை அழைத்துவிட்டுப் பார்த்துப் போக வந்திருப்பதாக அவர் தெரிவித்தார். கல்லறய்க்கல் பிள்ளைக்கு அதை நம்ப முடியவில்லை. ஸ்வாமிகளை மதிப்பவர்கள் ஊரில் அற்றுப்போய் எவ்வளவு காலம் ஆகிவிட்டது. கடுக்காத்ர கொச்சுகாளியும் அன்பளிப்புடன் சென்று கோன்னோத்தில் குஞ்ஞும்மார்களைப் பூத்திருவாதிரைக்கு அழைத்தார்.

கோன்னோத்துக் குஞ்ஞும்மார்களில் எவருக்கும் இப்போது கணவன்மார்களில்லை. அங்கே திருவாதிரை விரதமும் இல்லை. கடுக்காத்ர பூத்திருவாதிரைக்குப்போக வேண்டுமா வேண்டாமா என்பது குஞ்ஞும்மார்களிடையே ஒருவிவாதப் பொருளாகிவிட்டது. கடுக்காத்ரக்காரர்கள் ஜாதியில் தாழ்ந்தவர்கள். கோன்னோத்துக் குஞ்ஞும்மார்கள் அவர்களைத் தொட்டுப்பழகக் கூடாதவாறு தீண்டத்தகாதவர்கள். கோன்னோத்துக் குஞ்ஞும்மாரைப் போய்க்கூப்பிடும் தகுதிகூட இல்லாதவர்கள் கடுக்காத்ரக்காரர்கள். முன்பெல்லாம் கோன்னோத்துக் குடும்பத்தில் திருவாதிரைத் திருவிழாவுக்கு அந்த சமூகத்தில் எல்லாக் குடும்பங்களிலுமிருந்து பெண்கள் அங்கே வருவதுண்டு. கோன்னோத்துக்காரர்களை எவரும் தொட்டுப் பழகலாம். இப்போது பட்டினி கிடக்க நேர்ந்து விட்டதே என்பதனால் கடுக்காத்ரக்காரர்களைத் தொட்டுப்பழக வேண்டுமா? ஆனை மெலிந்தாலும் தொழுவத்தில் கட்ட முடியுமா என்பது சில குஞ்ஞும்மைகளின் கேள்வி. ஒரு நாளாவது திருப்தி யாகச் சாப்பிடக் கிடைக்குமே என்று நினைத்த சில குஞ்ஞும்மை களுக்குப் போகலாம் என்றிருந்தது. அது மட்டுமல்லாமல் சமையல் செய்வதற்கும் பரிமாறுவதற்கும் மட்டும் கோன்னோத்தில்

குஞ்ஞும்மைகள் வேண்டியிருக்கிறதென்று கடுக்காத்ரக்காரர்கள் பேசிக் கொள்வார்கள். அப்போது மட்டும் தோஷம் இல்லை போலிருக்கிறது. அப்படியல்ல, யார் சமைத்தாலும் சாப்பிடுவதில் தவறில்லை என்பது சில குஞ்ஞும்மைகளின் அபிப்பிராயம். இதற்கிடையே மற்றொரு பிரச்சினை எழுந்தது. குஞ்ஞும்மைகளின் கூட்டத்தில் ஒருத்தி கர்ப்பிணியானாள். சுட்டிக்குஞ்ஞும்மை என்பது அவளுடைய பெயர். அவளுக்குப் புடவை கொடுத்த பிராமணன் விட்டுப்போய், வருடங்கள் இரண்டாகிவிட்டன. பட்டினி கிடக்க நேர்ந்து, வழிவகை தெரியாததால்தான் அவன் போனது. தேவஸ்தானத்துப் பரிசல்காரன் குஞ்ஞுங்கரஸ்ஸாருடன் அவள் நெருக்கமானாள். குஞ்ஞுங்கரஸ்ஸார் தினமும் அந்திக் கருக்கலில் யாருக்கும் தெரியாமல் சுட்டிக்குஞ்ஞும்மைக்குச் சாப்பிடுவதற்கு என்ன வெல்லாமோ கொண்டுவந்து கொடுப்பான். அவ்வாறிருக்க அவளுக்கு மாதம் தப்பியது. அவள் அதைக் குஞ்ஞுங்கரஸ்ஸாரிடம் சொன்னாள். குஞ்ஞுங்கரஸ்ஸார் ஜாதியில் தாழ்ந்தவன்; அது மட்டுல்லாமல் பரிசலோட்டி. கோன்னோத்து குடும்பத்திற்கு இது அவமானம். குஞ்ஞுங்கரஸ்ஸார் எங்கேயோ போனான், அவளுக்கு முன்பு புடவை கொடுத்த பிராமணனைத் தேடிக் கண்டுபிடித்துக் கூட்டிக்கொண்டுவந்தான். அவன் இரண்டு நாட்கள் சுட்டிக்குஞ்ஞும்மையோடு சேர்ந்து இரவில் உறங்கினான், திரும்பிப் போகவும் செய்தான். அவ்வாறு சுட்டிக்குஞ்ஞும்மையின் மானம் காப்பாற்றப்பட்டது. இதற்காகக் குஞ்ஞுங்காரஸ்ஸாருக்கு உண்டான செலவு ஐம்பது பணம். அதற்குப் பிறகு சுட்டிக் குஞ்ஞும்மைக்கு ஒரு தைரியம் வந்தது. பட்டினியிலிருந்து உருவான தைரியம். வெறும் வயிற்றில் கிடந்து குழந்தை பருத்தது. தான் குஞ்ஞுங்கரஸ்ஸாரோடு சேர்ந்து ஓடிப்போகத் தீர்மானித்திருப்பதாக அவள் சொல்லிக் கொண்டிருந்தாள். அப்படி ஏதாவது நடந்தால் கோன்னோத்து குடும்பத்திற்குப் பெரிய அவமானமாகிவிடும். அப்படி யெல்லாம் போகக்கூடாதென்று மற்ற குஞ்ஞும்மைகள் அவளிடம் வேண்டிக்கொண்டார்கள். முன்பு ஒருத்தி ஓடிப் போனதுண்டு. ஆனால் அது அவமானகரமாக இருக்கவில்லை. லட்சுமியுடன் குழந்தைகளையும் அவர்களுடைய தகப்பன் பரமன் கர்த்தாவு அழைத்துக்கொண்டு போய்த் தனியே குடிவைத்தான். ஜாதியில் தாழ்ந்த ஒருவனுடன் கோன்னோத்துக் குஞ்ஞும்மைமார் எவரும் ஓடிப்போனதில்லை. சுட்டிக்குஞ்ஞும்மை குஞ்ஞுங்கரஸ் ஸாருடன் ஓடிப்போவதாக இருந்தால் கடுக்காத்ரப் பூத்திருவா திரைக்குப் போகவேண்டாம் என்று மற்ற குஞ்ஞும்மைமார்

தீர்மானித்தார்கள். கடுக்காத்ரகாரர்கள் தங்களை அவமானப் படுத்திவிடுவார் என்று அவர்கள் பயந்தார்கள். ஆனால் அதிருஷ்ட வசமாக சுட்டிக் குஞ்ஞும்மையை அழைத்துக்கொண்டுபோக குஞ்ஞுங்கரஸ்ஸார் வரவில்லை. கோன்னோத்துக் குஞ்ஞும்மை களின் மானம் காப்பாற்றப்பட்டது.

கடுக்காத்ரயில் பூத்திருவாதிரை கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது. அந்த சமூகத்துப் பெண்களெல்லாம் ஒன்று கூடினார்கள். கோன்னோத்துக் குஞ்ஞும்மைகள்தான் சமையல் செய்து பரிமாறினார்கள். இரவில் திருவாதிரைக் கொண்டாட்ட ஆட்டப்பாட்டங்கள் இருந்தன. கணபதிப்பாட்டுப்பாடியது சீலாந்திப்பிள்ளி கல்யாணியம்மைதான். அவள் எட்டெடுத்து வைப்பதிலும் கும்மி கொட்டுவதிலும் தனி அழகிருக்கும். சரஸ்வதிப்பாட்டுப் பாடியது கடுக்காத்ர கொச்சுதேவி. நல்ல குரல். அவள் அழகியும்கூட. கல்யாணியம்மைக்குக் கொச்சுதேவியிடம் மகளைப்போல ஒருபாசம். யாரும் பார்க்காதபோது கல்யாணி யம்மை அவளைக் கட்டிப்பிடித்து அவளுடைய காதில் கிசுகிசுத் தாள்; உனக்கு என்னோட மகன் பொருத்தம்; கேசவன் உனக்காகக் காத்திருக்கிறான். தேவி சொன்னாள். நானும் காத்திருக்கிறேன்.

தீண்டத்தகாத ஜாதிக்காரர்களுக்காக ஊரில் ஒரு பள்ளிக்கூடம் தொடங்கப்போகிறார்கள். தாலுகாபீசிலிருந்து அதற்கான உத்தரவு வந்துவிட்டது. மாணிக்கத்தறப் புறம்போக்கில் அதற்கான ஒரு கட்டிடம் கட்டி முடித்தார்கள். மும்மூர்த்திகளுக்கு இந்தச் செய்தியை நம்ப முடியவில்லை. கீழ்ஜாதிக்காரர்கள் எழுதப் படிப்பது தர்மசாஸ்திரங்களுக்கு எதிரானது. மகாராஜா இப்படி ஒரு கட்டளை பிறப்பித்தது, கெட்ட அமைச்சர்களின் போதனை யினால்தான் இருக்கவேண்டும். மும்மூர்த்திகள் அதன் பலாபலன் களை ஒன்றுகூடி ஆலோசித்தார்கள். சீலாந்திப்பிள்ளி கேசவனைத் தான் அங்கே ஆசிரியராக நியமித்திருக்கிறார்கள் என்பதை அறிந்த போது, அவனை அழைத்துக்கொண்டு வா ஆள் அனுப்பினார் குஞ்ஞன்பிள்ளை. பறையனையும் புலையனையும் எழுதப்படிக்க வைத்தால் ஊர் கெட்டழியும் என்றும், அதனால் அந்த வேலையை ஒப்புக்கொள்ளவேண்டாம் என்றும் அவர்கள் மூர்க்கத்தனமாகக் கேசவப் பிள்ளையைத் தடுத்தார்கள். சில பிள்ளைகளின் கண் களைத் திறந்து வைப்பது எப்படி ஊருக்குக் கெடுதலாகும் என்று கேசவன் வாதித்தான். நீ அந்தப் பள்ளிக்கூடத்திலே வாத்தியாரா இருக்க வேண்டாம் என்று குஞ்ஞன்பிள்ளை தீர்மானமாகச் சொன்னார். குஞ்ஞன்பிள்ளையையும் பாமன் கர்த்தாவையும்

இட்டுண்ணானையும் எதிர்த்துக்கொண்டு ஊரில் எதுவும் நடக்காது என்பது கேசவனுக்குத் தெரியும். ஆனால் அவர்கள் கூறும் நியாயங்கள் கேசவனுக்கு விளங்கவில்லை. பறையரும் புலையரும் ஏன் எழுதப்படிக்கக் கூடாது? இந்தக் கேள்வியை நிமிர்ந்துநின்று கேட்க கேசவபிள்ளை தயார். கல்யாணியம்மைக்கும் அதே அபிப்பிராயம்தான். ஆனால் மகன் அந்தத் தான்தோன்றி களான மும்மூர்த்திகளை சவாலுக்கழைப்பது ஆபத்தானது என்று அவளுக்குத் தோன்றிற்று. இட்டுண்ணான் எதைச் செய்யவும் தயங்க மாட்டார். மும்மூர்த்திகளை மீறி எதுவும் செய்ய முடியாதென்று பலர் கேசவப் பிள்ளைக்கு உபதேசம் செய்தார்கள். ஆனால் தான் கேட்ட கதைகளை வைத்துப் பார்க்கும்போது இட்டுண்ணான் இருதய முள்ளவரென்று கேசவப்பிள்ளைக்குத் தோன்றியது. ஊரில் முதல் முதலாக ஒரு பெண்ணைத் தன்னுடன் அழைத்துவந்து குடும்பம் வைத்தது இட்டுண்ணான்தான். மனைவியும் கணவனும் ஒரு குடும்பமாக வாழ வேண்டும்; அவன் அவளைவிட்டுப் பிரியக் கூடாது என்று முதலில் கூறியது இட்டுண்ணான்தான். இட்டுண்ணானைப் போலத்தனக்கும் ஓர் ஆசையுண்டு—கொச்சு தேவியை உடனழைத்து வந்து குடியமர்த்துவது. அப்படி வாழ்வதற்கு ஒரு வேலையும் கிடைத்தது. அது இதோ கைவிட்டுப் போகிறது. இட்டுண்ணானைப்போய்ப் பார்த்துத் தனது சங்கடத்தைச் சொன்னால் அவர் உதவுவார் என்று கேசவனுக்குத் தோன்றியது. ஆனால் இட்டுண்ணானை ஊரில் எங்கேயும் பார்க்க முடியவில்லை.

குஞ்ஞன்பிள்ளையும் கர்த்தாவும் சேர்ந்து பறையர்களும் புலையர்களும் தங்கள் குழந்தைகளைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பி வைப்பதைத் தடுத்து நிறுத்தினார்கள். தேவஸ்தானத்தில் உள்ள ஒவ்வொரு குடும்பத்திற்கும் அடிமைகளாகத் தங்களை ஒப்படைத்து எழுதிக் கொடுத்தவர்கள்தான் ஒவ்வொரு பறையனும் புலையனும். அவர்களில் எவருக்கும் அவர்களுடைய மேலாளரை மீறிச் செயல்பட முடியாது. குறிப்பாக, தேவஸ்தானத்து நிர்வாகி யான குஞ்ஞன் பிள்ளையை மீற முடியாது. ஆனாலும் எவருடைய அடியாளாகவும் இல்லாத ஒரு பறையன் உண்டு—இட்டேப்பன். அவன் அளவுக்கு வலிமையான ஒருவன் அந்த ஊரில் கிடையாது. அவனுக்கு யாரிடமும் பயமில்லை. அக்கிரமங்கள் செய்து போக்கிரியாக முரடனாகத் திரிந்து கொண்டிருப்பவன். அவனைக் கட்டுப்படுத்த யாராலும் முடியாது. பறையர்களுக்கிடையே அவன் தனிப்பட்டவனாக இருந்தான். குஞ்ஞன்பிள்ளையின் கட்டுப்

பாட்டை மீற அவன் தயாரானான். தன்னுடைய குழந்தையைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பிவைத்து எழுதப்படிக்கச் சொல்லித்தர வேண்டும் என்று அவன் கேட்டுக் கொண்டான். இட்டேயப்பன் பின்வாங்கவில்லை. அவன் நிமிர்ந்த முதுகெலும்புள்ளவன். எவருக்கும் அடிமையில்லாத தான் ஒரு சுதந்திரமானவன் என்பது அவனுக்குத் தெரியும். அன்று முதல்சிறுவனைப் பள்ளிக்கூடத் திற்குக் கொண்டுபோய்விட்டுவிட்டு, பள்ளிக்கூடம் விடும்வரை இட்டேயப்பன் அங்கேயே காவல் இருந்தான். சாயங்காலம் மகனை அழைத்துக்கொண்டு வீட்டிற்குத் திரும்புவான். அவன் தோற்றுப் போகத் தயாரில்லை. எல்லாப் பறைச்சேரிக் குடிசைகளுக்கும் இட்டேயப்பன் சென்று குழந்தைகளைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பி வைக்குமாறு சொன்னான். எவரும் செவிசாய்க்கவில்லை. காரணம், அவர்களெல்லாம் அடிமைகள்; பயந்தார்கள். சில நாட்கள் கழித்து ஒருநாள் அதிகாலையில் தன்னுடைய குடிசையிலிருந்து வெளியே போன இட்டேயப்பனை அதற்குப் பிறகு யாரும் பார்க்கவில்லை. குஞ்ஞன்பிள்ளையும் கர்த்தாவும் சேர்ந்து இட்டேயப்பனை அடித்துக் கொன்று, ஆளைக்கட்டி ஆற்றில் தூக்கி எறிந்துவிட்டார்கள் என்பதாக ஊரில் வதந்தி பரவியது. அத்துடன் கேசவபிள்ளையின் பள்ளிக்கூடத்தில் இருந்த ஒரு பையனும் இல்லாமலாயிற்று.

படிப்பதற்குப் பிள்ளைகள் இல்லாத பள்ளிக்கூடம். ஒரு குழந்தைகூட இல்லை. கேசவப்பிள்ளை இட்டுண்ணானைப் பார்த்து சங்கடத்தைத் தெரிவித்தான். ஓர் அரசாங்க வேலை கிடைத்து இப்போது இது இல்லாமல் போகிறது. இது தவிர அவனுடைய மற்றொரு கனவு, மாலையணிவது, தேவிக்குப் புடவை கொடுத்து அவளைக்கூடவே வைத்திருந்து காப்பாற்றுவது. விருப்பப்பட்ட பெண்ணுக்குப் புடவை கொடுக்கவும் அவளைப் பராமரித்துக் காப்பாற்றவும் ஆசைப்படும் ஒருவனும் ஊரில் இருக்கத்தான் செய்கிறான். கேசவனுக்கு உதவ இட்டுண்ணான் தீர்மானித்தான். கீழ்ஜாதிக்காரன் எழுதப்படிப்பது குற்றமில்லை யென்று கேசவப்பிள்ளையின் வாதத்தைக் கேட்டபோது இட்டுண் ணானுக்குத் தோன்றியது. ஆனால் எதைச் செய்தாலும் குஞ்ஞன் பிள்ளையுடனும் கர்த்தாவோடும் கலந்தாலோசித்துச் செய்ய வேண்டும். இட்டுண்ணான் அவர்களைப் பார்க்க அவர்களுடைய வீடுகளுக்குச் சென்றான். பலமுறை சென்றும் பார்க்க முடிய வில்லை. தீண்டத்தகாத ஜாதிக்காரர்களுக்குப் பள்ளிக்கூடம் நடத்தும் கேசவனுக்கு உதவ இட்டுண்ணான் புறப்பட்டிருக்கிறான் என்பதால் அவர்கள் வேண்டுமென்றே ஓடி ஒளிந்துகொண்

டார்கள். இட்டுண்ணானுக்குக் கோபம் வந்தது. அவர்களுடைய குழந்தைகளைப் பள்ளிக்கூடத்தில் கொண்டுபோய்ச் சேர்க்குமாறு அவன் தன்னுடைய அடியாட்களான தாழ்ந்த ஜாதிகாரர்களுக்கு கட்டளையிட்டான். அப்படி மூன்று குழந்தைகள் வந்து சேர்ந்தார்கள். இட்டுண்ணானே அவர்களைக் கூட்டிக்கொண்டு வருவான்; பள்ளிக்கூடத்தில் காவல் இருப்பான்; கேசவப்பிள்ளை படிப்பு சொல்லிக் கொடுப்பான். இட்டுண்ணானும் கேசவனும் சேர்ந்து ஊரைப் பகைத்துக் கொள்கிறார்கள் என்று கல்யாணி யம்மை பயப்பட்டாள். பள்ளிக்கூடத்திற்குப் புறப்பட்ட கேசவனை ஒரு நாள் அம்மா தடுத்தாள். ஆனாலும் கேசவப்பிள்ளை போனான். அன்று இரவு கேசவப்பிள்ளைக்குத் தூக்கம் வர வில்லை. முதல் முதலாக அம்மாவுடன் முரண்பட்டு மனஸ்தாபம். இரவில் அவன் வாசல்படி இறங்கி நடந்தான். அப்போது அங்கே மர உச்சிகளினூடே ஒளிவட்டம் ஒன்றைக் கண்டான். எங்கேயோ தீ பிடித்திருக்கிறது. மறுநாள் காலையில் கேசவப்பிள்ளை அந்தச் செய்தியைக் கேட்டான், புலையர் பள்ளிக்கூடத்திற்கு யாரோ தீ வைத்துவிட்டார்கள். தீயை அணைக்க யாருமில்லை.

சில நாட்கள் கழித்து அரசாங்கத்திலிருந்து புலையர் பள்ளிக் கூடத்தை நிறுத்திவிட்டதாக உத்தரவு வந்தது. கேசவப்பிள்ளையை வேலையிலிருந்து நீக்கவும் செய்தார்கள்.

***

கிறிஸ்தவர்களான விசுவாசிகளெல்லாம் பெரும் முன்னேற்றம் கண்டார்கள். எல்லாவற்றுக்கும் அடித்தளம் பருத்திக்காட்டு ஔதைமாப்பிள்ளைதான். ஆனால் புதிய தலைமுறைக்கு அந்தச் சிந்தனையில்லை. ஔதையின் மகன் வர்க்கியும் அவனுடைய மகளும் பெரும் பணக்காரரானார்கள். படுகிழமான ஔதை மாப்பிள்ளைக்கு அவர்களுடைய போக்கு எதுவும் பிடிக்கவில்லை. அதையே சொல்லிச் சொல்லிக் கிழவர் எப்போது பார்த்தாலும் சண்டையிடுவார். இந்தக் கிழம் செத்துத் தொலைக்காதா என்று அவர்கள் மனதுக்குள் சபிப்பார்கள். ஆனாலும் கிழவருடைய மிகப் பெரிய ஆசையைப் பூர்த்தி செய்யும் வேட்கையில் இருந்தார்கள் அவர்கள். ஊரில் கிறிஸ்தவர்களுக்கென்று ஒரு மாதாகோயில் கட்டவேண்டும். வட்டத்ரபீலிதான் கோயில் கட்டுவதற்கான பொறுப்பேற்றான். ஔதை மாப்பிள்ளை வீட்டைவிட்டு

வெளியேறி ஆண்டு கணக்காகிவிட்டது. தான் பிறந்து வளர்ந்த ஊரை ஒரு தடவை நடந்து சுற்றிப்பார்த்துவர வேண்டுமென்று ஒருநாள் அவருக்குத் தோன்றியது. காலையில் சாப்பிட்டு முடித்து தடியூன்றிக் கொண்டு அவர் நடக்கலானார். அந்த நடையின்போது அவர் மீண்டும் ஆரோக்கியவானாக ஆகிவிட்டதாகத் தென்பட்டார். வழி நெடுகப் பலரைச் சந்தித்தார். யாரையும் அடையாளம் தெரியவில்லை. சிலரிடம் அவர்கள் யாரென்று விசாரித்தபோது கேட்டறிந்த பெயர்கள், புதிய வீட்டுப் பெயர்கள் ஒன்றும் புரியவில்லை. அவர்களில் எவரும் தன்னைப் பருத்திக் காட்டு ஒளதை என்று அடையாளம் கண்டுகொள்ளவில்லை. தான் முன்பு சென்றிருந்த பழைய வீடுகளைப் பார்த்தார். அங்கே ஒளதை மாப்பிள்ளைக்குத் தெரிந்திருந்தவர்கள் எல்லோரும் இறந்து போயிருந்தார்கள். கோயிலின் கிழக்கு நடையில்போய் நின்றார். ஒளதையைத் தெரிந்த ஒருவரைச் சந்தித்தார்—மங்கொம்பில் கணபதி அய்யரை மறவனென்று அழைத்த பப்புப்பிள்ளை. காலம் மாறிக்கொண்டிருப்பதைப் பற்றி இருவரும் நெடுநேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். ஒளதை மாப்பிள்ளை அதற்குப் பிறகு கோன்னோத்து, கடம்பாட்டு, சீரட்டயில், மங்கலச்சேரி ஆகிய எல்லா இடங்களுக்கும் போனார். முன்பு இந்தக் குடும்பங்களின் நிலை என்னவாக இருந்தது. அங்கிருந்தெல்லாம் கிடைத்த கஞ்சியைக் கொண்டு பசியடக்கிய பால்ய காலத்தை அவரால் மறக்க முடியவில்லை. தன்னுடைய குழந்தைகளோ ஊரும் சூழலும் மறந்து வாழ்கிறார்கள். சாயங்காலத்திற்குப் பிறகுதான் ஒளதை வீட்டிற்குத் திரும்பினார். எங்கே போனார் என்று தெரியாமல் வீட்டிலிருந்தவர்கள் பதறிப்போனவர்களாக இருந்தார்கள். வந்தவுடன் அவர் மகனைக் கூப்பிட்டு ஐநூறு மரக்கால் நெல் வேண்டுமென்று கேட்டார். கடம்மாட்டு, கோன்னோத்து, சீரட்டயில், மங்கலச்சேரி ஆகியவற்றிலும் பிற குடும்பங்களிலும் பட்டினி கிடக்கும் குஞ்ஞும்மைகளுக்கு விநியோகம் செய்வதற்காக. அது அவருடைய கடைசி ஆசை. கொடுப்பதற்கு வர்க்கி சம்மதித்தான். அன்று இரவே கிழவர் இறந்தார். ஊரில் கட்டிய புதிய கோயிலில் தான் ஒளதையின் சவம் அடக்கம் செய்யப் பட்டது. எல்லோருடைய கண்களும் நிறைந்தன. ஊரின் பழைமை அல்லவா அந்தக் கல்லறையில் அடக்கம் செய்யப்பட்டது. ஒளதை மாப்பிள்ளை சொன்னது போலவே மறுநாள் கடம்மாட்டு, கோன்னோத்து, மங்கலச்சேரி முதலிய பழைய குடும்பங் களுக்கெல்லாம் வர்க்கி நெல்லளந்து கொடுத்தனுப்பினான்.

ஔதை மாப்பிள்ளையின் சவ அடக்கத்திற்கு பிஷப்பின் பிரதிநிதியாக ஒரு பாதிரியார் வந்திருந்தார். ஊரிலுள்ள பறையர் களையும் புலையர்களையும் மனம் மாற்றி மதம் மாற்றிக் கிறிஸ்து வின் மார்க்கத்திற்குக் கொண்டுவர வேண்டுமென்று அந்தப் பாதிரியார் அங்கிருந்த கிறிஸ்துவர்களிடம் சொன்னார். பறையரும் புலையரும் கிறிஸ்தவர்களாக மாறிவிட்டால் அவர்களுடைய ஜாதி என்னவாக இருக்கும் என்பதைப் பற்றி சிலர் சந்தேகப்படாம லில்லை. ஆனால் சில நாட்களுக்குப் பிறகு அந்தப் பகுதி விசுவாசி களை தெய்வத்தின் வழிக்குக் கொண்டு வரும் மதமாற்ற முயற்சி ஆரம்பித்தது.

புலையரும் பறையரும் மற்றவரும் மதம் மாறினார்கள். ஞானஸ்நானம் முடிந்தவர்கள் அவர்களுடைய பழைய தெய்வங் களான மாடனையும் மருதையையும் மற்றதையும் பூஜை செய்யக் கூடாது. இனிமேல் ஒரே ஒரு தெய்வம்—ஏசுபிரான். அவர்கள் ஞானஸ்நானம் முடித்து சிலுவை போட்டுக்கொண்டார்கள். சீதங்கன் சாமுவேல் ஆனான். அப்படியே அவர்கள் எல்லோருடைய பெயர்களும் மாறின. யாராவது சீதங்கன் என்று பழைய பெயர் சொல்லிக்கூப்பிட்டால் பொருட்படுத்தக்கூடாது. அவர்கள் அதையெல்லாம் பின்பற்றினார்கள். ஆனால் தாழ்ந்த ஜாதிக்காரன் மதம் மாறிக் கிறிஸ்தவனாக மாறினால் அவனைத் தங்களுடைய கோயிலில் நுழைய அனுமதிக்கலாமா என்ற விஷயத்தில் ஏற்கெனவே இருந்த பழைய கிறிஸ்தவர்களுக்கிடையே ஒரு விவாதம் எழுந்தது. வேதப்புத்தகத்தில் ஜாதி வித்தியாசம் சொல்லப்படவில்லை. ஆனாலும் அவர்களைத் தங்களுடைய கோயிலுக்குள் அனுமதிக்க யாருக்கும் சம்மதமில்லை. கடைசியில் ஒரு வழிகண்டுபிடித்தார்கள். மதம் மாறியவர்களுக்குத் தனியாக ஒரு கோயில்கட்டுவது. அதற்காக ஓலையும் ஊன்று குச்சுகளும் கொண்டு ஒரு மனையை உண்டாக்கினார்கள். மதம் மாறிய புலையருக்கும் பறையருக்கும் எழுதப் படிக்கக் கற்றுக்கொள்ள ஒரு பள்ளிக்கூடம் அமைக்கவேண்டும் என்ற பாதிரியாரின் கட்டளையை அந்தக் கிறிஸ்தவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. புலையன் கிறிஸ்தவனாக ஆனாலும் புலையனாகத்தான் இருக்க வேண்டும் என்பது அவர்களுடைய வாதம்.

***

வேலை இழந்துவிட்ட பின்னர் கேசவபிள்ளை வீட்டிற்குள்ளேயே இருக்கலானான். வாசிப்பதற்குப் பழைய கிரந்தங்கள் ஏராளமாக இருந்தன. சில சமயங்களில் அவன் உட்கார்ந்தவாறே பகற்கனவு காண்பான். தானும் தேவியும் குழந்தைகளும் அம்மாவும் மட்டுமே உள்ள ஒரு வீடுதான் அவன் கண்ட கனவு. மகனுடைய நினைப்புகள் எல்லாவற்றையும் புரிந்துகொள்ள கல்யாணியம்மை யால் முடியவில்லை. அது ஒரு புதிய வாழ்க்கை. ஒரு பெண்ணை அவளுடைய வீட்டிலிருந்து அழைத்துக்கொண்டு போய்க்கூடவே குடியிருக்கச் செய்வது. அந்த வாழ்க்கை எப்படி இருக்கும் என்று கல்யாணியம்மையால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. ஊரில் இட்டுண்ணானுக்கு மட்டுமே அப்படி ஒரு வீடுஉண்டு. கிறிஸ்தவர் களிடையேயும் அப்படித்தான் என்னவானாலும் தேவியுடன் கேசவன் வாழ்நாள் முழுவதும் அன்புடன் இருப்பான் என்று கல்யாணியம்மைக்கு நம்பிக்கை உண்டு.

கல்யாணியம்மை ஒருநாள் கடுக்காத்ர போனாள். பூத்திருவாதிரைக்குப் பின்னர் கடுக்காத்ர கொச்சுண்ணி நாயருக்கு ஒரு பெரிய ஊன்றுகோல் கிடைத்துவிட்டது. கோன்னோத்துக் குஞ்ஞும்மைமார் கடுக்காத்ரைக்கு வந்ததன் காரணமாகப் புதிய குலகௌரவம் ஏற்பட்டிருக்கிறது. கொச்சுதேவியின் அம்மாவான மாதையாரிடம் கல்யாணியம்மை சொன்னாள், 'என்னோட கேசவனுக்குப்பொருத்தமான பொண்ணு தேவி." தேவியைப் பிரசவித்தபோது நடந்த சம்பவமாக அது இருந்தது. தேவியின் அம்மாவுக்கு அது நினைவிலிருந்தது. ஆனால் சீலாந்திப்பிள்ளியில் ஒரு சாதாரணமானவனுக்கு தேவியைக் கொடுப்பது தங்களுடைய குலப்பெருமைக்கு உகந்ததல்ல என்று மாதையார் கல்யாணியம்மை யின் முகத்துக்கு நேராகக் கூறினாள். சீலாந்திப்பிள்ளியின் ஆண் களுக்கு அந்தக் குடும்பத்துக்காரர்கள் எவரும் ஆரம்பத்தி லிருந்தே பெண் கொடுத்ததில்லை. பின் எப்படிக் கல்யாணியம்மை இந்த எண்ணத்துடன் வந்தாள் என்று மாதையார் கேட்டாள். கல்யாணி யம்மையின் முகம் வாடிவிட்டது. அவள் போவதற்காக எழுந்த போது சாப்பிட்டுவிட்டுப் போகும்படி மாதையார் கல்யாணி யம்மையிடம் சொன்னாள். வேண்டாம் என்று சொல்லக் கல்யாணியம்மையால் முடியவில்லை. அனுசரித்துப்போக மட்டுமே அறிந்த ஒரு பெண்மணி அவள். தேவியை நேரில் பார்க்கக்கூட மாதையார் கல்யாணியம்மையை அனுமதிக்க வில்லை.

மனம் நொந்து அவமானத்துடன் சாப்பாடு முடித்துவிட்டுக்

கல்யாணியம்மை அன்று கடுக்காத்ரயிலிருந்து புறப்பட்டாள். மகனுக்குப் பெண் கேட்கக் கடுக்காத்ரவுக்குத் தான் போய்வந்த இந்த விவரத்தைக் கல்யாணியம்மை கேசவனிடம் சொல்லவில்லை. மாதக்கணக்கில் கேசவப்பிள்ளை ஒரு பெரிய வேலையில் ஈடுபட்டிருந்தான். சீலாந்திப்பிள்ளி அறைக்குள்ளே பாதுகாக்கப் பட்டிருந்த ஓலைச்சுவடிகளை ஒவ்வொன்றாக ஆராய்ந்து வகை பிரித்துக் கொண்டிருந்தான். காலம் காலமாக உள்ள குடும்பக் கணக்குகள் எழுதிய ஒரு பெரிய சுவடிக்கட்டு அவனுடைய கண் களில் பட்டது. அதில் ஓரிடத்தில் பின்வருமாறு எழுதப்பட் டிருந்தது, தம்பி இட்டிக் கோளனின் குழந்தையின் ஞானஸ்நானச் சடங்குக்காகக் கொடுத்தனுப்பிய செலவு நெல் பத்து மரக்கால். சீலாந்திப்பிள்ளியில் முன்பு கிறிஸ்தவர்கள் இருந்தார்களா? குடும்பத்திலிருந்து கோயில் சடங்குகளுக்குச் செலவு எழுதப்பட் டிருக்கிறதே! இதனுடைய உண்மை என்னவென்று கேசவபிள்ளை கல்யாணியம்மையிடம் கேட்டான். தலைமுறை தலைமுறையாகச் சொல்லக்கேட்ட ஒரு கதை அவளுக்குத் தெரியும். சீலாந்திப்பிள்ளி மிகத் தொன்மையான குடும்பம். அவர்களுடைய முன்னோர்கள் பௌத்தர்களாக இருந்தார்கள். இப்போது இருக்கும் தர்ம சாஸ்தா கோயில் ரொம்பக் காலத்திற்கு முன்பு ஒரு அம்மன் கோயிலாக இருந்தது. தேவியை அப்புறப்படுத்திவிட்டு அங்கே தர்ம சாஸ்தாவைப் பிரதிஷ்டை செய்தது சீலாந்திப்பிள்ளியில் புத்த மதக்காரர்களான காரணவர்கள்தான். கோயில் சீலாந்திப்பிள்ளிக் குடும்பத்தைச் சேர்ந்ததாக இருந்தது. அவர்களைப் போல ஜாதியில் உயர்ந்தவர்கள் அந்த ஊரில் வேறு யாரும் கிடையாது. பரம் பரையாக அவர்கள் பெரிய கல்விமான்களாக இருந்தார்கள். ஒரு சமயம் ராமலட்சுமணர்களைப்போல ஒரு அண்ணன்தம்பிமார் அந்தக் குடும்பத்தில் தலைவர்களாக இருந்தார்கள். இருவரும் பெரிய கல்விமான்களாக இருந்தார்கள். அவ்வாறிருக்க, தம்பி பரங்கிமார்களுடன் சேர்ந்து பழகி மதம் மாறினார். ஆனாலும் அவர்கள் அண்ணன் தம்பிகளாக ஒன்றாக ஒரே வீட்டில் குடியிருந்து வந்தார்கள். பின்னர் வந்த தலைமுறையிலும் ஞானஸ் நானம் பெற்ற கிறிஸ்தவர்களாக அவர்கள் இந்தக் குடும்பத்திலும் உண்டானார்கள். அவ்வாறாகச் சீலாந்திப் பிள்ளிக்கு கௌரவம் மிக்க ஒரு வரலாறு உண்டு. ஆனால் பிற்காலத்தில் அவர்கள் ஜாதியில் தாழ்ந்தவர்கள் ஆனார்கள். அங்கிருந்த ஆண்களுக்கு அந்த ஊரில் குடும்பத்துக்காரர்கள் பெண்கொடுப்பதில்லை.

கேசவன் எழுதப் படிக்கத் தெரிந்தவன். பரம்பரையாக

மகாவித்துவான்கள் பிறந்த ஒரு குடும்பத்தில் பிறந்தவன். ஆனால் கடுக்காத்ர குடும்பத்து தேவிக்குப் புடவை கொடுக்கும் அருகதை அவனுக்கில்லை. அவனுக்கு இப்போது பீருகண்ணு முதலாளியின் கடையில் கணக்கெழுதும் வேலை.

பீருகண்ணுவின் கடை சற்றுதூரத்தில் புறக்களத்தில் இருந்தது. ஒரு பெரிய கடை. உப்பிலிருந்து கற்பூரம் வரை எல்லாச் சாமான் களும் அங்கு கிடைக்கும். தேங்காய் நார், மாதுளைச் சக்கை முதல் தங்கம், ரத்தினக்கல் ஆகியனவரை எல்லாவற்றையும் விற்கவும் வாங்கவும் செய்வதான ஒரு கடை. கடையுடன் சேர்ந்துதான் பீருகண்ணுவின் குடும்பம் குடியிருந்தது. அதிக சந்தடி இல்லாத இடம் அது. இரவு இருட்டிய பிறகும் நெடுநேரம் வரை கேசவப் பிள்ளை கடையில் உட்கார்ந்து கணக்கெழுதுவான்.

ஒருநாள் இரவு கேசவப்பிள்ளை வீட்டிற்குக் கிளம்பச் செல்ல ஆயத்தமானான். அப்போது பீருகண்ணு முதலாளி மிகவும் குழப்பத்திலிருக்கக் கண்டான். அவர் சீரட்டக்காரணவரைக் குற்ற வாளியாக்கி ஒரு கேஸ் ஃபைல் செய்திருந்தார். அது தீர்ப்பாயிற்று. சீரட்ட வயலும் வீடும் பீருகண்ணு முதலாளிக்குக் கையகப்படுத்திக் கொடுக்கக் கோர்ட்டிலிருந்து ஆள் வந்திருக்கிறது. வேண்டுமானால் நாளை முதல் பீருகண்ணு முதலாளி குடும்பமும் சீரட்ட எட்டுக்கட்டு மனையில் குடியிருக்கலாம். ஆனால் நல்லவராக இருந்த மருமகன் ஒருவன் இஸ்லாம் மதத்தில் சேர்ந்தான். அன்றைய காரணவருடன் சண்டையிட்டுக்கொண்டு தான் அவன் தானிருந்த வீட்டைவிட்டு வெளியேறிப் புறக்களத் திற்கு வந்தான். மானும் மனிதரும் இல்லாத இடம் புறக்களம். அங்கே எப்போதும் புயல் அடித்துக் கொண்டிருக்கும். அவ்வளவு விசாலமான இடம் சூன்யமாகக் கிடக்கக் காரணம் உண்டு. அங்கேயெல்லாம் பேய் நடமாட்டம். பீருகண்ணு முதலாளி சொல்லும் கதையைக் கேட்கச் சுவையாக இருக்கும். ரொம்பக் காலத்திற்கு முன்பு நடந்த சீலாந்திப்பிள்ளிக் குடும்பத்தின் கதை போல இந்தக் கதையும் ஒரு புராணம் போல இருந்தது கேசவப் பிள்ளைக்கு.

சீரட்டயிலிருந்து வெளியேறிய மருமகன், பேய்கள் நிறைந்த அந்த ஆள்நடமாட்டமற்ற பிரதேசத்தில் ஆறு தூண் நட்டுக் குடிசை யிட்டு அங்கே குடியேறினான். ஏழு வருடம் ஏழு மாதம் ஏழு நாள் ஆகாரமும் தண்ணீரும் இல்லாமல் அவன் அங்கே தியானத்தில் இருந்தான். ஒரு நள்ளிரவில் அவன் ஒரு சித்தரின் குரலைக் கேட்டான். மகனே என்று அந்தச் சித்தா அவனை அழைத்தார். சீரட்டயில் மருமகன் ஒரு சித்தருக்குப் பின்னால்

போனான். அவன் பெண்ணானிக்குச் சென்று மதம் மாறிப் பரீது என்று பெயர் வைத்துக் கொண்டாள். அந்தப் பரீதின் சந்ததியில் வந்தவன்தான் பீருகண்ணு. அந்தப் பூர்வக மனிதரின் மீதுள்ள பக்தி காரணமாகத்தான் தான் இந்தப் புறக்களத்திற்கு வந்து குடியேறியதாகப் பீருகண்ணு முதலாளி சொன்னார். அவர் சொல்ல வருவது என்னவென்றால் பீருகண்ணு முதலாளியாகிய தானும் சீரட்ட எட்டுக்கட்டு மனை பீருகண்ணுவின் சொந்தமாகி விட்டது. ஊரில் ஒரு சமூகத்தின் தலைவனும் தேவஸ்தான ஸ்தானியுமான சீரட்டக் காரணவரின் குடும்பத்திலிருந்து குழந்தை களும் பெண்களும் அங்கிருந்து வெளியேற்றப்பட வேண்டும். சீரட்டயில் நாகயாக்ஷிகளின் மற்றும் நாகராஜாக்களின் பிரதிஷ்டைகள் இனிமேல் தூக்கி எறியப்படும். நாகபூஜைத் தளங்கள் வெட்டித் தகர்க்கப்படும். வீரவிளையாட்டுக் களமான களரி இனிமேல் தொழுவமாக மாறும். கந்தர்வனின் கோயில் சாம்பல் மேடாகும்.

முதலாளி சொன்ன கதையைக் கேட்டுக் கேசவப்பிள்ளை நெடுநேரம் அப்படியே உட்கார்ந்துவிட்டான். அவன் வீட்டிற்குச் சென்று அம்மாவிடம் அந்தக் கதையைச் சொல்லிக் கேட்கச் செய்தான். சீரட்டயில் இருந்த மருமகன்தான் பீருகண்ணு முதலாளியின் வம்சத்தை நிறுவியவன் என்ற கதையைக் கல்யாணி யம்மை இதுவரை கேட்டதில்லை. பீருகண்ணு சம்பந்தப்பட்ட மற்றொரு கதை கல்யாணியம்மைக்கு நினைவுக்கு வந்தது. அது பீருகண்ணுவின் பிறப்பைப் பற்றியது. கல்யாணியம்மை அப்போது இளவயது மங்கை. ஒரு முஸ்லீம் பெரியவரும் ஒரு முஸ்லீம் பெண்ணும் சேர்ந்து ஓர் அந்திப் பொழுதில் சீலாந்திப்பிள்ளிக்கு வந்தார்கள். அவருடைய மகளுக்கு இரண்டு நாட்களாகப் பேறு கால இடுப்பு வலி தொடங்கியிருந்தது. இரண்டு மருத்துவச்சிகள் வந்தார்கள். பார்த்துவிட்டுக் கைவிட்டுவிட்டார்கள். பிரசவம் நடக்கவில்லை. கல்யாணியம்மை போகவேண்டும். அப்போ தெல்லாம் நாயரைவிடத் தாழ்ந்த ஜாதிக்காரர்களின் பிரசவத் திற்குக் கல்யாணியம்மை போவதில்லை. நம்பூதிரிப் பெண் ணானாலும் புலையப் பெண்ணானாலும் பெற்றெடுப்பது ஒரே மாதிரிதான். இரண்டு உயிர்களின் பிரச்சினை. கல்யாணியம்மை ஆவேசம் வந்ததுபோல அந்த இரவில் புறக்களத்திற்குப் போனாள். கர்ப்பிணிக்குத் தேவையான பணிவிடை செய்தாள். மறுநாள் சூரியனின் முதல் கிரகணங்கள் அந்த முகமதியப் பெண் பிரசவித்த குழந்தையின் தலையில் விழுந்ததைக் கல்யாணியம்மை நினைத்துப்

பார்த்தாள். காலையில் வீட்டிற்குத் திரும்பியபோது கல்யாணி யம்மையின் அம்மா அவளை அடுக்களைக்குள் வரக்கூடாதென்று திட்டினாள். ஒரு முஸ்லீம் பெண்ணுக்குப் பிரசவம் பார்க்கப்போன நாயர் பெண்ணை ஜாதிப்பிரஷ்டம் செய்வதுதான் வழக்கம். ஆனால் பரமு அவளைக் காப்பாற்றினார். கல்யாணிக்கு ஜாதிப் பிரஷ்டம் ஏற்படவில்லை. அன்று கல்யாணியம்மை பிரசவம் பார்த்த குழந்தைதான் இப்போதைய பீருகண்ணு முதலாளி.

பீருகண்ணு நாளை, சீரட்ட மனையைக் கையகப்படுத்தப் போகும் விஷயத்தைக் கேசவப்பிள்ளை சொன்னபோது கல்யாணி யம்மை சொன்னாள்; அவன் நல்ல நேரத்திலே பிறந்தவன். அவன் முரட்டுத்தனமா இருக்க மாட்டான். நல்ல நேரத்தில் பிறந்தவன் கெடுதல் செய்ய மாட்டான் என்பது கல்யாணியம்மையின் நம்பிக்கை.

மறுநாள் காலையில் பீருகண்ணு முதலாளி சீரட்ட வீட்டையும் மனையிடத்தையும் கையகப்படுத்தச் சென்றார். கோர்ட்டிலிருந்து வந்திருந்த அமீனா சீரட்டக் குஞ்ஞும்மைகளிடம் எல்லோரும் வெளியே போங்க என்று கட்டளையிட்டான்.

சீரட்டயில் மூத்த குஞ்ஞும்மை ஒரு தாமரைத் தண்டுபோல இருந்தாள். எலும்புக் கூட்டைத் தோல்கொண்டு போர்த்தியது போன்ற உடம்பு. சதையே இல்லை. அவளைக் கைத்தாங்கலாகப் பிடித்து வெளியில் அழைத்து வந்தவள் ஒரு வாலிப வயதுக்காரி. அவளும் ஒரு எலும்புக்கூடுதான். அவர்களுக்குப் பின்னால் ஒவ்வொரு குழந்தையைத் தூக்கிக்கொண்டு மூன்று குஞ்ஞும்மை கள். வயிறு ஒட்டி, பிருஷ்டம் சுருங்கி பெரிய தலையும் ஜீவனில்லாத கண்களும் கொண்ட குழந்தைகள். இந்தக் குஞ்ஞும்மைகள் எப்படிப் பிரசவித்தார்கள்? அவர்களைச் சினைப் படுத்திய ஆண்கள் யார்? சதைப்பற்றே இல்லாத இடத்தில் சந்தானம் பிறக்குமா? எந்தக் குழந்தையும் இந்த பூமியிலுள்ள ஜீவராசியாகத் தோன்றவில்லை. எதற்கும் மூக்கும், நாக்கும் இல்லை. கண்கள்கூட அசையவில்லை. ஏதோ ஒரு குகையில் நின்று கொண்டிருப்பதைப் போல எல்லோரும் முற்றத்தில் இறங்கி நின்றார்கள். ஆண் என்று சொல்லும்படியாக அங்கே எதுவும் தென்படவில்லை. சீரட்டக் குடும்பத்தைச் சேர்ந்தவன் என்று வாய்ச்சாலமாகப் பெருமை பேசிய பீருகண்ணு முதலாளி ஸ்தம்பித்து நின்றுவிட்டார். இனி இவற்றை என்ன செய்ய? முதலாளிக்கு மூச்சு முட்டியது. அவர் நெஞ்சைத் தடவிவிட்டுக் கொண்டார். சீரட்டப் பெண்களிடமிருந்தும் குழந்தைகள்

இடமிருந்தும் சத்தம் வெளிவரவில்லை. நடந்து கொண்டிருப்பது என்னவென்றே அவர்களுக்குத் தெரியவில்லை. ஒரு குழந்தை பிறாண்டியது. பீருகண்ணு முதலாளி நடுங்கிப் போனார். அந்த நடுக்கத்தில் தன்னையறியாமலே சொல்லி க்கொண்டார்; நமக்கு இந்த வீடு காலிபண்ண வேண்டாம். அப்படியானால் அந்த விவரத்தை முதலாளி கையொப்பமிட்டுத் தரவேண்டுமென்று அமீனா சொன்னான். அவர் அவ்வாறே செய்தார். சீரட்ட வயலை மட்டும் அவர் கையகப்படுத்திக் கொண்டார். குஞ்ஞும்மைகளுக்கு அந்த வீட்டை விட்டுகொடுத்து விட்டு முதலாளி திரும்பிப் போனார்.

***

நெடுங்காலத்திற்கு முன்பு. புறக்களம் என்றால் இரவின் மூன்றாம் ஜாமத்தில் கொள்ளிவாய்ப்பிசாசு ஆகாயம் வரை வியாபித்து ஆளும் இடமாக இருந்தது. தென்னைமர உயரத்தில், நீலநிறத்தி லான தீ அங்கே கொள்ளிவாய்ப் பிசாசுக்கு சவால் விட்டுக் கொண்டுதான் சேன்னப்புலையர் மூன்று மனைவிமார்களுடன் வசித்து வந்தான். சீரட்டக்கைமளின் அடிமையாள் இந்தச் சேன்னன். சீரட்டக்கைமளின் ஐந்நூறு மரக்கால் நிலத்தை ஒட்டியிருந்தது புறக்களம். அந்த வயலின் காவலுக்காகத்தான் சேன்னன் புறக்களத்தில் குடியிருந்தான். சேன்னனின் முதல் மனைவி குஞ்ஞோளி பிரசவிக்கவே இல்லை. பெற்றுத்தரும் தகுதி யுள்ள ஒருத்தியைக் கொண்டுவரும்படி குஞ்ஞோளி சொன்னாலும் சேன்னன் அதற்குச் சம்மதிக்கவில்லை. பிறகு குஞ்ஞோளியே தேடி ஒரு புலையப் பெண்ணைக் கொண்டுவந்தாள். அவளுடைய பெயர் உலகி. உலகி ஒன்றைப் பெற்றாள். அதுதான் வட்டத்தான்.

ஒரு சமயம் சீரட்ட வகைப்பட்ட ஐந்நூறு மரக்கால் நிலத்தில் அறுவடை வேலைக்குத் தொலைவிலிருந்து ஒரு சமூகத்தைச் சேர்ந்த பதினைந்து புலையப் பெண்கள் வந்தார்கள். அந்தக் கூட்டத்தில் அழகான ஒருத்தி இருந்தாள். அவளுடைய பெயர் கொச்சிரி. அவள் அறுவடை செய்வதைப் பார்த்துக் கொண் டிருப்பது நல்ல பொழுதுபோக்கு. சேன்னன் அவளுக்குப் பின்னால் நின்றவன் அதற்குப்பிறகு இடம் மாறவே இல்லை. தனக்குப் பின்னாலேயே தொடர்ந்து நின்றுகொண்டிருந்த காவல் புலையனை அவள் திட்டினாள். அப்படியும் அவன் இடத்தை

விட்டு அசையவில்லை. அறுவடை முடிந்தபின்னர் அவர்கள் நெருங்கி இணக்கமானார்கள். கொச்சிரியை முன்பு ஒருவன் கல்யாணம் கட்டிக்கொண்டு போயிருந்தான். ஒரு வருடம் அவனுடன் குடும்பம நடத்தினாள். பிறகு அவள் அவனை வேண்டாமென்று விலக்கிவைத்துவிட்டாள். சேன்னனுக்குக் கொச்சிரியைப் பிடித்துப் போயிற்று. குஞ்ஞாளிக்கும் உலகிக்கும் அது சம்மதம்தான். அவ்வாறாகச் சேன்னனுக்கு மூன்று மனைவி மார்கள் ஆனார்கள். ஒரு கூலிக்காரியின் கூலியும் சேர்ந்து அந்த வீட்டுக்கு வந்தது.

மூன்றுபுலையப் பெண்கள், ஒரு சண்டை சச்சரவு கிடையாது. மூவரும் சுற்றி வட்டமாக உட்கார்ந்திருப்பார்கள். நடுவே சேன்னன். அரட்டை நடக்கும். ஒரு வேடிக்கை சொன்னால் மூன்று மனைவி மார்களும் சிரிப்பார்கள். நடுவில் வயிறாரச் சாப்பிடுவார்கள். இல்லாவிட்டால் உள்ளதுபோல. அந்தத் தரையில் ஒரு மூலையில் தோண்டிக்குச்சி நட்டு ஒரு மறைவிடம் உண்டாக்கிக் கொண் டார்கள். பெயருக்கு ஒரு திரைசசீலை. மூன்று மனைவிகளைக் கொண்டிருப்பவனுக்கு ஒரு மறைவிடம தேவைதான், வட்டத்தான் தான் புறக்களத்தில் ஒரே வாரிசு. ஒரு அம்மாவின் மடியிலிருந்து இன்னொரு அம்மாவின் மடிக்குத் தாவிவிழுந்து எழுந்து அவன் வளர்ந்தான். ஒவ்வொரு அம்மாவுக்கும் கட்டுப்பாடு உண்டு, அவனுக்கு ஒவ்வொரு உருண்டைச் சோறு கொடுக்க வேண்டும். உயர்ந்த ரக அரிசிச் சோறுதான் அவன் சாப்பிட்டான். இருட்டிய பிறகுதான் வீடு திரும்பும் சேன்னன் தூங்கிப் போய்விட்ட வட்டத்தானின் வயிற்றை அமுக்கிப் பார்ப்பான். காலியிடம் ஏதாவது இருப்பதாகத் தெரிந்தால் பிடித்து உட்கார வைத்து மீண்டும் ஊட்டுவான். வட்டத்தான் வளர்ந்தான். அவனுக்கு இனி வயல் வேலையைக் கற்றுத்தர வேண்டும். ஆனால் சேன்னன் விழித்தெழும் முன்பாகவே வட்டத்தான் விழித்தெழுந்து வெளியே போய்விடுவான். இரவில் சேன்னன் தூங்கிய பின்புதான் அவன் வீட்டிற்குள் வருவான். நடுராத்திரியில் வீடுவந்து சேரும் அவனுக்கு மூன்று அம்மாக்களும் சேர்ந்து சோறு ஊட்டுவார்கள்.

ஒரு சமயம் வட்டத்தானைக் காணவில்லை. அவன் எங்கேயோ போய்விட்டான். சேன்னன் ஊர் ஊராகத் தேடி நடந்ததான். கண் அயர நேரமில்லை. பெண்டாட்டிகள் அழுதழுது எலும்பும் தோலுமானார்கள். அந்த வீடு இருளடர்ந்து போயிற்று. இரண்டு மாதங்கள் கழிந்தன. ஒருநாள் வட்டத்தான் திரும்பி வந்தான். மூன்று அம்மாக்களும் அவனைக் கட்டித் தழுவினார்கள்.

சேன்னனுக்குப் புரிந்தது. அவனிடம் கருவாடு நாற்றம் அடித்தது. அவனுக்குப் புலையனின் மணமில்லை. அவனுக்குப் புறக்காடு கடற்புறத்தில் ஒரு முகமதியனுடன் மீன்பிடித்தொழில். புலைய னுக்கு மீன்பிடித்தொழில் குலத்தொழில் அல்ல. சேன்னனால் அதைப் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. வட்டத்தான் ஒரு பணப்பொட்டலத்தை அம்மாக்களின் கையில் கொடுத்துவிட்டு இருளில் மறைந்தான்.

வட்டத்தானின் முதலாளி ஒரு நல்ல மனிதர். ஒருநாள் அவன் முதலாளியுடன் பொன்னாளி என்ற ஊருக்குப் போனான். அவருக்குப் பொன்னாளி கடற்கரையிலும் வீடு உண்டு. அங்கே முதலாளியுடன்தான் வட்டத்தான் தங்குவான். ஐந்தாள் வேலையை அவன் ஒருவனே செய்வான். வீட்டுக் காரியங்களைப் பதவிசாகச்செய்து முடிக்கும் புத்திகூர்மை அவனுக்கு இருந்தது. அந்த வாழ்க்கை முறையில் வட்டத்தான் பழையதையெல்லாம் மறந்தான். ஒரு சமயம் முதலாளி அவனிடம் கேட்டார். உனக் கொரு பொண்ணைக் கட்டவேண்டாமா? முதலாளி சொன்னது போல அவனுக்கு அது சம்மதம்தான்.

கலீமா ஓதி, தலையில் தொப்பியும் வைத்து, இடுப்பில் முண்டு கட்டி சுன்னத் செய்துமுடித்தபோது வட்டத்தான் பெயர் மாறிப் பரீது ஆனான். இப்போது அவனை மற்றவர்கள் முதலாளி என்று தான் அழைக்கிறார்கள். எல்லோருடனும் சரிசமமாக உட்கார்ந்து சாப்பிடலாம். அவனும் பொன்னாளியில் ஒரு பிரபுவான சுலை மான் முதலாளியும் ஒன்று சேர்ந்து மசூதியில் தொழுகை நடத்து கிறார்கள். பரீதின் நிக்காவும் நடந்தது. பாத்திமா ஆலப்புழைக்காரி. ஓர் அனாதைச் சிறுமி. ஆனால் அவளைப் பார்த்ததும் பரீதின் கண்கள் கிறங்கிவிட்டன. அவ்வளவு அழகானவள். முதலாளி தன்னுடைய ஆலப்புழை வீட்டைப் பரீதுக்குக் கொடுத்து அங்கே அவன் குடும்பம் நடத்துவதற்கான வசதிகளை செய்து கொடுத்தார்.

சேன்னனும் அவனுடைய மூன்று புலைய மனைவிகளும் சேர்ந்து புறக்காட்டுக் கடற்கரைக்குச் சென்று வட்டத்தானைத் தேடினார்கள். அவனைப் பற்றி ஒரு தகவலும் கிடைக்கவில்லை. அந்த நால்வருக்கும் வாழ்க்கை மீதான பிடிப்பு விட்டுப்போயிற்று. முதலில் குஞ்ஞாளிக்குத்தான் அந்த எண்ணம் தோன்றியது. எதற்காக இப்படி வாழ வேண்டும்? பெண்ணாகப் பிறப்பதே பெற்றுப் போடுவதற்குத்தான். தான் ஒரு குழந்தையைக்கூடப் பிரசவிக்கவில்லை. மலடி! உலகி பிரசவித்தாள் என்ற போதிலும் அவளும் பயனடைந்ததில் மலடிதான். ஒரு கிடாப்பயல் இருந்தான்

என்பதே பொய்யாய்ப் போயிற்று.

இலஞ்சிக் காட்டில் இரவில் சப்பும் சவறும் சேர்த்துத் தீயிட்டுக் கொளுத்துவதுண்டு. நான்கு உருவங்கள் தீயைச் சுற்றி உட்கார்ந்திருக்கக் காணலாம் சிலைகளைப்போல. அவர்களுக்கு இரவிலும் தூக்கமில்லை. சில இரவுகளில் அவர்கள் அந்த இலஞ்சிக்காட்டிலேயே படுத்துத் தூங்கிவிடுவார்கள். அதுவும் ஒரு நோக்கத்தோடுதான். இலஞ்சிக் காட்டில் படுத்திருந்தால் கொள்ளிவாய்ப்பிசாசு அடித்துக் கொன்றுவிடும். அப்படி இந்த வாழ்க்கையிலிருந்து ஒரு விடிவு பிறக்கும். அடித்துக் கொல்வதற்கு வசதியாகப் படுத்துக்கிடப்பான் சேன்னன். ஆனால் கொள்ளி வாய்ப் பிசாசுக்கும் சில சத்தியங்களெல்லாம் உண்டு. கொள்ளி வாய்ப் பிசாசு தீ வெளிச்சத்தில் வருவதில்லை. வீட்டுக்கு உள்ளேயும் வருவதில்லை. சில சமயங்களில் அந்தப் பிசாசு காளை மாட்டு உருவத்திலும் சில சமயத்தில் நாய் உருவத்திலும் வருவ துண்டு. எந்த உருவத்தில் வந்தாலும் அவர்களுக்கு பயம் கிடையாது. ஆனால் ஒருநாள்கூட பிசாசு வரவில்லை. பின்னே எப்படித்தான் செத்துத் தொலைவது? பிசாசுக்கு அவர்களைத் தெரியும். தெரிந்தவர்களைப் பிசாசு அடித்துக் கொல்லாமலிருக் கலாம். தற்கொலை செய்துகொள்ள அவர்களுக்குத் தெரியாது. வெள்ளத்தில் குதித்து விழுந்தால் நீந்திக் கரையேறத் தெரியும். நீண்ட நேரம் மூச்சுவெளியே விடாமல் அடக்கிப் படுத்துப்பார்ப் பார்கள். ஆனால் அவர்களுக்குத் தெரியாமலே மூச்சு வெளியே கடந்துபோகும். அவர்களுக்கு இறந்தாக வேண்டும். செத்தால் போதும் என்றாகி விட்டது. ஒருநாள் காட்டாறு முன்னெப்போதும் இல்லாதவாறு கரைபுரண்டு ஓடியது. அதற்குப் பிறகு சேன்ன னையும் அவனுடைய மனைவிகளையும் யாரும் பார்க்கவில்லை. புறக்களத்தில் அவர்கள் குடியிருந்த குடிசை அப்படியே இருக்கிறது. அந்தப் பக்கமாகப் பார்த்தால் எல்லோ ருக்கும் பயம் உண்டாகும். இலஞ்சிமரம் தலையைத் தூக்கிக் கொண்டு ஒரு பூதத்தைப்போல நிற்கிறது. என்ன நடந்ததென்று அதற்குத் தெரியும். நள்ளிரவு கடந்துகொண்டிருந்த போது ஏதோ தகர்ந்து சிதைவது போன்று பெரிய சத்தம் கேட்டது. பெரிய அண்டாக்கள் உருள்வது போன்று ஊற்றுக்கள் பொங்கிவரும். நூறு பேர் வெள்ளத்தில் விழுந்து சிக்கித் தவிப்பதுபோல் சத்தம் கேட்கும். எவரும் அந்தக் காட்டாற்றை நீந்திக் கடப்பதில்லை. பரிசலில்கூட யாரும் பயணம் செய்வதில்லை. அங்கே தண்ணீரடியில் கசப்பிசாசு இருக்கிறதாம்.

***

மகன் கைப்பட ஊற்றிய தீர்த்த ஜலத்துளிகள் கல்யாணி யம்மையின் வறண்ட தொண்டையை நனைத்தன. கேசவப் பிள்ளையின் கண்ணீர்த்துளிகள் அவளுடைய மார்பில் தெறிந்து விழுந்தன. அவ்வாறாக அந்தக் கண்கள் நிரந்தரமாக அடைத்துப் போயின. அந்தச் சடலம் கனமாக இல்லை. சிதையின் மாவிறகின் மீது அந்த மூடிப் போர்த்திய சடலத்தைத் தூக்கி வைத்துக் கேசவப் பிள்ளை வாய்க்கரிசி இட்டான். சிதைக்கு மகன் தீ மூட்டினான். முறைப்படிப் பதினைந்து நாட்கள் ஈமச் சடங்குகள் செய்தான். அம்மாவின் அஸ்தியை ஒரு மண்பானையிலிட்டு அதைக் குழியில் புதைத்து மூடினான். ஒரு வருடம் தீட்சைக்குப் பின்னர் அதை ஒரு புண்ணிய தீர்த்தத்தில் கரைக்க வேண்டும். அத்துடன் அம்மாவுக்குச் செய்ய வேண்டியதெல்லாம் செய்தாயிற்று என்று நிம்மதி அடையலாம். அம்மா இப்போது எங்கே இருப்பாள்? சொர்க்கத்திலா நரகத்திலா? நிச்சயமாக நரகத்தில் இருக்க மாட்டாள் என்று கேசவப்பிள்ளைக்குத் தெரியும். பக்திக் கதை களின் எத்தனைப் பிரதிகளை அம்மா எழுதிப் படியெடுத்திருக் கிறாள்! பக்தியுடன், எழுத்துப்பிழை இல்லாமல். அப்படியிருக்க அம்மா சொர்க்கத்திற்குத்தான் போயிருப்பாள்!

இனி இந்த வாழ்க்கையுடன் உறவு சொல்லிக் கொள்ள என்ன இருக்கிறது? கிரந்தங்களா? பீருகண்ணு முதலாளியின் கடையில் கணக்கெழுதத் தொடங்கியதிலிருந்து கிரந்தங்களைத் தொட்டுக் கூடப் பார்க்கவில்லை. ஒரு காலத்தில் ஓர் ஆசை உருவாகியிருந்தது. எழுதப் படிக்கத் தெரிந்த குடும்பத்தில் பிறந்தாயிற்று. புலையர் பள்ளிக்கூடத்தில் ஆசிரியனாகவும் இருந்தாயிற்று. அதைத் தொடர முடியவில்லை. ஸ்ரீபத்மநாப பத்து சக்கரக் காசு வேண்டுமென்று, அதாவது இரண்டு காசு சம்பாதிக்க வேண்டுமென்று எண்ணம் வந்தது எதற்காக? கடுக்காத்ர கொச்சு தேவிக்காகத்தான். தேவியை ஒருவன் கல்யாணம் செய்துகொண்டான். சில நாட்கள் கழித்து அவன் அவளை நிராகரித்துவிட்டுப் போய்விட்டான். அவளுக்கு இரண்டாவதாக ஒரு கணவன் வந்தான். வயிற்றில் நான்கு மாதமாக இருந்தபோது அவனும் விட்டுச் சென்றுவிட்டான். தேவியைப் பற்றி நினைக்கும் போதெல்லாம் கேசவப்பிள்ளையின் கண்கள் நிரம்பும்.

ஒருநாள் இரண்டு பரிசல்கள் நிறைய ஆட்கள் கடுக்காத்ர வுக்கு வந்தார்கள். பிரசவித்துப் படுத்திருக்கும் தேவி முதற்கொண்டு எல்லாப் பெண்களும் வெளியே வந்து பார்த்தார்கள். யார் வருவது? எதற்காக வருகிறார்கள்? எல்லோரும் பயந்தார்கள்.

கடுக்காத்ர வீடும் மனையும் பிடுங்கிக் கோலில்மத்தாயியிக்குக் கொடுக்க வந்தவர்கள் அவர்கள். கடுக்காத்ர கொச்சுண்ணிநாயர் ஏற்படுத்தி வைத்த கடன். கொச்சுண்ணிநாயர் அங்கே இல்லை. அவருக்காகக் காத்திருக்க நேரமில்லை என்று கோர்ட்டிலிருந்து வந்த ஆள் சொன்னான். அவன் ஒரு காகிதத்தை எடுத்து ஏற்ற இறக்கத்துடன் ராகம் போட்டுப் படித்தான். கடுக்காத்ர குடும்பத் தாரை வெளியேற்றிவிட்டுக் கோலில்மத்தாயியிக்கு மாற்றித்தர வேண்டுமென்று உரக்கப் படித்தான். ஒரு தண்டோரச் சத்தமும் கேட்டது. எல்லோரையும் வீட்டைவிட்டு வெளியேறச் சொல்லிக் கட்டளையிட்டான். இப்போது கடுக்காத்ர குடும்பம் தேவஸ்தானத் திற்குச் சொந்தமான ஓரிடத்தில் வேலியிட்டு ஆறு கால்நட்ட குடிசையில் குடியிருக்கிறது. தேவஸ்தானத்து வயலில் பச்சிலை மருந்து பறித்து விற்றுக் கொச்சுண்ணிநாயர் குடும்பம் பிழைப்பை நடத்துகிறது.

கோடாந்த்ர வாரிசற்று நின்றது. கோன்னோத்துக் குடும்பம் தரைமட்டமாகிவிட்டது. சீரட்ட வசிப்பிடம் முஸ்லீமிடம் போய்ச் சேர்ந்தது. மங்கலச்சேரி சின்னா பின்னமாகிவிட்டது. பல்வேறிடங் களில் ஓலைக் குடிசைகளில் மங்கலச்சேரிப் பெண்கள் இப்போது வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். சீரட்டயில் இப்போது குஞ்சுண்ணிக்கைமள்தான் காரணவர். என்ன காரணத்திற்காகக் காரணவர் பொறுப்பை வகிக்கிறார்கள்? சும்மா ஒரு காரணவர். அவ்வளவுதான். கறுத்து மெலிந்தவர் இந்தக் குஞ்சுண்ணிக்கைமள். உடம்பு முழுக்க அரிப்பெடுக்கும் வறட்டுச் சொறி. எப்போதும் பல்லிளித்துக் கொண்டு அங்குமிங்குமாகச் சொறிந்து கொண் டிருப்பார். சர்ப்பக் கோபமாக இருக்கலாம். கோனோத்துக் காரணவர் கிருஷ்ணப் பிள்ளை என்பவர். காற்றடித்துப் பறந்து போவதைப் போலத்தான் கிருஷ்ணப்பிள்ளை நடப்பார். காக்கை மரத்தைவிட்டுக் கீழிறங்கும் முன்பாகவே கோன்னோத்துப் பிள்ளையும் சீரட்டக்கைமளும் தேவஸ்தானம் வந்து களஞ்சியத் திண்ணையில் ஏறி உட்கார்ந்து விடுவார்கள். இருவருக்கும் பேசிக்கொள்ள நேரமில்லை. கைமளுக்கு வம்பளக்க நேரமில்லை. உடம்பைச் சொறிந்து கொள்ளவேண்டும். கொப்புளங்களைக் குத்திக் கீற வேண்டும். கிருஷ்ணப்பிள்ளையின் கவனம் எப்போதும் ஈக்களைத் தேடி விரட்டுவதில் இருக்கும். எங்கேயாவது ஈ தென்பட்டால் அங்கே படாரென்று ஒரு அடி விழும். ஒரு ஈ கூடக் கோன்னோத்துக் கிருஷ்ணபிள்ளையின் உள்ளங்கை அடியிலிருந்து தப்ப முடியாது.

அறுநூறு மரக்கால் நிலம் மட்டுமே இப்போது தேவஸ்தானத் தின் நேரடி விவசாயத்தில் இருக்கிறது. மீதி நிலங்கள் எல்லாம் குத்தகைக்கு விடப்பட்டிருக்கின்றன. கிறிஸ்தவர்கள் தான் தேவஸ் தானத்து நிலங்களைக் குத்தகைக்கு எடுத்திருக்கிறார்கள். அவர்கள் முறைப்படிக் குத்தகை நெல்லை அளப்பார்கள். பிறகு எதற்காக நேரடி விவசாயம் செய்யவேண்டும்? இதற்கிடையே தேவஸ்தானத் திற்கு எதிராகவும் கோர்ட்டில் வழக்குகள் உண்டாயின. பிரதிவாதிகளாகாக்கப்பட்ட கோன்னோத்து ராமன்பிள்ளையும் சீரட்டக்கைமளும் கையொப்பமிட்டு தேவஸ்தானத்தைச் சேர்ந்த ஒரு நூறு மரக்கால்நிலம் சம்பந்தமாகக் கரிஞ்ஞூத்ர செறியானுக்கு குத்தகைச் சீட்டு கொடுக்கப்பட்டிருந்தது. ராமன்பிள்ளையைக் கோர்ட் பிரதிவாதியாக்கிச் சட்டம் போட்டிருக்கும் விஷயம் சொறியானுக்குத் தெரியாது. ஐம்பது மரக்கால் நெல் ராமன் பிள்ளைக்கு லஞ்சம் கொடுத்துத்தான் செறியான் குத்தகைச் சீட்டு வாங்கியிருந்திருக்கிறான். பட்டினி கிடந்தபோது ராமன்பிள்ளை அப்படிச் செய்துவிட்டார். ராமன்பிள்ளை இறந்ததும் அடுத்த வல்யச்சன் ஆனது ஈ பிடிக்கும் கிருஷ்ணபிள்ளை. நியாயப்படி இட்டிராமன் பிள்ளைதான் அடுத்த கோன்னோத்து வல்யச்சனாக ஆகியிருக்க வேண்டும். ஆனால் ராமன்பிள்ளை இறப்பதற்கு முன்பாகவே இட்டிராமன்பிள்ளை பாம்பு கடித்து இறந்துவிட்டார். இராமன்பிள்ளை குடும்பத்திற்குச் செய்த துரோகங்களின் பலனைத் தான் இட்டிராமன்பிள்ளை அனுபவித்தார் என்பதாக ராமன் பிள்ளையின் மனைவி கடம்மாட்டு கொச்சுக்கி சொன்னாள்.

ராமன்பிள்ளை செறியானுக்குக் குத்தகைச் சீட்டு எழுதிக் கொடுத்த நூறு மரக்கால் நிலத்தை ஏற்கெனவே தேவஸ்தானத்தி லிருந்து ஔதை குத்தகைக்கு எடுத்திருந்தான். அவன் நிலத்தை விட்டுக் கொடுக்கவில்லை. செறியான் தேவஸ்தானத்தைப் பிரதிவாதியாக்கிப் பிராது ஃபைல் செய்தான். ஸ்தானிகள் உண்டாக்கி வைத்த இந்த மாதிரியான காரியங்கள் நிர்வாகி குஞ்ஞன்பிள்ளைக்குத்தான் தலைவலியை உண்டாக்கின. அவருக்கும் வயதாகிவிட்டது. நிர்வாகப் பொறுப்பை வேறு யாரிடமாவது ஒப்படைத்துவிட்டு நழுவிக்கொள்ள வேண்டுமென்ற எண்ணம் அவருக்கு. பாலத்தோள் வீட்டு கிருஷ்ணதிருமேனியுடன் இதைப்பற்றி ஆலோசித்தார். நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள யார் இருக்கிறார்கள் அந்த ஊரில்? மூலப்படத்து கோவிந்தன் ஒத்துவரக்கூடிய ஒரு சரியான நபர். ஆனால் தன்னுடைய மடத்தில் கூட்டிப்பெருக்கிக் கொண்டிருந்த வேலைக்காரியான

குஞ்ஞுக்கியின் மகன்தான் கோவிந்தன் என்பதை நினைத்துப் பார்த்தபோது, அவர் வேண்டாம் என்று கிருஷ்ணதிருமேனி சொன்னார். நட்டாஸ்ஸேரி பத்மநாபன் என்றாலோ? புதிய பணக் காரன். திமிர்பிடித்தவன். அவனும் வேண்டாம். பிறகு யார்? கடைசியில் குஞ்ஞுண்பிள்ளை சொன்னார். பெரியவாளே அந்தப் பொறுப்பை ஏத்துக்கிடணும்.

பாலத்தோள் மடத்திற்கு இப்போது மூவாயிரம் மரக் காலுக்கும் அதிகமான நிலம் இருக்கிறது. எல்லாம் கிறிஸ்தவர் களுக்குக் குத்தகைக்கு விடப்பட்டிருக்கிறது. அவர்கள் முறைப்படிக் குத்தகை நெல்லை அளப்பார்கள். தேவஸ்தானத்தைவிட அதிக நெல் இப்போது பாலத்தோள் மடத்திற்கு வருகிறது. தேவஸ் தானத்து நிர்வாகத்தை ஏற்றுக்கொள்வதைப் பற்றிக் கிருஷ்ண திருமேனி தனது தம்பிகளுடனும் பிள்ளைகளிடமும் கலந்து ஆலோசித்தார். அவர்கள் எல்லோரும் அதை ஆமோதித்தார்கள்.

***

சீலாந்திப்பிள்ளி கேசவப்பிள்ளை காசிக்குப் போகத் தீர்மானித்தார். பீருகண்ணு முதலாளியின் கடையில் கணக்கெழுதிக் கொண்டிருக்கும்போது மனம் தளர்ந்து போகிறது. சாரநாத்துக்கு மனம் பறந்துபோகும். ஒருவருடம் வேண்டியிருக்கும் சாரநாத் சென்றடைவதற்கு. மிக நீண்ட பயணமாகத் தடியை ஊன்றியவாறு காவியுடை தரித்த யாத்திரை. காசியில் மணிகர்ணிகா கட்டத்தில் படுத்தபடி இறக்க வேண்டும். அதைவிடப்பெரிய பேறு வேறு என்ன இருக்க முடியும்? முன்னொரு காலத்தில் பெரியவர் ஒருவர் வடக்கிலிருந்து இந்த வழிகளையெல்லாம் தாண்டி, மக்கள் கூட்டத்தையும் தண்ணீர் ஊற்றுக்களையும் பசும்புல் மேடுகளையும் கடந்து இந்த ஊரில் வந்து குடியேறினார். மற்றொரு பெரியவர் தொடர்ந்தார்— பரமு மாமா. அவர் மகா பண்டிதர். அவருடைய உறவுக்காரன் என்று சொல்லிக்கொள்வதே ஒரு பெருமை. காசியிலிருந்து கபிலவஸ்துவுக்கும், பின்னர் மெக்காவுக்கும் ஜெருசலேமுக்கும் எல்லாம் போகக் கேசவபிள்ளையின் மனம் தவித்தது. ஜெருசலேம் போகும்போது, ஏசு கிறிஸ்துவின் சீடர் தாமஸ் வந்து சென்ற ஊர் என்னுடையது என்று சொல்லலாம். என்னுடைய ஊரார் சுவிசேஷம் கேட்டு மனமாற்றம் பெற்று மதமாற்றம் அடைந்தார்கள். மதமாற்றம் பெற்றவர்களை ஒதுக்கித்

தள்ளி வைக்காத ஊர் என்னுடைய ஊர். கபிலவஸ்துவுக்குச் செல்லும்போதும் பெருமையுடன் சொல்லலாம். முன்னொரு காலத்தில் இந்த ஊரிலிருந்து தெற்கு நோக்கிப்போன ஒரு மகாவித்துவானின் வாரிசு நான். என்னுடைய ஊர் யார் நாடி வந்தாலும் அவர்களை ஏற்றுக்கொள்ளும். அவர்களை இந்த ஊர்க் காரர்களாக மாற்றிவிடும். அப்படி ஒரு ஊர் வேறு எங்காவது இருக்கிறதா? தாய்! என்னுடைய ஊர் எனக்குத்தாய்.

கேசவபிள்ளை எல்லா வீடுகளுக்கும் போய் விடைபெற்றுக் கொண்டார். கோயிலில் நாற்பத்தியொரு நாட்கள் தியானத்தில் இருக்க வேண்டும். அதற்குப் பிறகுதான் காசிக்குக் கிளம்ப வேண்டும். அதுதான் முறை. எல்லோரும் கேசவபிள்ளையை வந்து பார்த்தார்கள்.

ஒருநாள் வெட்டிக்காட்டு நாணுக்குறுப்பு தன்னுடைய மருமகனை அழைத்துக்கொண்டு கேசவபிள்ளையைப் பார்க்க வந்தார். பதினான்கு வயது முதல்பெரிய பெரிய உத்தியோகஸ்தர் களின் வீடுகளில் சமையல்காரராக இருந்தார் நாணுக்குறுப்பு. இப்போது திருவனந்தபுரத்து ஜட்ஜ் ஒருவரின் சமையல்காரர். அவர் தன்னுடைய மருமகன் பரமேஸ்வரனைப் படிக்க வைத்துப் பெரிய ஆளாக்குவதற்காகத் தன்னுடன் அழைத்துச் சென்றிருந்தார். பரமேஸ்வரன் ஜட்ஜ் ஆகவேண்டும் என்பது நாணுக்குறுப்பின் ஆசை. காசிக்குப் போகும் கேசவப்பிள்ளையின் ஆசிகளை வாங்கத் தான் நாணுக்குறுப்பு மருமகனையும் அழைத்த வந்திருந்தார். கேசவபிள்ளை அந்த வாலிபனை ஆசீர்வதித்தார்.

ஊரில் பெரிய பெரிய குடும்பங்களெல்லாம் தகர்ந்தன. கூட்டிப்பெருக்கும் வேலைக்காரிகள் உட்படப் பலவகையான வேலைக்காரர்களின் குடும்பங்கள் அதற்கு மாறாக வளம்பெற்றன. மூலப்படம், நட்டாச்சேரி வெட்டிக்காடு ஆகிய குடும்பங் களெல்லாம் நல்ல நிலைமைக்கு வளர்ந்தன. அவர்களுக்குச் சொந்த மாக நிலம் உண்டு, விவசாயம் உண்டு. ஊரில் கிறிஸ்தவர் களுடையதுதான் பெரிய பணக்காரக் குடும்பங்கள். இதற்கெல்லாம் சேன்னாட்டு குஞ்சுநாயர் கூறும் காரணம் கலிமுற்றிவிட்டது என்பதுதான். கேசவபிள்ளையைப் பார்த்து வரச் சேன்னாடனும் சென்றார். சேன்னாடன் கேசவபிள்ளையின் ஓர் உறவினரும்கூட. அவர் கல்யாணம் செய்துகொண்டிருப்பது காசிக்குப் போன சீலாந்திப்பிள்ளி பரமுபிள்ளை வாத்தியாரின் மகளுடைய மகளைத்தான். ஊர் அழிந்துகொண்டிருக்கிறது என்பதுதான் சேன்னாடனின் அபிப்பிராயம். சமூகத்திற்குத் தலைவனில்லை.

விவசாயத்தில் விதை நடவுக்கு ஏற்றதான காலம் தெரிந்தவர்கள் இல்லை. புதிதாகப் படித்துவிட்டு வந்தவர்களுக்கு நாள் நட்சத்திரம் பார்க்கத் தெரியவில்லை. கிரகநிலை பார்த்துக் காலநிலையைக் கணிக்கத் தெரிந்தவர்கள் இல்லை. பிராமணர்களுக்குப் பேராசை பிடித்துவிட்டது. இனி ஊர் எப்படி உருப்படும் என்பதுதான் சேன்னாடனின் கவலை.

காசிக்குப் போக இன்னும் பதினான்கு நாட்கள்தான் இருக்கின்றன. கோயிலின் மாளிகைக் கீழ்ப்பகுதியில் தனித்திருக்கும் போது பிறந்து வளர்ந்த அந்த ஊரின ஒவ்வொரு குடும்பமும் மனிதனும் மரமும் கேசவப்பிள்ளையின் நினைவில் வரிசையாய்த் தவழும். இந்த ஊரில் மாமரங்களுக்கெல்லாம் பெயர்கள் உண்டு. மாம்பழக் காலம் குழந்தைகளுக்குத் திருவிழாக்காலம். பலாப்பழங் களுக்கும் வகை வகையான பெயர்கள் உண்டு. புன்னப்புஞ்சாரியன் நெல்லில் வடித்த சோற்றுக்கு நெய் கலந்த மணமிருக்கும். பிறந்த ஊர் தன்னைப் பிணைத்துக் கட்டுவதுபோல் கேசவபிள்ளைக்குத் தோன்றியது. இந்த ஊரில் உள்ள எல்லோரும் தன்மீது அன்பு கொண்டிருக்கிறார்கள். நான்கு எழுத்து படித்தவர் என்ற மரியாதை தேடிக்கொண்டவர். இங்கே சொந்தமாக ஒரு வீடு கட்டிக்கொண்டு ஒதுங்கிவாழ கேசவப்பிள்ளை ஆசைப்பட்டார். சிலாந்திப் பிள்ளியில் குடியிருக்க விருப்பம் இல்லாமலில்லை. அங்குள்ள கிரந்த வீட்டில் எவ்வளவு விலைமதிக்க முடியாத சொத்துக்கள் அடங்கியிருக்கின்றன. கடுக்காத்ர தேவியைக்கூடவே அழைத்து வந்து குடியிருக்கத்தான் சொந்த வீட்டைக் கனவு கண்டார். தேவியைப் பற்றிய சிந்தனைகளில் அவருடைய மனது நிலைத்தது.

நினைவு தெரிந்த நாள் முதல் எத்தனை எத்தனை மனிதர்கள் இறந்துவிட்டார்கள். அத்துடன் அவர்களை மறந்தாயிற்று. அதற்குப் பிறகும் பிறப்புகள். இந்த ஊரின் கதை என்பது மனிதன் வாழ்ந்து முடித்த கதைதான்.

காசிக்குப் போவதற்கு முந்தின நாள் கேசவப்பிள்ளை வீட்டில் உட்கார்ந்து ஏதோ கிரந்தம் படித்தார். மனம் குழம்பி அலைக்கழிந்தது. யாரோ வெளியில் வந்து நின்றார்கள். அவர் தலைநிமிர்ந்து பார்த்தார். கடுக்காத்ர தேவி. அவளுடைய கண்கள் நிரம்பியிருந்தன. கால்கள் மெலிந்து, பிருஷ்டம் சூம்பி, தலை பருத்த ஒரு குழந்தை தோளில் படுத்திருந்தது. தேவி முகம் கவிழ்ந்தாள். அவளுடைய கன்னங்களின் வழியே கண்ணீர் வழிந்தது. கேசவப்பிள்ளை கண்ணீரை அடக்கிக் கொண்டார். அவர் சொன்னார், "எல்லாம் விதி" தேவி திரும்பி நடந்தாள்.

# 3

கோயில் வளாகத்தில் குள்ளநரி குடியேறி ஊளையிடுகிறது. முன்னெப்போதும் நடக்காதது. கோயிலும் ஊரும் அழிவதில் வேதனைப்படுபவர்கள் உண்டு. அவர்களில் ஒருவர் சேன்னாட்டு குஞ்சுநாயர். அவருடன் வேதனைப்படுவதற்கு கல்லாற்று மூப்பின், சுனக்குளத்து கிட்டுநாயர் ஆகியோர் போன்று பலரும் இருந் தார்கள். புராணங்களில் கூறப்பட்டிருப்பது எதுவும் பொய்யாய்ப் போகாது என்பது சேன்னாடனின் நம்பிக்கை. இது கலியுகத்தின் முடிவு காலம். இனி கீழ் ஜாதிக்காரர்கள் மேலோங்குவார்கள். தர்ம நியாயங்கள் தடுமாறும். ஊரில் சேன்னாடன் அளவுக்குப் புராணப் பாண்டித்தியம் உள்ளவர்கள் வேறு யாருமில்லை. காலத்தில் வந்திருக்கும் மாற்றங்களை, புராணங்களில் கூறப்பட்ட தர்ம நியாயங்களை எடுத்துச் சொல்லி விமர்சனம் செய்யத் தொடங்கினால் சேன்னாடன் பெரிய பேச்சாளராகி விடுவார். புதியநில அளவை நடப்புக்கு வந்ததற்குப் பிறகு நிலச் சரவுகள் சம்பந்தமாக உண்டான சட்ட திட்டங்களுடன் சேன்னாடனுக்கு இணக்கமில்லை. "தர்மமும் நீதியும் இருந்த காலத்தில் எப்படி நிலத்தோட கொடுக்கல் வாங்கல் இருந்தது தெரியுமா?" கல்லாற்று மூப்பீனிடம் கேட்ட கேள்வி இது. கொஞ்சம் வெற்றிலை போட்டு மென்று கொண்டு சேன்னாடன் பேச்சைத் தொடர்ந்தார், "பூவும் மண்ணும் சேர்த்து நுனி வாழை இலையில் வைத்து, குத்துவிளக்கை சாட்சியாக்கி, விற்கும் ஆள் வாங்கும் ஆளிடம் கொடுப்பார். அந்த ஒப்பந்தம் கல்லில் செதுக்கின மாதிரி. விற்கிற ஆள் விற்கிறது; வாங்கற ஆள் வாங்குறது; தீர்ந்து போச்சி. அன்றைக்கு ஒழுக்கமும் தர்மமும் நீதியும் நிறைஞ்சிருந்திச்சி. பின்னாலேதான் ஓலையிலே எழுதற பழக்கம் வந்தது. இன்னிக்குப் பத்திரம் போட்டாகணும் அதையும் ரிஜிஸ்டர் பண்ணனும். இது மட்டும்தானா? விற்றதை விற்கலேங்கறாங்க, வாங்கினதை வாங்கலேங்கறாங்க. இந்தப் போக்கு எங்கே போய் முடியப்போகுதோ?" எல்லாம் கெட்டழியும் போது சர்வசம்ஹாரத்துக்காகக் கடவுள் கல்கி அவதாரம் எடுப்பார். புயலில் அகப்பட்ட சருகுபோல சூரியன் பறக்கும்;

நட்சத்திரங்கள் நடுச்சாலையிலே விழுந்து சுற்றிச் சுழலும்; கிரகங்கள் மோதிக்கொள்ளும். இருட்டு வெறும் இருட்டு. பிறகு பேய்மழை ஆரம்பிக்கும். அது அடுத்த யுகத்தின் ஆரம்பமாக இருக்கும்." பாகவதமும் மற்ற புராணங்களும் ஆக எல்லாம் சேர்த்துப் படித்துச் சேகரித்த அறிவு சேன்னாடனுக்கு உண்டு. "இப்போ புராணம் படிச்சா யாருக்குப் புரியது? சில வீடுகளிலே ராத்திரி சாப்பாடு முடிச்சி பேருக்கு ஒரு வாசிப்பு நடக்குது. யாரு புரிஞ்சி வாசிக் கிறாங்க?" அதுதான் சேன்னாடனின் புகார். கேட்டுக் கொண் டிருந்த கல்லாற்று மூப்பின் சேன்னாடனின் உரையாடலை ஊர் விவகாரங்களுக்குத் திருப்பினார். உப்பம்பறம்பில் குஞ்ஞன் பிள்ளைக்கு தேவஸ்தானத்து நிர்வாகத்திலிருந்து விலகிக்கொள்ள எண்ணம். பாலத்தோள் இல்லத்து கிருஷ்ண திருமேனியுடன் கலந்து ஆலோசித்தார். தம்பிமார்கள் நிர்ப்பந்தப்படுத்தியதால் அவர் அதை ஏற்றுக்கொண்டிருந்தார். கிருஷ்ணதிருமேனிக்காக, அவருடைய தம்பி கணபதி நம்பூதிரிதான் தேவஸ்தானத்து அறைகளில் சேமிப்பில் இருந்தவற்றையும், அர்ச்சனைப் பாத்திரங் களையும், திருவாபரணங்களையும் மற்றவற்றையும் கணக்கின்படி சரிபார்த்து பொறுப்பேற்றுக் கொண்டார். சேன்னாடனை அதிரச் செய்த ஒரு செய்தியாக இருந்தது அது. அர்ச்சனை செய்யும் சாதிக்காரரை நிர்வாகியாக்குவது சரியில்லை, என்பதுதான் சேன்னாடனின் அபிப்பிராயம். ஆனால் கணபதி நம்பூதிரி நல்ல கெட்டிக்காரர்; அவர் எல்லாவற்றையும் பார்த்துக் கொள்வார் என்பதுதான் ஊரில் பெரும்பானோரின் எண்ணம். சேன்னாட னுக்கு அதில் ஒப்புதல் இல்லை. நெல்லின் மீதும் பணத்தின்மீதும் பேராசை கொண்டவர்கள் பாலத்தோள் குடும்பத்தார்கள். அவர்கள் கோயிலையே விழுங்கினாலும் யாருக்கும் தெரியாது. கேள்வி கேட்க அதிகாரமுள்ள ஸ்தானிகளும் இல்லை. அதனால் கோயில் நிர்வாகத்தைச் சமூகத்தாரே பொறுப்பேற்று நடத்த வேண்டும் என்று அவர்களையெல்லாம் கூட்டிவைத்துப் பேசி விவாதித்தார். முன்பு நிறுத்தி வைத்திருந்த முதல்தேதிக் கூட்டங் களைக் கூட்டி ஆறு வகை சமூகத்து மக்களும் கலந்து பேசினார்கள். தற்போதைக்கு கணபதி நம்பூதிரியே நிர்வாகத்தைத் தொடரட்டும் என்று சமூகத்தார்கள் தீர்மானித்தார்கள். அப்படித் தீர்மானிக்க ஊராரைத் தூண்டியது வேறொன்றுமில்லை, அந்த வருடத்துத் திருவிழா கணபதி நம்பூதிரியின் தலைமையில் கோலாகலமாகக் கொண்டாடப்பட்டிருந்தது. பெயருக்கு மட்டும் ஸ்தானிகளாக இருந்து வந்த ஈ பிடிக்கும் கிருஷ்ணப்பிள்ளையையும் வறட்டுச்

சொறியன் குஞ்சுண்ணிக்கைமளையும் பொருட்படுத்தி மரியாதை செய்து மகிழ்விக்க கணபதி நம்பூதிரி மறக்கவில்லை. இப்படி ஒரு திருவிழா முன்னெப்போதும் நடந்ததில்லையென்று ஊராருக்குத் தோன்றியது. ஆனால் கணபதி நம்பூதிரியை தளரச் செய்த ஒரு சம்பவம் நடந்தது. முன்பு திருவிழா பார்ப்பதற்கு ஸ்தானிகளின் குடும்பத்துக் குஞ்ஞும்மைமார்கள் தனியே தங்கியிருந்து பார்க்கும் உரிமை பெற்ற மாளிகையின் மாடியில் இந்தத் தடவை ஒரு குஞ்ஞும்மை மட்டுமே தென்பட்டாள். அதுவும் கணபதி நம்பூரியின் உறவுக்காரியான ஒரு குஞ்ஞும்மை. அவள் அந்த ஊரைச் சேர்ந்த பெண்ணல்ல. சேர்த்தலயில் ஒரு மாடம்பிக் குடும்பத்தைச் சேர்ந்த குஞ்ஞும்மை அவள். கணபதி நம்பூதிரியின் மனைவியானதனால் யாரும் அங்கே போகவில்லை. ஆனால் களத்தில் கொச்சுதேவிக்கு இதைப் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. மோர் வியாபாரம் செய்பவள் அவள். மாளிகை நோக்கி அவள் போனாள். பின்னா லேயே ஒரு மந்தைப் பெண்கள் அங்கே போனார்கள். நொடிப் பொழுதில் கலகலவென்று ரகளை உண்டாக்கிய சில சலம்பல் பெண்களுக்கிடையே அகப்பட்டு மூச்சுமுட்டிப்போனாள் கணபதி நம்பூதிரியின் மனைவி. சுற்றிச் சூழ்ந்தவர்களெல்லாம் சேர்ந்து தன்னைப் பிறாண்டிப் பிடுங்கிவிடுவார்கள் என்று அவள் பயந்தாள். ஒரு விதமாக வழி ஏற்படுத்திக்கொண்டு அவள் படி யிறங்கிக்கீழே போய்விட்டாள். இவ்வாறு செய்தது வரம்பு மீறியதாக இருந்தாலும் ஊரில் வீரப்பெண்கள் கணபதி நம்பூதிரியை மானக்கேடு செய்ததில் சேன்னாடன் மகிழ்ந்தார். அந்த வீரப் பெண்களில் முதலில் காலடி எடுத்து வைத்த கொச்சு தேவி கோன்னோத்துக் குடும்பத்தைச் சேர்ந்தவள் என்று சொன்னால், ஐஸ்வர்ய தேவதைகளைப்போல இருந்த பழைய கோன்னோத்துக் குஞ்ஞும்மைகளைப் பார்த்தவர்கள் நம்ப மாட்டார்கள்.

தேவஸ்தானத்தைச் சேர்ந்த நிலங்களின் குத்தகையை அளந்து கொடுக்கக் கிறிஸ்தவக் குடும்பங்கள் பரிசல்கள் நிறைய நெல்லுடன் வந்தன. கணபதி நம்பூதிரி அந்த சந்தர்ப்பத்தை நன்றாகப் பயன் படுத்திக் கொண்டார். தேவஸ்தானத்து நிலங்களைக் குத்தகை எடுத்த கிறிஸ்தவர்களில் எல்லோரும் பாலத்தோள் குடும்பத்து நிலங்களையும் குத்தகை எடுத்திருந்தார்கள். அவர்கள் எல்லோரும் அந்தக் குடும்பங்களுக்கு முன் வருடங்களில் குத்தகை பாக்கி வைத்திருந்தார்கள். இந்த வருடம் அவர்கள் தேவஸ்தானத்திற்கு அளப்பதாகக் கொண்டு வந்ததிலிருந்து முதலில் குடும்பங்களுக்கு

அளக்க வேண்டிய பாக்கியைச் சரிசெய்ய வேண்டுமென்று கணபதி நம்பூதிரி அளந்து நடப்பு ஆண்டுக் குத்தகை நெல்லும் போக மிச்சமிருந்தது மட்டும்தான் தேவஸ்தானத்திற்குக் கிடைத்தது. அது கோயிலின் அன்றாடத் தேவைகளுக்குக் கூடப்போதவில்லை. கடவுளுக்குச் செலுத்த வேண்டிய சொத்தைக் குடும்பங்களுக்குப் போய்ச்சேர வேண்டியதாக மாற்றிய கணபதி நம்பூதிரியை அண்ணன் கிருஷ்ண நம்பூதிரி கோபித்துக் கொண்டார். "தம்பீ, தெய்வத்தோட திருமேனி வியர்க்கும் என்பதாகக் கேள்விப்பட்டிருக்கேன். அப்படி நடந்தால் நாட்டுக்கு ஆகாது. அர்ச்சனை செய்துக்கிட்டு இருக்கிறதனாலே அது வெறும் கல்லுதானேன்னு நமக்குத் தோணும். அப்படி இல்லே. நமக்குக் கிடைக்க வேண்டிய பாக்கியைத் தீர்த்து சரிசெய்திட்டு கெட்டிக்காரனாயிட்டோம்னு நினைக்காதே."

கணபதி செய்த காரியம் ஊராருக்குத் தெரிந்தது. நிர்வாகியாக இருந்துகொண்டு கணபதி நம்பூதிரி தேவஸ்தானத்துச் சொத்தைச் சுரண்டிக் கொண்டிருக்கிறார் என்பதாகப பலர் அபிப்பிராயப் பட்டார்கள். சேன்னாடனும் மற்றவர்களும் சமூகத்தார்களின் முதல்தேதிக் கூட்டத்தைக் கூட்டி இந்த அத்துமீறலை ஒரு முடிவுக்குக் கொண்டுவர வேண்டுமென்று அபிப்பிராயப்பட்டார்கள். இதற்கிடையே ஊரைக் கலக்கி அலைக்கழித்த மற்றொரு நிகழ்ச்சி இடம்பெற்றது. ஒருநாள் கோயிலில் பூசாரி முந்தின நாள் படைத்த நைவேத்தியங்களை ஒதுக்கித் துப்புரவு செய்தபோது விக்கிரகத்திற்கு அடியில் பூச்சிகள் நுரைபோலப் பொங்கி வெளிப் படுவதைப் பார்த்தார். தெய்வத்தின் சக்தி தேய்ந்துவிட்டிருக்கிறது. ஊர் அழிவதற்கான அறிகுறி. முதல்தேதிக் கூட்டம்கூடியது. சற்றே தீயும் புகையும் கிளம்பின. தேவஸ்தானம் சமூகத்தாரின் கட்டுப் பாட்டுக்குள் வரவேண்டுமென்று பலர் வாதித்தார்கள். தற் போதைக்கு தெய்வத்தின் சக்தியை மீட்டெடுக்க வேண்டியதுதான் முக்கியம். அதற்கு அஷ்டபந்த கலசம் நடத்த வேண்டும். ஆனால் அதற்குப் பணம் எங்கே இருக்கிறது? நெல் எங்கே இருக்கிறது? அதற்கு மட்டும் யாரிடமும் பதில் இல்லை. எல்லோரையும் அதிசயத்தில் ஆழ்த்தியபடி சில தினங்களில் தேவஸ்தானத்துப் படித்துறையில் நெல்நிறைந்த இரண்டு தோணிகள் வந்தன. கணபதி நம்பூதிரிக்குத் தேவைப்பட்டபோது ஆற்றுக்கடலில் மாத்துள்ளவும் பருத்திக்காட்டு சௌரியாரும் ஒவ்வொரு தோணி நெல்லை தேவஸ்தானத்துக்கு அனுப்புவார்கள். தேவஸ்தானத்து நிலங்களைக் குத்தகைக்கு எடுத்து விவசாயம் செய்யும் கிறிஸ்தவர்கள் அவர்கள்.

கணபதி நம்பூதிரி வந்து கேட்டபோது உதாசீனப்படுத்த அவர் களுக்கு மனம் வரவில்லை. திருமேனியின் செயல்திறனைப் போற்றிப் பராட்டினார்கள் கிறிஸ்தவர்களான விசுவாசிகள். கணபதி நம்பூதிரியின் நிர்வாகத் திறமையை வெளிப்படுத்திய மற்றொரு சம்பவமாக அது விளங்கியது. பெரிய தந்த்ரிமார்கள் வந்து அஷ்டபந்தக் கலசம் நடத்தினார்கள். ஊரார் எல்லோரும் அதற்கு முழுமனதுடன் ஒத்துழைத்தார்கள். தெய்வம் பூரண சக்தியை மீட்டெடுத்ததாக ஜோசியர்கள் கவனமாகக் கணக்குப் பார்த்துச் சொன்னார்கள்.

இப்போது ஊர் முழுவதும் தெளிவாகப் புரிந்துகொண்டு விட்டது. ஆட்களின் சுபாவத்தில் ஒரு மாற்றம் வெளிப்பட்டது. எல்லோரும் குளித்து முடித்து சுத்தமாக நடமாடுகிறார்கள். இருளடர்ந்துகிடந்த கோயிலும் கர்ப்பகிரகமும் பளிச்சென்றிருக் கின்றன. இதெல்லாம் கணபதி நம்பூதிரியின் சாமர்த்தியம் என்று சொல்லாதவர் கிடையாது. சேன்னாடனும்கூட கணபதி நம்பூதிரியை எதிர்த்துப் பேசமுடியாத நிலைமை. ஆனால் ஆற்றுக்கடலில் மாத்துள்ளவுக்கும் பருத்திக்காட்டு சௌரி யாருக்கும் தேவஸ்தானத்துக்குச் சொந்தமான சில நல்ல நிலங் களையும் சேர்த்து கணபதி நம்பூதிரி விட்டுக்கொடுத்தது ஊரார் எவருக்கும் தெரியாது.

***

சேன்னாடன் இருட்டுவதற்கு ஐந்து நாழிகை முன்பாகவே சாப்பாடு முடித்து மனைவி இருக்கும் வீட்டிற்குப் புறப்படுவார். கோயிற்புரம் என்பது மனைவி வீட்டின் பெயர். குஞ்ஞுமாளு அம்மை அவருடைய மனைவி. இரண்டாம் ஜாமம் பாதிவரை கோயிற்புரத்து வீட்டிலிருந்து புராண பாராயணம் கேட்கலாம். சேன்னாடன் நல்ல வாசிப்பாளர். வாசித்து அர்த்தமும் சொல்வார். கேட்பதற்கு குஞ்ஞுமாளு அம்மையும் மகளும் மகனும் அக்கம் பக்கத்துப் பெண்களும் இருப்பார்கள். ஒருநாள் வாசிப்பு நடந்து கொண்டிருந்தபோது அறிமுகமற்ற இரண்டு புதியவர்கள் அங்கே வந்தார்கள். ஒரு பெண்ணும் ஓர் ஆணும். வந்தவர்கள் யாரென்று மங்கலான வெளிச்சத்தில் சேன்னாடனுக்கு முதலில் புரியவில்லை. வடக்கு மலபாரிலிருந்து ஒரு நம்பூதிரியும் அவருடைய மகளும் என்பதாக அவர்கள் தங்களைத் தாங்களே அறிமுகம் செய்து

கொண்டார்கள். பிரசித்தமான காங்கோத்துக் குடும்பத்தில் பெயர் பெற்றிருந்த பவத்ராதன் நம்பூதிரியும் அவருடைய மகள் தோத்ரக்குட்டி அந்தர்ஜனமும்தான் தாங்கள் இருவரும் என்று சொல்லியும் சேன்னாடனுக்கு நம்பிக்கை வரவில்லை. ஏறநாடு வள்ளுவநாடு வட்டாரங்களில் முன்பு தான் பார்த்திருக்கும் ஒரு முஸ்லீமின் சாயலைச் சேன்னாடன் அவர்களில் கண்டார். ஆள் மாறாட்டமோ என்று சந்தேகப்பட்டார். பவத்ராதன் நம்பூதிரியைச் சேன்னாடன் காங்கோத்து வீட்டில் வைத்துப் பார்த்திருக்கிறார். சேன்னாட்டு குஞ்சுநாயரின் தம்பி சேன்னாட்டு கேசவன் வடக்குப் பிராந்தியங்களில் பிரபலமான ஒரு கதகளி ஆட்டக்காரர். கேசவன் பங்கு பெறாத ஒரு கதகளி அரங்கு வடக்குப் பிராந்தியங்களில் இல்லையென்றே சொல்லலாம். அவ்விடங்களிலுள்ள பெரிய பெரிய நம்பூதிரிமார்களுக்குப் பிரியமான கதகளிக் கலைஞன் கேசவன். தம்பியுடன் சேர்ந்துதான் குஞ்சுநாயரும் வடக்குப் பகுதிகளில் சஞ்சரித்தார். அப்போதுதான் சேன்னாடனும் பவத் ராதன் நம்பூதிரியும் ஒருவருக்கொருவர் அறிமுகமானார்கள். மலபார்ப்பகுதியில் நிகழ்ந்த மாப்பிள்ளைமார் இனக்கலவரத்தில் நிர்ப்பந்தம் காரணமாக முஸ்லீமாக மதமாற்றம் செய்யப்பட்டு, அங்கிருந்து அபயம் தேடி பவத்ராதனும் அவரது மகளும் திருவிதாங்கூர் சென்றடைந்தார்கள். இப்போது இவர் பவத்ராதன் அல்ல; அகம்மது. மகளுடைய பெயர் தோத்ரக்குட்டி அல்ல; ஆமினா. மாப்பிள்ளைமார் பவத்ராதனைப் பிடித்துக்கொண்டு போய்க் குடுமியை வெட்டியெடுத்து, தலையை மொட்டையடித்து, தொப்பி அணிவித்து, இடுப்பில் முண்டு சுற்றினார்கள். பசு மாமிசத்தை ஊட்டினார்கள். அவர்களுடைய கதைகளைக் கேட்டுச் சேன்னாடன் நடுங்கினார். மற்றொரு கேள்வி எஞ்சி யிருக்கிறது. மதம் மாறிவிட்ட போதிலும் ஒரு பிராமணனும் பிராமணத்தியும் அல்லவா? அவர்களை ஒரு சூத்திர வீட்டில் எப்படி வரவேற்று உபசரிப்பது? அவர்களுக்குச் சாப்பாடு கொடுப்பது எப்படி? ஆசார மரியாதைகள் தெரிந்த சேன்னாடன் பெரும் தர்மசங்கடத்தில் ஆழ்ந்தார். கடைசியில் அவர்களை ஒரு பிராமணர் வீட்டில் தங்கவைக்கத் தீர்மானித்தார். அவர்களைக் கீழ்மேல் வீட்டிற்குக் கூட்டிக்கொண்டுபோனார்.

கீழ்மேல் வீட்டில் கோவிந்தரும் தம்பிமாரும் யோசித்தார்கள். எங்கே உட்கார வைத்து பவத்ராதனுக்கும் தோத்ரக்குட்டிக்கும் சாப்பாடு பரிமாறுவது? அடுக்களை உள்கூடத்தில் பிராமணருக் கான இடத்தில் இவர்களை உட்கார வைத்துச் சாப்பாடு போடுவது

சரியல்ல. நாயர்களுக்குச் சாப்பாடுபோடும் வெளிக்கூடத்திலும் கூடாது. அங்கே மதம் மாறியவர்களை உட்கார வைத்துச் சாப்பாடு போட்டார்கள் என்பதை நாயர்கள் அறிந்தால் அதற்குப் பிறகு இந்தக் கீழ்மேல் வீட்டில் வெளிக்கூடத்தில் அமர்ந்து நாயர்கள் சாப்பிடமாட்டார்கள். கடைசியில் வேறு மதத்தார்க்குச் சாப்பாடு போடும் நெல்புடைக்கும் அறையில் இலை போட்டார்கள். பிராமணர்களுக்கான அனுஷ்டானங்கள் எதுவும் இல்லாமல் பவத்ராதனும் கோத்ரக்குட்டியும் சாப்பிட்டு முடித்தார்கள். அவர்களுக்குப் பரிமாறியது போக மிஞ்சிய சோறும் கறிகளும் கூட்டிப் பெருக்கும் வேலைக்காரிகளுக்குக்கூட ஆகாது. கடைசியில் அவற்றையெல்லாம் நாய்களுக்குப் போட்டார்கள்.

மாப்பிள்ளை கலகத்தில் என்ன நடந்ததென்று பவத்ராதன் நம்பூதிரி கோவிந்தரிடம் விஸ்தாரமாகச் சொன்னார். குடியானவர்களான முஸ்லீம்களுக்குச் செல்வச் செருக்கான பெரிய நம்பூதிரிகளின் வீடுகளுடன் பகை இருந்து வந்தது. வேலை நீக்கம் செய்வதும் குத்தகை நிலுவை வசூலிப்பதும் காரணமாக அவர்களும் நிலச்சுவான்தார்களும் எதிரெதிர் ஆனார்கள். காங்கோத்து மனையில் நடந்ததை வைத்துக்கூற வேண்டுமானால், அங்கிருந்த காரியஸ்தன் சாமுமேனோனுடன் மாப்பிள்ளைமார்களுக்குக் கடும் பகைமை. காங்கோத்து மனைக்குரிய குத்தகை நிலுவை வசூலிக்க சாமுமேனோனுடன் துணைக்குச் சேர்ந்து போன ஆள்தான் பவத்ராதன் நம்பூதிரி. கலகம் உண்டானபோது பாதுகாப்புக்காக ஓடிஒளிந்த காங்கோத்து மனையின் நம்பூதிரியைக் கலகக்காரர்கள் எதுவும் செய்யவில்லை. அவர்கள் ஓடிப்பிடித்தது காரியஸ்தன் சாமுமேனோனையும் பவத்ராதனையும்தான். சாமுமேனோனுக்கு அழகான ஒரு மகள் இருந்தாள்—சின்னம்மு. அவளை விரும்பிய மொய்து என்றொரு முஸ்லீம் இளைஞன் அவளை ரகசியமாகக் கடத்திச் சென்று ஒளித்து வைத்தான். அதை அறிந்த பத்துப்பதினைந்து மாப்பிளைமார் அங்கே சென்றார்கள். அவர்களைத் தடுத்த மொய்துவை அவர்கள் பிடித்துக் கட்டினார்கள். பிறகு அவளிருந்த அறைக்குள் ஒவ்வொருவராகப் போய்வந்தார்கள். சின்னம்மு இறந்தாள். மாப்பிள்ளைமாரிடமிருந்து குத்தகை நிலுவையை வசூலிக்க முயன்ற சாமுமேனோனின் அக்கிரமங்களுக்குத் துணை நின்ற பவத்ராதனையும் அவர்கள் விடவில்லை. ஓடி ஒளிந்த பவத்ராதனைப் பிடித்தது மாப்பிள்ளைமார்களின் சங்கத் தலைவன் காங்கோத்து அகமது குஞ்ஞி என்பவன். காங்கோத்து இனத்துக்குப் பல ஊர்களில் பல

கிளைகள் ஏற்பட்டிருந்ததில் ஒன்றுதான் மதம் மாறியதாக பவத்ராதன் என்று கேள்விப்பட்டதுண்டு. தனக்கு நேராகக் கத்தி ஓங்கிய அகமதும் முன்பு நம்பூதிரியாக இருந்தவன் என்பது அவனுக்குப் புரிந்தது. அகமது பவத்ராதனைக் கொல்லவில்லை. மாறாக, பிடித்துக்கொண்டுபோய் மதம் மாற்றி முஸ்லீம் ஆக்கினான். தோத்ரக்குட்டிக்கும் சில பலாத்காரங்களைப் பொறுத்துக்கொள்ள நேர்ந்தது. கடைசியில் மதம் மாறவும் செய்தாள். அந்தக் கதைகளையெல்லாம் தோத்ரக்குட்டி என்ற ஆமினா கீழ்மேல், பாலத்தோள் ஆகிய குடும்பங்களின் பிராமணப் பெண்களிடம் விரிவாகச் சொன்னாள். அந்தக் கதைகளைக் கேட்டு அவர்கள் ஸ்தம்பித்துப் போனார்கள். சில நாட்கள் கீழ்மேல் குடும்பத்தில் தங்கியிருந்துவிட்டு பவத்ராதனும் மகளும் திரும்பிப் போனார்கள். எங்கே என்று தெரியவில்லை. யாரும் கேட்டுக் கொள்ளவும் இல்லை. சேன்னாடன் அவர்களுக்குக் கொஞ்சமே பணம்கொடுத்து அனுப்பினார். அவர்கள் புறப்பட்டுச் சென்றார்கள். தகப்பனும் மகளும் முன்னும் பின்னுமாக நடந்து போவதைச் சேன்னாடன் பார்த்தபடி நின்றிருந்தார்.

பவத்ராதன் நம்பூதிரியின் கதையைக் கேட்டது முதல் கணபதி நம்பூதிரிக்குத் திகைப்பாகிவிட்டது. கோயில் நிர்வாகத்தைப் பொறுப்பேற்றது முதல் இங்கே சமூகத்திற்கு சத்ருக்கள் ஏற்பட்டிருக் கிறார்கள். பழைய காலமல்ல. பிராமண பக்தி என்ற ஒன்று இல்லவே இல்லை. சமூகத்தைச் சேர்ந்த நிலங்களிலெல்லாம் கிறிஸ்தவர்கள் தான் விவசாயம் செய்கிறார்கள். அவர்கள் குத்தகை அளக்கச் சம்மதப்படாத காலம் வரலாம். தேவஸ்தான நிர்வாகம் மேன்மை அடையும் போது சத்ருக்கள் பெருகுவார்கள். அண்ணனும் தம்பியுமாக உட்கார்ந்து ஆலோசித்தார்கள். கடைசியில் தேவஸ்தானத்து நிர்வாகப் பதவியை கணபதி நம்பூதிரி உதறத் தீர்மானித்தார். சேன்னாடனுக்கு ஆளனுப்பி அதைத் தெரியப்படுத்தவும் செய்தார். சேன்னாடனுக்கு அதை நம்ப முடிய வில்லை. கணபதி நம்பூதிரியின் இந்தப் பதவி உதறலில் ஏதோ கள்ளத்தனம் இருப்பதாகக் கல்லாற்று மூப்பீனுக்கும் தோன்றியது. ஊர் முழுக்க இந்தச் செய்தி தெரிந்தது. கணபதி நம்பூதிரி எதற்காக நிர்வாகப் பொறுப்பைக் கைவிடுகிறார்? எல்லோரும் கேட்டார்கள். கோயிலையெல்லாம் வள்ளிசாத் துடைச்சி கழுவியிருப்பாரு. மிச்சம் எதுவும் இருந்திருக்காது. நட்டாச்சேரி பத்மநாபன் தான் அதைச் சொன்னார். இப்போ அன்றாடப் பாட்டுக்கு தேவஸ் தானத்துப் படகுத்துறையில் மாப்பிள்ளைமாரின் தயவுக்காகக்

கெஞ்ச வேண்டியிருக்கிறது. வடக்கே கலவரம் ஏற்பட்ட பிறகு கணபதி நம்பூதிரி பயந்து கிடக்கிறார் என்பதாகச் சிலர் சொன்னார்கள்.

***

சீலாந்திப்பிள்ளி பரமுவாத்தியார் மகள் உண்ணாச்சியம்மையைத் திருமணம் செய்து கொண்டவர், நெல் களஞ்சிய மேலதிகாரி ஈச்சர பிள்ளை. இந்த ஈச்சரபிள்ளையின் தாய்மாமன் மாதுபிள்ளையும் சிறிது காலம் நெற்களஞ்சிய மேலதிகாரியாக இருந்தார். குட்டமங்கலத்து ஏழம்பிள்ளிக் குடும்பத்தைச் சேர்ந்தவர் அவர். நில அளவை முடிந்து அரசாங்கத்திற்குச் சொந்தமான நிலங்களை வரையறுத்து விவசாயத்திற்கு மீண்டும் வகை செய்யப்பட்டது. மகாராஜாவின் நேரடிச் சொத்து அந்த நிலங்கள். அங்கங்கே கிடைக்கும் குத்தகை நெல்லைச் சேகரிக்க அந்தந்தப் பகுதிகளில் நெல்களஞ்சியங்களை அமைத்தார். அந்த நெல் களஞ்சியங்களைப் பொறுப்பாகப் பார்த்துக் கொள்பவர்தான் நெல் களஞ்சிய மேலதிகாரி. மாதுபிள்ளை தனது உத்தியோகத்திலிருந்து விலகு வதற்கு முன்புதான் ஈச்சரபிள்ளை நெல் களஞ்சியத்தில் கணக்குப் பிள்ளையானார். அவருக்கு நெல் மீதோ, பணத்தின்மீதோ பேராசை கிடையாது. வாக்குச் சுத்தமானவர்; நல்ல பழக்கவழக்கம் உள்ளவர். மருமகன் தாய்மாமனைவிட அதிகப் பொதுஜன ஆதரவு பெற்றவரானார். ஒருசமயம் மருமகன் தாய்மாமனிடம் சொன்னார். நான்... நான் என் பெண்டாட்டி யாருன்னு தீர்மானிச்சிட்டேன். அன்றைய நாள்வரை எந்த மருமகனும் தாய்மாமனிடமே அப்படிச் சொன்னதில்லை. மாதுபிள்ளை சற்றே திடுக்கிட்டார் என்ற போதிலும் அமைதியாகக் கேட்டார். பொண்ணு யாருப்பா? ஈச்சர பிள்ளை வெட்கம் எதுவும் இல்லாமல் சொன்னார், 'சீலாந்திப் பிள்ளி வாத்தியார் மகள்'. பரமுவாத்தியார் மனைவியான கொச்சிட்டூலியின் வீடு அவரே அமைத்துக் கொடுத்த ஒரு மண் குடிசை. நாட்டு அத்திமரத்து ஓலை வேய்ந்த குடிசை. நீ அந்த மண் குடிசையிலேயே கிடக்க வேண்டியிருக்கும் என்று தாய்மாமன் மருமகனுக்கு எதிர்காலத்தைச் சுட்டிக்காட்டினார். அதாவது, சீலாந்திப்பிள்ளி பரமுவின் மகளை அண்டி நின்றால் அதற்குப் பிறகு ஈச்சரபிள்ளை ஏழம்பிள்ளிக் குடும்பத்திலிருந்து தனியே ஒதுக்கி வைக்கப்படுவார். ஆனால் ஈச்சரபிள்ளை எதையும் தியாகம்

செய்யத் தயாராக இருந்தார். அந்தத் திருமணம் நடந்தது. ஈச்சரபிள்ளை மனைவியுடன் அவளுடைய வீட்டிலேயே தங்கி விட்டார். நாளாவட்டத்தில் அவர் முறைப்படி நெல் களஞ்சிய மேலதிகாரியானார். நிறையப் பேரின் ஆதரவு பெற்றவரானார். அன்று ஊரில் உத்தமத் தாம்பத்தியத்திற்கு உதாரணமாக ஊரார் சுட்டிக்காட்டியது ஈச்சரபிள்ளையும் உண்ணாச்சியம்மையும் நடத்திய தாம்பத்தியத்தைத்தான். உண்ணாச்சியம்மையைப் பற்றி எல்லோருக்கும் நல்ல அபிப்பிராயம். போதாததற்கு எஜமானரின் மனைவி. அவள் எவருக்கும் எந்த வஞ்சனையும் செய்யாதவள். சொந்தமாகப் பத்து மரக்கால் விதைப்பாடு வேண்டுமென்று மனைவி ஆசைப்பட்டதும், ஈச்சரப்பிள்ளை ஐம்பது மரக்கால் விதைப்பாட்டு நிலத்தை அவளுடைய பெயரில் வாங்கிக் கொடுத்தார். அதற்கான பணம் உண்ணாச்சியம்மையின் சொந்த சம்பாத்தியத்தையும் உள்ளடக்கியதுதான். இதெல்லாம் இருந்தும்கூட உண்ணாச்சியம்மைக்குக் கணவன் வீட்டில் அடுக்களைக்குள் நுழைய அனுமதியில்லை. ஒரு சமயம் ஏழம்பிள்ளி வீட்டிற்குச் சென்றபோது அங்கிருந்த தெற்குக் கூடத்தில்தான் அவளுக்குச் சோறு பரிமாறப்பட்டது. ஈச்சர பிள்ளையும் அங்கேதான் அவளுடன் உட்கார்ந்து சாப்பிட்டு முடித்தார். அவ்வாறாக ஈச்சாபிள்ளையும் ஒதுக்கி வைக்கப்பட்டார். அதற்குப் பிறகு அவர் சொந்த வீட்டுப்பக்கமே போகவில்லை. உண்ணாச்சியம்மையின் மண்குடிசை இருந்த இடத்தில் அவர் ஒரு அழகான வீடு கட்டினார். பரமுவும் மனைவி கொச்சிட்டூலியும் மகிழ்ந்தார்கள். மகள் நல்லதொரு கணவனோடு சேர்ந்து சுகமாக வாழ்கிறாள் என்பதைக் கண்ட மகிழ்ச்சி. உண்ணாச்சி யம்மை பிரசவித்தாள்—ஒரு பெண் குழந்தை. பரமு அந்தக் குழந்தையை மடியிலிட்டுப் பெயரிட்டார்—குஞ்ஞுமாளு. தாத்தாவின் செல்ல மகளாக அவள் வளர்ந்தாள்.

சேன்னாட்டு குஞ்சு வாலிபத்தில் ஊராரின் கண்களுக்கு முரடனாகத் தென்பட்டான். ஸ்தானிகளைக்கூடப் பொருட்படுத்த மாட்டான். குடும்பத்தைக் கொண்டு செலுத்துவதற்கான தேவைக்காக அவன் எதுவும் பேசுவான்; எதுவும் செய்வான். சேன்னாட்டுக் குடும்பத்திற்குச் சொல்லத்தக்க விதத்தில் உற்றார் உறவினர் பலம் கிடையாது. சொத்தும் கிடையாது. குஞ்சுவின் தாய்மாமன் ஆச்சோமச்சார் ஓர் அப்பாவி மனிதர். அவர் இறந்த போது பதினைந்து மரக்கால் விதைப்பாட்டு நிலம்தான் குடும்பத்தின் மொத்தச் சொத்து. அதில் வரும் லாபத்தைக்

கொண்டுதான் குஞ்சுவின் சகோதரி கொச்சுநங்கை, அவளுடைய எட்டு குழந்தைகள் ஆக எல்லோருடைய வயிறுகளையும் நிரப்ப வேண்டும். குஞ்சு அவர்களைப் பட்டினிபோட மாட்டான். அவன் பதினைந்து மரக்கால் விதைப்பாட்டு நிலத்தில் கடுமையாக உழைத்தான். நிலத்தை உழுவதும் நீருருளை மிதித்து உருட்டுவதும் எல்லாமே அவன் ஒருவன்தான். மற்றவர்களின் வயல்களுக்கும் அவன் வேலைக்குப்போவான். கொச்சுநங்கையின் பிள்ளைகளை அவன் பள்ளிக்கூடத்தில் சேர்த்துப் படிக்க வைத்தான். தம்பி கேசவன் பெயர் பெற்ற கதகளி ஆட்டக்காரன் ஆனான். அதுவும் குஞ்சுவின் ஆசையாக இருந்தது. தாய்மாமன் காலத்தில் கைவிட்டுப் போயிருந்த சில நிலங்களை அவன் திருப்பி மீட்டான். அவ்வா றாகச் சேன்னாட்டுக் குடும்பம் பசுமை பிடிக்கத் தொடங்கியபோது முரட்டுக்காரக் குஞ்சு கெட்டிக்காரக் குஞ்சுவாகப் பிறர் கண்களுக்குத் தென்பட்டன.

ஈச்சரப்பிள்ளையின் மகள் குஞ்ஞுமாளுவை அவன் விரும்பினான். நெல் களஞ்சிய மேலதிகாரியான ஈச்சரபிள்ளை ஊரில் ஒருபெரிய உத்தியோகஸ்தர். அவருடைய மகளைக் கல்யாணம் செய்துகொள்ளும் தகுதி உண்டா குஞ்சுவுக்கு? அங்கே போய்ப் பெண் கேட்க யாருக்கு தைரியம் வரும்? குஞ்சு ஈச்சர பிள்ளையின் எதிரில் போய் பணிவுடன் சொன்னான், எனக்குக் குஞ்ஞுமாளுவைக் கல்யாணம் பண்ணித்தரணும். ஈச்சரபிள்ளை பதற்றப்படவில்லை. ஆனால் உடனுக்குடன் பதில் எதுவும் தோன்ற வில்லை. யோசித்துச் சொல்லவேண்டும் என்று மட்டும் சொன்னார். குஞ்சு போய்விட்டான். ஈச்சரபிள்ளை மனைவியுடன் கலந்து பேசினார். குஞ்சு கெட்டிக்காரன். கெட்டிக்காரன்தான் முரட்டுத்தனமாக இருப்பான். ஆசைப்பட்டு வந்திருக்கிறான். அவன் அவளை வைத்துக் காப்பாற்றுவான் என்ற நம்பிக்கை ஈச்சரபிள்ளைக்கு உண்டு. குஞ்ஞுமாளுவைக் கல்யாணம் செய்து கொள்பவன் ஒழுங்கானவனாக இருக்க வேண்டுமென்று உண்ணாச்சியம்மை எதிர்பார்த்தாள். காரணம், குஞ்ஞுமாளுவுக்கு எந்தத் தாய் மாமனும் கிடையாது. அவளுடைய சகோதரர்கள் அவளைவிட இளையவர்கள். உண்ணாச்சியம்மையும் கணவரின் பராமரிப்பில்தான் வாழ்ந்து வந்தாள். சீலாந்திப்பிள்ளி பரமு பிள்ளை கொச்சிட்டூலியை அழைத்து வந்து பராமரித்தது முதல் அப்பா மேற்பார்வை பார்க்கும் குடும்பம் அது. அத்திப்புரய்க்கல் குடும்பத்திற்கு இன்னமும் அந்தப் பரம்பரைதான் தேவைப்பட்டது. சேன்னாட்டு குஞ்சு ஒழுங்குமுறையானவன் என்பது ஈச்சரப்

பிள்ளையின் அபிப்பிராயம். அவ்வாறாக இந்தக் கல்யாணம் நடந்து முடிந்தது.

சேன்னாட்டு குஞ்சுவுக்கு அத்திப்புரய்க்கல் சம்பந்தம் நடந்ததும் அந்தக் குடும்பம் மேம்பட்டது. அத்திப்புரய்க்கல் சேர்ந்த நிலங்களில் விவசாய மேற்பார்வை குஞ்சுவின் பொறுப்பாயிற்று. ஒவ்வொரு அறுவடை முடிந்ததும் குஞ்சு பத்தோ பதினைந்தோ மரக்கால் நிலம் உண்ணாச்சியம்மையின் பெயரில் எழுதி வாங்குவான். எதனால் அதை ஈச்சரபிள்ளை பெயரில் வாங்குவதில்லை? குஞ்சுவிடம் அதற்கு பதில் இருந்தது. தான் ஈச்சர பிள்ளையின் பெயரில் சொத்து வாங்கினால் ஒருவேளை என்றைக் காவது ஒருநாள் ஈச்சரபிள்ளையின் மருமகன்கள் இந்தச் சொத்தெல்லாம் தாய் மாமனுடையது என்று சொல்லி மருமக்கத் தாய முறையில் வாரிசு உரிமைகோரி வந்துவிடுவார்கள். அப்படி ஒரு இடைஞ்சல் வந்துவிடக்கூடாதென்ற முன்னேற்பாட்டோடு தான் குஞ்சு சொத்துக்களை அத்திப்புரய்க்கல் உண்ணாச்சி அம்மையின் பெயரில் வாங்கினான். ஈச்சரபிள்ளையின் காலத் திற்குப் பிறகு சொத்துக்கள் ஈச்சரபிள்ளையின் பிள்ளைகளுக்குக் கிடைக்க வேண்டும். அதாவது குஞ்ஞுமாளு அம்மைக்கும் சகோதரர்களுக்கும். நடைமுறைக் காரியங்களிலும் கெட்டிக் காரனான குஞ்சுவை ஈச்சரபிள்ளை பாராட்டினார். அவன் பிடிமானமும் விவரமும் உள்ளவன் என்பதை ஊராரும் ஒப்புக் கொண்டார்கள்.

பத்து மரக்கால் விதைப்பாட்டு நிலமுள்ள கோயிற்புரம் என்ற பண்ணை வீட்டை உண்ணாச்சியம்மையின் பெயருக்குக் குஞ்சுநாயர் பத்திரப் பதிவு செய்தான். தாழம்புதர் காடாக மண்டிக் கிடந்த அந்தப் பண்ணை வயலில் முன்பு ஒரு குடும்பம் குடியிருந்தது என்பதாகக் கேள்வி. ஊர்பேர் தெரியாத வரலாறு கொண்ட ஒரு நிலம். அது தரிசு நிலம் என்பதாக ஊரார் சொன்னார்கள். ஆனால் சொத்து வாங்கும் விஷயத்தில் குஞ்சு சோடைபோகமாட்டான் என்று ஈச்சரபிள்ளைக்குத்தெரியும். அங்கே ஒரு பண்ணை வீடு அமைத்து மனைவியையும் மகள் கௌரியையும் குடியமர்த்த வேண்டுமென்பது குஞ்சுவின் ஆசை. இதைச் சொன்னவுடனேயே புலையர்கள் அந்த நிலத்தைச் சரிப்படுத்தி மட்டப்படுத்தினார்கள். குஞ்ஞுமாளு அம்மையின் பணத்தினால் அங்கே ஒரு சிறிய வீடு கட்டிமுடிக்கப்பட்டது. குஞ்ஞுமாளு அம்மையும் மகளும் அங்கே குடியேறினார்கள். அப்படி சேன்னாட்டு குஞ்சுநாயர் மனைவியை அவளுடைய

வீட்டிலிருந்து அழைத்துக் கொண்டுபோய் மற்றொரு வீடுகட்டிக் குடியேற்றியது ஊரில் அதற்கு முன்பு பழக்கமில்லாத ஒன்று. குஞ்சுநாயரின் சகோதரி கொச்சுநங்கைதான் இதைப்பெரிதும் எதிர்த்து முணுமுணுத்தாள். சேன்னாட்டுக் குடும்பத்தில் சொத்து வளர்ந்தது. ஆனாலும் நெருக்கடி. கொச்சுநங்கைக்கு எட்டு பிள்ளைகள். அவர்கள் சின்னப்பிள்ளைகள் அல்ல. செலவினங் களுக்குக் குறைச்சல் இல்லை. குஞ்சுநாயரின் கடும் உழைப்பினால் தான் அந்தப் பெரிய குடும்பம் காலம் தள்ளியது. ஆனாலும் கொச்சுநங்கைக்கு முணுமுணுப்புதான். அண்ணன் எதற்காக மனைவி வீட்டாருக்குச் சொத்து சேர்த்துக் கொடுக்க வேண்டும்? சேன்னாட்டுக் குடும்பத்திலிருந்து வாரிக்கொண்டுபோய் குஞ்சுநாயரின் மனைவி வீட்டுக் குடும்பத்தார்கள் கொழித்து வாழ்கிறார்களே என்பதுதான் அவளுடைய கவலை. அவள் அதைப் பலரிடம் சொல்லவும் செய்தாள். குஞ்ஞுமாளுவுக்கும் மனதுக்குள் ஒரு நமைச்சல் உண்டு. அத்திப்புரய்க்கல் சார்ந்த நிலங்களில் விவசாயம் செய்துவரும் லாபத்தில் ஒரு பங்கு கொண்டுதான் கணவன் சேன்னாட்டுக்காரர்களுக்கு சொத்து வாங்கித் தருவதாக ஒரு நமைச்சல். உண்ணாச்சியம்மைக்கும் அப்படி ஒரு நினைப்பு உண்டு. ஆனால் ஈச்சரபிள்ளை அதை ஒத்துக்கொள்ளமாட்டார். சொந்தச் சகோதரிகளும் குடும்பமும் ஒரு பக்கம், மனைவி வீட்டார் ஒரு பக்கம். ஆக இரண்டு வீட்டார்களும் குஞ்சுநாயரை சந்தேகப்பட்டார்கள். சில சமயங்களில் சில குத்தல் பேச்சுக்களையும் கேட்க நேரும். குஞ்சு நாயர் பொருட்படுத்தவில்லை. அவர் தன்னுடைய மனைவியைப் பராமரித்தார்; அதே மாதிரி பிறந்த வீட்டுக் காரியங்களையும் கவனித்துக் கொண்டார். மூன்று வேளையும் அவர் பிறந்த வீட்டில் தான் சாப்பிட்டு வந்தார். இரவில் தீவட்டி எரித்துப்பிடித்துக் கொண்டு கோயிற்புரத்துக்குப் போவார். அப்படியாகப் பழைய நியமங்கள் எதையும் அவர் புறக்கணிக்கவில்லை. மருமக்கத்தாய முறையில் மனைவியின் வீட்டில் உணவு சாப்பிடுவது நியமத்திற்குப் புறம்பானது. அதுவும் தவிர, அத்திப்புரய்க்கல்காரர்கள் ஜாதியில் தாழ்ந்தவர்கள். குஞ்சுநாயரின் மகள் கௌரி சில சமயங்களில் அப்பாவுடன் சேன்னாட்டு வீட்டுக்குப் போவாள். கௌரியைப் பிரத்தியேகமாக கவனித்து உட்காரவைத்து அவளுடைய அத்தை கொச்சுநங்கை அவளுக்குச் சாப்பாடு பரிமாறுவாள். காரணம், தன்னுடைய குழந்தைகள் அவளைத் தொட்டபின்பு சாப்பிடக் கூடாதென்ற கவலை அவளுக்கு. அப்பாவின் வீட்டுக்குப் போய்

விட்டுத் திரும்பி வந்ததும் கௌரி அந்த வீட்டுச் செய்திகளை அம்மாவிடம் சொல்வாள். அதிலிருந்து தன்னுடைய கணவரின் பிறந்த வீட்டுச் சாப்பாடு திருப்திகரமாக இல்லையென்று குஞ்ஞு மாளுக்குப் புரிந்தது. ஒருநாள் இரவு குஞ்ஞுமாளு மிகவும் வற்புறுத்தியதால் குஞ்சுநாயர் மனைவி பரிமாறிய உணவைச் சாப்பிட்டார். முறையற்றதுதான்; ஆனால் மனைவியின் வற்புறுத் தலுக்காக அவர் வளைந்து கொடுத்தார். செலவுக்குச் சம்பாதித்துக் கொடுக்கும் அண்ணனுக்குக்கூட வயிறு நிறையச் சோறு போடாத கொச்சுநங்கையின் சுபாவத்தைக் குஞ்சுநாயருக்கு உறைக்கும்படிக் குஞ்ஞுமாளு புகார் சொன்னாள். சகோதரியைப் பற்றிமனைவி சொல்வது சரிதான்; ஆனால் நாத்தனார்களுக்கிடையே சச்சரவு உண்டாக்க வேண்டாமென்று குஞ்சு விரும்பினார். ஏதானாலும் இந்தச் சம்பவத்திற்குப் பிறகு குஞ்சுநாயர் நிரந்தரமாக மனைவியின் வீட்டில் இரவுச் சாப்பாடு சாப்பிட்டார். கணவனுக்குப் பிடித்த சாப்பாட்டைப் பொங்கிப் போட்டாள் குஞ்ஞுமாளுஅம்மை. குஞ்சுநாயர் மகளுடன் சேர்ந்து உட்கார்ந்து சாப்பிடுவார். அவ்வாறாக கௌரிக்கு அப்பாவுடன் சேர்ந்து சாப்பிடும் பாக்கியம் கிடைத்தது.

ஈச்சரபிள்ளை மேலதிகாரிப் பொறுப்பிலிருந்து பணி ஓய்வு பெறும் காலம் வந்துவிட்டது. அரசாங்க நிலத்து விவசாய தாசில்தாரிடம் கையிருப்பு நெல்லை அளந்து கொடுக்கவேண்டும். ஆறாயிரம் மரக்கால் நெல் களஞ்சியத்தில் குறைந்து காணப்படு கிறது. விஷயம் ரொம்பவும் முக்கியமானது. கையில் விலங்கு ஏறும். சத்தியம் தவறாத உத்தியோகஸ்தர் ஈச்சரபிள்ளை. அப்படியானால் எப்படி இவ்வளவு நெல் குறைந்தது? கூட வேலை பார்த்தவர்கள் சதி செய்துவிட்டார்களா? ஒரு போக்கும் பிடியும் கிடைக்காமல் அந்த நல்ல மனிதர் கிறங்கினார். அத்திப்புரய்க்கல் உண்ணாச்சி யம்மையின் பெயரில் சம்பாதித்திருக்கிறார். அரசாங்கப் பணத்தைக் கையாடிச் சம்பாதித்த சொத்து அல்ல அது என்று ஈச்சர பிள்ளைக்கு நன்றாகத் தெரியும். ஆனால் அதை யார் நம்புவார்கள்? தாசில்தார் ஒரு வார காலம் கெடு கொடுத்தார். குறைந்துபோன நெல்லை எங்கிருந்தாவது கொண்டுவந்து களஞ்சியத்தில் கொண்டுவந்து இட்டு நிரப்ப வேண்டும். கடைசியில் மனைவியின் பெயரிலிருந்து சில சொத்துக்களை விற்று, ஆறாயிரம் மரக்கால் நெல் வாங்கிக் களஞ்சியத்தில் கொண்டுபோய்ச் சேர்த்தார். அந்தப் பொறுப்பு கழிந்தது. உத்தியோகத்தில் ஓய்வும் பெற்றார். ஈச்சர பிள்ளை நாட்டு நடப்புக்கு மாறாக மனைவியையும்

பிள்ளைகளையும் நேசித்தார்; நேர்வழியில் அவர்களுடைய பெயர்களில் சொத்து சேர்த்தார். கடைசியில் அதிலொரு பங்கைத் தன்னுடைய கடனைத் தீர்க்க உபயோகிக்க நேர்ந்ததில் அவர் மிகவும் வருந்தினார். கணவரின் கடனைத் தீர்க்கத் தன்னுடைய பெயரிலுள்ள சொத்தை விற்க உண்ணாச்சியம்மைக்கு எந்தவித மனத்தயக்கமும் ஏற்படவில்லை. கணவருடன் மனநிம்மதியுடன் வாழவேண்டுமென்ற ஒரே ஓர் ஆசைதான் அவளுக்கு இருந்தது. ஆனால் விதி அதற்கும் எதிராக இருந்தது. ஓர் இரவு, திடீரென்று ஈச்சரபிள்ளை இறந்தார்.

அம்மாவும் பிள்ளைகளும் அழுதார்கள். அக்காலத்தில் தாய்மாமன் இறந்தால்தான் அழ வேண்டும். அப்பா இறந்தால் அம்மாவும் பிள்ளைகளும் அழ வேண்டுமென்ற அவசியம் இல்லை. ஆனால் அத்திப்புரய்க்கல் உண்ணாச்சியம்மை மயக்கம் போட்டு விழுந்துவிட்டாள். அம்மாவும்போய் விட்டாளென்று எண்ணி பிள்ளைகள் அழுதார்கள். அந்தத் தம்பதிகளுக்குத் தனித்தனியே பிரிந்துவாழ முடியவில்லை. அவ்வளவு நேசம் கொண்டிருந்தார்கள் அவர்கள். ஒருவரை விட்டு மற்றொருவர் எங்கேயும் போகமாட்டார்கள். சிதைக்குப் பிறகும் அவர்கள் விட்டுப் பிரிய மாட்டார்கள். அவ்வளவு பிணைப்புள்ளவர்கள் என்பதனால் உண்ணாச்சியம்மையும் கணவனின் வழியேபோய் விடுவாள் என்று எல்லோரும் பயந்தார்கள். ஈச்சரபிள்ளையின் சவத்தின் அருகில் யாருமில்லை. ஏறத்தாழக் கடைசி மூச்சுவிடத் தயாராகிவிட்ட உண்ணாச்சியம்மையின் அருகில் எல்லோருமே இருந்தார்கள். ஈச்சரபிள்ளையின் சவ அடக்கத்திற்கான நேரம் நீண்டுகொண்டே போயிற்று. இதற்கிடையே ஈச்சரபிள்ளையின் சொந்தக் குடும்பமான ஏழம்பிள்ளியிலிருந்து அவருடைய மருமகன்கள் சில ஆட்களுடன் வந்து சேர்ந்தார்கள். காரண வருடைய சவத்தை எடுத்துக்கொண்டுபோகத்தான் அவர்கள் வந்திருந்தார்கள். காரணவர் சம்பாதித்த சொத்துக்களின் மீது தங்களது வாரிசுரிமையை நிலைநாட்டுவதுதான் அவர்களுடைய நோக்கம். ஆனால் சமூகத்தவர்கள் இடைமறித்தார்கள். உண்ணாச்சியம்மை மயங்கிக் கிடக்கும் இந்த நிலையில் ஈச்சர பிள்ளையின் சவத்தை எடுத்துப்போக முடியாதென்று அவர்கள் தீர்மானமாகச் சொல்லிவிட்டார்கள். ஈச்சரபிள்ளையின் மூத்த மருமகன் மாதவன்பிள்ளை தாய்மாமனின் சவத்துடன் அல்லாமல் திரும்பிப் போகமுடியாது என்று முரண்டுபிடித்தான். தன் அப்பாவின் சொத்தில் வாரிசுரிமை கோரத்தான் மாதவன்பிள்ளை

புறப்பட்டு வந்தது என்பதைப்புரிந்துகொண்ட குஞ்ஞுமாளுவும் அந்த சச்சரவில் நேரடியாகப் பங்கெடுத்துக் கொண்டாள். "நாங்க எங்கப்பாவை விட்டுக்கொடுக்க மாட்டோம்", குஞ்ஞுமாளு இம்மி கூடத் தயங்காமல் சொன்னாள். அதைக்கேட்டு அந்த இடமே பிரமித்தது. சமூகத்தவர்கள் ஏராளமாகக் கூடியிருந்தார்கள். அவர்கள் எல்லோருமே குஞ்ஞுமாளுவின் பக்கம்தான் என்று தெரிந்ததும், கோர்ட்டில் பார்த்துக் கொள்ளலாமென்று பயமுறுத்த லாகக் கத்திக் கூச்சலிட்டுவிட்டு மாதவன் பிள்ளையும் கூட்டாளி களும் அந்த இடத்தைவிட்டுப் போனார்கள். அதன் பின்னர் ஈச்சரபிள்ளையின் இறுதிச் சடங்குகள் மனைவியின் வீட்டில்தான் நடந்தன. மயங்கிக் கிடந்த உண்ணாச்சியம்மைக்கு இது எதுவும் தெரியவே தெரியாது. கணவன் இறந்த இருபதாம்நாள் உண்ணாச்சியம்மையும் இந்த உலகத்திலிருந்து விடைபெற்றுக் கொண்டாள்.

குஞ்ஞுமாளுவுக்கும் மைனர்களான அவளுடைய தம்பிமார் களுக்கும் கோர்ட்டிலிருந்து சம்மன்கள் வந்தன. வாதி ஏழும்பிள்ளில் மாதவன்பிள்ளை. ஈச்சரபிள்ளை உண்ணாச்சி யம்மையின் பெயரில் சம்பாதித்த சொத்துக்கள் மருமக்கத்தாயம் அனுசரித்து ஏழும்பிள்ளிக் குடும்பத்திற்கு வந்துசேரவேண்டும் என்பதும், சொத்துக்களின் உண்மையான வாரிசுகள் ஈச்சர பிள்ளையின் மருமகன்களே என்பதும் மாதவன்பிள்ளையின் வாதம். கோர்ட் விவகாரங்களின் விவரம் தெரிந்த சென்னாட்டு குஞ்சுநாயர் இப்படி ஒரு கேஸ் உருவாகுமென்று முன்னதாகவே அறிந்திருந்தார். அதனால்தான அவர் ஈச்சரபிள்ளையின் சம்பாத் தியத்தைக்கொண்டு சொத்து வாங்கியதெல்லாம் உண்ணாச்சி யம்மையின் பெயரில் வாங்கினார். ஆனால் அதனாலும் பிரச்சினை தீரவில்லை. உண்ணாச்சியம்மைக்கு எங்கிருந்து சொத்து வந்தது? அது கணவர் ஈசசரபிள்ளையின் சம்பாத்தியத்திலிருந்து வந்தது என்பது எதிர்வாதம் அந்த வாதம் தூள் தூளாக வேண்டுமானால் உண்ணாச்சியம்மைக்குப் பாரம்பரியமாகக் கிடைத்த கொஞ்சநஞ்ச சொத்தாவது இருந்தது என்று நிருபிக்க முடியவேண்டும். வக்கீல் மூலமாகத்தான் கேஸ் வாதிககப்பட வேண்டும் என்றிருந்தாலும் அதற்குப் பின்பலமாக இருந்த புத்தி முழுவதும் குஞ்சுநாயருடையதுதான். உண்ணாச்சியம்மைக்குப் பாரம்பரியமாக ஏதாவது சொத்து வந்ததாகத் தெளிவுபடுத்த வேண்டும். அதற்கான வழி பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கையில், அத்திப்புரய்க்கல் குடும்பத்தில் தலைமுறை தலைமுறையாகச்

சொல்லக் கேள்விப்பட்ட பழைய கதையைச் சேன்னாடன் குஞ்ஞுமாளு அம்மையிடமிருந்து தெரிந்துகொண்டார். சொல்லக் கேட்ட கதையின்படி, உண்ணாச்சியம்மையின் அம்மா கொச்சிட்டிலிக்கு ஆலப்புழையில் ஒரு வீடு இருந்தது— வார்யந்த்ர என்ற பெயரிலான வீடு. சேன்னாட்டு குஞ்சுநாயர் ஆலப்புழை சென்று வார்யந்த்ரப் பண்ணை வீட்டைக் கண்டுபிடித்தார். அதனுடைய இப்போதைய உடைமையாளரிடமிருந்து அந்தப் பண்ணை வீட்டை விலைக்கு வாங்கினார். அவ்வாறாக அதனுடைய மூலப்பத்திரம் கைக்குக் கிடைத்தது. அது ஓலைச் சுவடியாக இருந்தது. வார்யந்த்ர கொச்சிட்டூலி ஏதோ ஒரு கோவிந்தவாரியர் என்பவருக்கு அந்தக் காலத்து எழுநூறு தங்கக் காசுகள் கொடுத்ததற்கான பற்றுச்சீட்டுதான் அந்த ஓலைச்சுவடி. குஞ்சுநாயர் மகிழ்ச்சியினால் துள்ளிக் குதித்தார். அத்திப்புரய்க்கல் உண்ணாச்சியம்மைக்குத் தனது சொத்தாக எழுநூறு தங்கக் காசுகள் உண்டென்பது தெளிவாயிற்று. அதைக்கொடுத்து அவள் கொஞ்சம் சொத்து வாங்கியதாகவும், அது பெருகி உண்ணாச்சி யம்மை நானூறு மரக்கால் நிலத்தின் உடைமையாளராக ஆனாள் என்றும் கோட்டில் தெளிவுப்படுத்த முடிந்தால் கேஸ் ஜெயித்து விடும் என்று குஞ்சுநாயருக்கு நம்பிக்கை வந்தது. ஏழம்பிள்ளில் மாதவன்பிள்ளை என்ற வல்லாளனுடன் நடத்திய அந்த வழக்கில் குஞ்சுநாயர் ஜெயித்தார். அத்திப்புரய்க்கல் உண்ணாச்சியம்மையின் பெயரில் சம்பாதித்திருக்கும் சொத்துக்கள் முழுவதும் அத்திப் புரய்க்கல் குடும்பத்தைச் சேர்ந்த சொத்துத்தான் என்பதாகத் தீர்ப்பாயிற்று. அந்தத் தீர்ப்பின் நியாயத்தை ஆதாரமாக்கிப் பின்னர் பல தீர்ப்புகள் வந்தன. மருமக்கத்தாயச் சட்டத்தில் அதிப்பிரதான மான ஒரு தீர்ப்பாக இருந்தது அது.

குஞ்சநாயரின் மகனைப் பள்ளிக்கூடத்தில் சேர்க்கும் வயது வந்துவிட்டது. ஆனால் அந்த வருடம் அரசாங்கத்திலிருந்து வந்த உத்தரவுப்படி தீண்டத்தகாதவர்களான ஈழவக் குழந்தைகளையும் மற்ற உயர்ஜாதிப் பிள்ளைகளுடன் படிக்க அனுமதித்தார்கள். தீண்டுவதும் தொடுவதும் எல்லாம்பொருட்படுத்தாமல் அரசாங்கம் இப்படிக் கட்டளையிட்ட உத்தரவை அறிந்து சேன்னாடன் ஆச்சரியப்பட்டார். குஞ்சுநாயரின் பழைமைவாத ரீதியிலான எண்ணப்போக்குகள் அந்த மாதிரியான மாற்றத்திற்கு ஆயத்தமாக இருக்கவில்லை. ஒன்றாம் வகுப்பு வாத்தியாரைப் பார்த்து விவரங் களை விசாரித்தார். பிராமணனான அவரும் தீண்டத்தகாத வர்களைப் பள்ளிக்கூடத்தில் சேர்ப்பதற்கு எதிரானவர்தான்.

ஆனால் என்ன செய்ய முடியும்? அங்கிருந்த இளைஞரான மற்றோர் ஆசிரியர், இப்படி ஓர் உத்தரவு வந்திருக்கிறதென்று அறிந்தவுடன் ஊர் முழுக்க ஓடியலைந்து ஈழவக் குழந்தைகளைக் கூட்டி வந்து பள்ளிக்கூடத்தில் சேர்த்தார். ஒன்றாம் வகுப்பு வாத்தியாரால் அதைத் தடுத்து நிறுத்தமுடியவில்லை. அவருடைய இயலாமை குஞ்சுநாயருக்குப் புரிந்தது. தீண்டத்தகாதவர்களைச் சேர்க்க முயற்சி எடுத்த ஆசிரியர் யாரென்று விசாரித்தார். அவர் வெடிப்புரயக்கல் குஞ்ஞன்நாயர். அவர் கொஞ்சம் அகங்காரன் என்று சேன்னாடனுக்குத் தெரியும். ஒரு சமயம் அவர் கோயிலுக்கு வந்து கர்ப்பகிருகத்திற்கு முன்னால் கட்டப்பட்டிருக்கும் மணியை அடித்தார். மணியடித்துக் கும்பிடும் உரிமை பிராமணர்களுக்கு மட்டும்தான் உண்டு. அந்த உரிமையைக் கேள்வி கேட்பது போலிருந்தது அவருடைய செய்கை. அப்படியான ஒரு வாத்தியார் படிப்புச் சொல்லித்தரும் பள்ளிக்கூடத்தில் குழந்தைகள் எப்படி உருப்படுவார்கள்? என்னவானாலும் தீண்டத்தகாதவர்களுடன் சேர்ந்து உட்கார்ந்து படிக்கத் தன்னுடைய மகனைச் சேர்க்க வேண்டாம் என்று குஞ்சுநாயர் தீர்மானித்தார். மணிகண்டனைப் பள்ளிக்கூடத்தில் சேர்க்காமல் திரும்பி வந்த சேன்னாடனின் மனைவி குஞ்ஞுமாளு சண்டையிட்டாள். குஞ்ஞுமாளுவின் சகோதரர்களெல்லாம் ஊரில் படிப்பு முடித்து ஆலப்புழையிலும் கோட்டயத்திலும் மற்ற இடங்களிலும் தங்கியிருந்து உயர் நிலையிலான படிப்பெல்லாம் படித்துக் கொண்டிருந்த காலம் அது. அதற்கான உதவிகளையெல்லாம் குஞ்சுநாயர்தான் செய்து கொண்டிருந்தார். அவர்களைப்போல மகன் மணிகண்டனையும் படிக்க வைத்துப் பெரிய உத்தியோகத்தில் அமர்த்த வேண்டும் என்பது குஞ்ஞுமாளுவின் ஆசை. பள்ளிக்கூடத்திற்குப் போகும் நாட்களில் மத்தியானமும், சாயங்காலமும் அவன் குளித்துவிட்டு வீட்டிற்குள் வந்தால்போதும்; தீண்டத்தகாதவர்களுடன் ஒருசேர உட்கார்ந்திருந்ததன் தீட்டு கழிந்துவிடும் என்ற ஒரு பிராயச் சித்தத்தைக் குஞ்ஞுமாளு பரிந்துரைத்தாள். உலகம் போகிற வேகத்திற்கு ஈடு கொடுத்துக் கூடவே நாமும் ஓட வேண்டும் என்பது குஞ்ஞுமாளுவின் கருத்து. கடைசியில், சேன்னாடன் மனதில்லாமல் மணிகண்டனைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்தார். வீட்டுக்குத் திரும்பும்போது, உலகம் தலைகீழாகச் சுழல்வதைக் குறித்துத்தான் சிந்தித்தார். ஜாதிவித்தியாசம் இருக்கக் கூடாது. தீண்டாமை இருக்கக் கூடாது; இதெல்லாம் எங்கே போய் முடியுமோ என்று அவருடைய மனம் நோய்வாய்ப்பட்டது.

சேன்னாடன் பழைய முதல்தேதிக் கூட்டத்தைக் கூட்டினார். கோயிலில் நாடகசாலையில் கூடிய அந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டவர்களெல்லாம் ஈழவர்களைப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்த நடவடிக்கையை விமர்சனம் செய்தார்கள். வெடிப்புரய்க்கல் குஞ்ஞன்நாயரும் அங்கு வந்திருந்தார். படிப்பினால் ஊரில் ஏற்படும் முன்னேற்றங்களைக் குறித்து அவர் முதலில் பிரசங்கம் செய்திருந்தார். இப்போது பள்ளிக்கூடத்தில் குழந்தைகளின் எண்ணிக்கை அதிகரித்தபோது கட்டிட இடம் போதாது என்ற நிலை வந்திருக்கிறது. புதிய கட்டிடம் கட்டி முடிக்கும்வரை ஐந்தாம் ஆறாம் வகுப்புகளை நடத்துவதை நிறுத்தி வைக்கும்படி அரசாங்க உத்தரவு. இது ஊரிலுள்ள குழந்தைகளின் மேல்நிலைப் படிப்பைப் பாதிக்கும். அதனால் கட்டிடத்தைக் கட்டவேண்டுமென்று குஞ்ஞன்நாயர் அங்கே கூடியிருந்தவர்களைக் கேட்டுக் கொண்டார். ஆனால் அந்தவேண்டுகோளை எல்லோரும் எதிர்த்தார்கள். ஈழவர்களை வற்புறுத்திச் சேர்த்ததனால்தான் குழந்தைகளின் எண்ணிக்கை அதிகரித்தது என்றும், ஜாதி வேற்றுமையைத் தகர்க்கத்தான் இவர் இப்படியெல்லாம் முயல்கிறார் என்றும் குற்றம் சாட்டினார்கள். தான் காந்திஜியின் தொண்டர் என்று குஞ்ஞன்நாயர் கர்வத்துடன் குறிப்பிட்டது சிலரைத் திடுக்கிடச் செய்தது. காந்திஜி கலியுக அவதாரம் என்று நம்புபவர் சேன்னாட்டு குஞ்சுநாயர். வெடிப்புரய்க்கல் குஞ்ஞன்நாயரை எல்லோருமாகச் சேர்ந்து நாடக சாலையிலிருந்து வெளியேற்றினார்கள். குஞ்ஞன் நாயர் நம்பிக்கையை விடவில்லை. அவர் ஊரில் ஈழவ முக்கியஸ்தரான கொச்சுராமன் வைத்தியரைச் சந்தித்து, புதிய பள்ளிக்கட்டிடம் கட்ட வேண்டியதற்கான உதவியை வேண்டினார். ஜாதி வேற்றுமைக்கு எதிராகப் போராடும் ஸ்ரீ நாராயண குருவின் கொள்கைகளைத்தான் தான் பின்பற்றி வருவதாகக் குஞ்ஞன்நாயர் சொன்னார். ஆனால் ஜாதி வேற்றுமை நிலைத்திருக்க வேண்டுமென்று விரும்புபவர் கொச்சுராமன் வைத்தியர். அதனால்தான் குஞ்ஞன் நாயரின் சிந்தனைப் போக்குகளுடன் அவரால் ஒத்துப்போக முடியவில்லை.

ஒரு நீண்ட அறை என்ற அளவில் ஒரு கூடத்தையாவது கட்டவேண்டும். இல்லையானால் பள்ளிக்கூடத்தின் இரண்டு மூன்று வகுப்புகள் போய்விடும். ஊரில் வேறுயாரும் இதைப் பற்றிச் சிந்திக்கவில்லை. குஞ்ஞன்நாயருக்குக் குழப்பத்தில் சிக்கியது போலிருந்தது. தேவஸ்தானத்திற்கு சொத்திருக்கிறது. தற்போது கைவசம் நெல் இல்லாவிட்டாலும். இப்போது குத்தகை எதுவும்

முழுதாக வசூலாகவில்லை. நிலுவைகளுக்காக வழக்கு நடக்கிறது. வழக்குக்காகவும் ஒரு பெருந்தொகை செலவாகிக் கொண்டிருந்தது. இருந்தாலும் பள்ளிக்கூடத்திற்காக ஒரு கட்டிடம் கட்டுவதில் பெரிய தட்டுப்பாடு எதுவும் வந்துவிடப் போவதில்லை. குஞ்ஞன் நாயர் பாலத்தோள் குடும்பத்திற்குச் சென்று கணபதி நம்பூதிரியைப் பார்த்தார். அவர்தானே இப்போது தேவஸ்தான நிர்வாகம். ஈழவரும் எழுதப் படிக்கக் கற்றுக் கொள்ளட்டுமே என்று கணபதி நம்பூதிரிக்குத் தோன்றியது. காரணம், வேதத்திற்கு விரோதமாக இப்போது சூத்திரர்களும் எழுதப்படிக்கத் தொடங்கிவிட்டார்கள் அல்லவா! அதனால் எந்தக் தரக்குறைவும் நேர்ந்துவிடவில்லை. அது மட்டுமல்ல, பல குடும்பங்கள் மேம்பட்டுவிட்டன. இனி ஈழவனும் படிக்கட்டும். தேவஸ்தானத்துச் செலவில் பள்ளிக் கூடத்திற்குக் கட்டிடம் கட்டித்தர கணபதி நம்பூதிரி தீர்மானித்தார். அதன் பின்னணியில் மற்றொரு நோக்கமும் இருந்தது. சேன்னாட்டு குஞ்சுநாயரும் கூட்டாளிகளும் ஈழவர்களைப் பள்ளிக்கூடத்தில் சேர்ப்பதை எதிர்த்தார்கள். அவர்களை நேருக்கு நேராக எதிர் கொள்வதற்காகக் கிடைத்த சந்தர்ப்பம் இது. அதைப் பயன் படுத்திக்கொள்ள வேண்டுமென்று அவருக்குத் தோன்றியது. கோயில் வளாகத்தில் பழைய காட்டுப் பலாமரம் ஒன்று உண்டு. அதை வெட்டிச் சாய்த்தால் பள்ளிக்கூடக் கட்டிடத்திற்கான மரத்தடிகளுக்குச் சரியாய்ப்போகும். வேகவேகமாகக் கட்டிட வேலை தொடங்கியது. சேன்னாடனும் கூட்டாளிகளும் ஒன்று கூடிக் கொதித்தெழுந்தார்கள். கணபதி நம்பூதிரி தேவஸ்தானச் சொத்துக்களைச் சொந்தச் சொத்தாக எண்ணி நடந்து கொள்கிறார். கேட்பதற்கு ஆளில்லை. சமூகத்தவர்களுக்குத் தலைவர்களே இல்லாமல் போய்விட்டார்கள்.

வறட்டுச் சொறி குஞ்சுக்கைமளும் ஈ பிடிக்கும் கிருஷ்ண பிள்ளையும் இறந்துவிட்டார்கள். இப்போது கோன்னோத்து சமூகத்தின் மூத்தபிள்ளை யார்? யாருக்கும் தெரியவில்லை. ஏதோ ஒரு கிறிஸ்தவரின் வீட்டில் வேலை செய்துகொண்டிருக்கும் ஒரு அய்யப்பன்பிள்ளைதான் இப்போதைய கோன்னோத்து சமூகத்தின் மூத்தபிள்ளை. அவரால் எதுவும் ஆகாது. கணபதி நம்பூதிரிக்கு எதிராக வழக்குத் தொடுக்கக் குஞ்சுநாயரும் கூட்டாளிகளும் தீர்மானித்தார்கள். நாட்டாச்சேரி பத்மநாபன்தான் பணம் செலவழித்தார். புகார் தாக்கல் செய்தார்கள். சேன்னாடனைச் சேர்த்துப் பதினைந்து பேர்கள் வாதிகள். கோயில் நிர்வாகத்தி லிருந்து கணபதி நம்பூதிரியை வெளியேற்றவும், அரசாங்க

அலுவலரை நியமிக்கவும் மனுச்செய்தார்கள். இதற்கிடையே பத்து நாட்களில் பள்ளிக்கூடக் கட்டிடவேலை முடிந்தது. அவ்வாறாக முதல் தோல்வி சேன்னாடனுக்கும் கூட்டாளிகளுக்கும் என்றா யிற்று. குஞ்ஞன் நாயரும் கணபதி நம்பூதிரியும் எடுத்துக்கொண்ட வேலை நடந்து முடிந்தது. ஆனால் ஊரில் இரண்டு பிரிவுகளாகப் பிரிந்தார்கள். பல இடங்களில் அடிதடிச் சண்டையும் கலவரங் களும் ஏற்பட்டன. ஒருநாள் அதிகாலையில் ஊர் முழுக்கச் செய்தி பரவியது. கணபதி நம்பூதிரியின் படகோட்டி பாச்சுவைக் கோயிலுக்கு வடக்கேயுள்ள வழியில் குத்திக் கொன்றுவிட்டார்கள். அது வரைக்கும் அந்த ஊர் ஒரு கொலை பாதகத்தைப் பார்த்த தில்லை. யாரோ ஒருவர் முன்பு தற்கொலை செய்துகொண்ட துண்டு. அது தூக்கில் தொங்கிச் செத்தது. கொலை பாதகம் இதுதான் முதலாவது. குத்துப்பட்டு பாச்சு செத்துக்கிடந்தான். பாச்சுவுக்கும் முத்தளத்து ராமனுக்கும் இடையே வாக்குவாதம் நடந்திருக்கிறது. சேன்னாடனின் கையாள் முத்தளத்து ராமன். ராமனின் ஒரே குத்தில் பாச்சு செத்தான். போலீஸ் வந்தது. சேன்னாடனும் கூட்டாளிகளும் ஓடிஒளிந்து கொண்டார்கள். போலீசார் அவர்களுடைய வீடுகளுக்குச் சென்று பெண்களைத் துன்புறுத்தினார்கள். கணபதி நம்பூதிரி போலீசாரைக் கொண்டு அப்படிச் செய்யச் செய்தார். எதிராளிகளை ஒருகை பார்க்கக் கிடைத்த சந்தர்ப்பத்தை அவர் நன்றாகப் பயன்படுத்திக் கொண்டார்.

ஒரு ரிசீவரை நியமிக்கும்படி உயர்நீதிமன்றத்தில் வழக்குத் தீர்ப்பாயிற்று. சேன்னாடனும் கூட்டாளிகளும் ஜெயித்தார்கள். திருவாபரணங்களும் கையிருப்பு நெல்லும் பணமும் ஆக எல்லா வற்றையும் கணக்குப் பார்த்துப் பொறுப்பேற்கும் சமயத்தில் ஊரார் எல்லோரும் அங்கே கூடினார்கள். நூற்றாண்டுகளாக ஸ்தானிகள் இருந்து நிர்வகித்த கோயில். அது இப்போது ரிசீவர் நிர்வாகத்திற்கு ஆட்பட்டத்தில் துக்கம் அடைந்தவர்கள் உண்டு. விரோதம் கொண் டிருந்தவர்கள் மகிழ்ச்சியடைந்தார்கள். ஆனால் கணபதி நம்பூதிரிக்கு எந்தத் தயக்கமும் இல்லை. அவருடைய ஓட்டஞ் சாட்டமான நடவடிக்கைகள் சேன்னாடனையும் கூட்டாளி களையும் வியப்பிலாழ்த்தின. கடைசியாய் தேவஸ்தானம் ஊரார் கையிலிருந்து மாறியது சேன்னாடனின் பக்கம் நின்றிருந்தவர் களுக்கும் உறுத்தாமல் இல்லை.

ஸ்ரீ நாராயண குரு ஈழவர்களுக்காக ஒரு கோயில் கட்டுகிறார். குருஸ்வாமிகளே வந்து விக்கிரகம் பிரதிஷ்டை செய்கிறார். அதில்

கலந்துகொள்ள ஈழவரை ஒன்றுதிரட்டும் வேலையிலிருந்தார் வெடிப்புரய்க்கல் குஞ்ஞன்நாயர். கொச்சு ராமன் வைத்தியர் என்ற ஈழவ முக்கியஸ்தர் வீட்டில் நடந்த சமபந்தி போஜனத்திலும் குஞ்ஞன்நாயர் பங்கெடுத்துக் கொண்டார். அதாவது குஞ்ஞன் நாயர் ஈழவருடன் சரிசமமாக உட்கார்ந்து சாப்பிட்டார். ஊரை உலுக்கிய செய்தியாக இருந்தது அது. குஞ்ஞன்நாயரின் அடுத்த முயற்சி அந்த ஊரில் ஒரு அஞ்சலகத்தை நிறுவுவது என்பது. ஊர் முழுக்கச் சுற்றியலைந்து கோரிக்கை மனுவில் கையெழுத்துக்கள் வாங்கினார். சேன்னாடனும் கனக்குளவனும் முதலில் மறுப்புத் தெரிவித்தாலும் பின்னர் கையெழுத்திட்டார்கள். ஊருக்குத் தேவைப்படுவதான காரியமல்லவா. கடைசியில் அஞ்சலகத் துக்கான அனுமதி வந்தது. தேவஸ்தானத்தைச் சேர்ந்த ஒரு பழைய கட்டிடத்தில் அது ஆரம்பிக்கப்பட்டது. கோயில் ரிசீவரின் பொறுப்பில் இருந்ததால் அதற்கும் கோர்ட்டின் அனுமதி பெற வேண்டியிருந்தது. ஒரு வருடத்திற்கு அஞ்சலகம் நடத்திக்கொள்ள அனுமதி கொடுத்திருந்தார்கள். அதில் கிடைக்கும் வருமானத் தினால் ஈடுகட்ட முடியுமானால் மட்டுமே தொடர்ந்து அனுமதி கிடைக்கும். ஆனால் அங்கிருந்து யாரும் யாருக்கும் கடிதங்கள் அனுப்பவில்லை. இங்கும் கடிதங்கள் வந்து சேரவில்லை. நீதிமன்றம் சம்பந்தமான சில கடிதங்கள் மட்டும் வரும். ஒருமாதம் ஆனதும் வரவு கணக்கிடப்பட்டது. வெறும் மூன்று ரூபாய்தான் வரவு. சர்க்காருக்கு ஆன செலவு பன்னிரண்டு ரூபாய். வருமானத்தை எப்படி அதிகரிப்பது என்று அஞ்சலக அதிகாரியும் குஞ்ஞன் நாயரும் கலந்து ஆலோசித்தார்கள். அஞ்சலக அதிகாரிக்கு ஒரு வழி தோன்றியது. அந்த மாதம் தன்னுடைய சம்பளம் வந்ததும் அந்த சம்பளப் பணத்தில் ஐந்து ரூபாய்க்கும் அவர் கார்டும் கவரும் வாங்கினார். வாங்கிய கார்டும் கவரும் உபயோகித்து அஞ்சலக அதிகாரியே ஊராருக்கெல்லாம் கடிதம் எழுதும்படிக் குஞ்ஞன் நாயர் யோசனை சொன்னார். எல்லாரும் கடிதம் எழுத வேண்டும் என்ற கோரிக்கைதான் அந்தக் கடிதம். அஞ்சலகத்தினுடைய சிறப்பைப் பற்றி அவர் அந்தக் கடிதத்தில் விவரித்து எழுதினார். அஞ்சலக அதிகாரியே கடிதங்களை நேரில் பட்டுவாடா செய்தார். அதில் ஒன்று அவருடைய பக்கத்து வீட்டுப் பெண்ணுக்குப் போயிற்று. அது சில சச்சரவுகளுக்கும் கலவரத்திற்கும் காரணமாயிற்று.

அடுத்த மாதம் அஞ்சலகத்திலிருந்து பதினைந்து ரூபாய்க்கான கார்டுகள் விற்பனை ஆயின. ஒரே நபர்தான் அதை வாங்கினார்—

வெடிப்புரய்க்கல் குஞ்ஞன்நாயர். கள் இறக்கும் ஈழவர்களுக்கு அவர் எழுதினார்—'கள் இறக்கக் கூடாது, கள் குடிக்கக் கூடாது, கள் கொடுக்கக் கூடாது' என்ற ஸ்ரீ நாராயண குருவின் வேண்டு கோள் அந்தக் கடிதத்தின் சாரம். சேன்னாட்டு குஞ்சுநாயருக்குக் கிடைத்த கடிதத்தில் கோயில் பிரவேசம் என்பது எல்லா இந்துக் களின் பிறப்புரிமை என்பது உள்ளடக்கம். எழுதி அனுப்பியிருப்பது காந்திஜி. பள்ளிக்கல்வி பெற்றிருந்தவர்களுக்கு எழுதிய கடிதங்களில் சுதந்திரம் நமது பிறப்புரிமை என்றும், அன்னியரின் ஆட்சி ஒழிய வேண்டும் என்றும் எழுதப்பட்டிருந்தன. ஊரில் கிறிஸ்தவர் களுக்கும் கடிதங்கள் கிடைத்தன. அவர்கள் கலந்து ஆலோசித் தார்கள். இப்போது ஆட்சி நடத்துவது நமது நாட்டு ராஜாதான் என்றாலும் மேலாதிக்கம் பிரிட்டிஷ் சக்கரவர்த்தியினுடைய பிரதிநிதிதான். அவர் வேதமார்க்கத்தை நம்பும் ஒரு கிறிஸ்தவர். அவரைத் துரத்தியடிக்க ண்டுமென்ற இந்துக்களின் போராட் டத்தை முறியடிக்க வேண்டுமென்று கிறிஸ்தவர்களில் சிலர் அபிப்பிராயப்பட்டார்கள். தீண்டத்தகாதவர்களைக் கோயிலுக்குள் பிரவேசிக்கச் செய்ய வேண்டுமென்ற நோக்கத்தைச் சேன்னாட னால் ஒப்புக்கொள்ள முடியவில்லை. சேன்னாடனையும் கூட்டாளிகளையும் சூடுபிடிக்கச் செய்த மற்றொரு கடிதத்தில் ஒரு கேள்வியும் அதற்கான பதிலாகவும் இருந்தது உள்ளடக்கம். நாயர்கள் நன்மையடைய என்ன செய்ய வேண்டும்? தனிநபர் சொத்துரிமையை நடைமுறைப்படுதத வேண்டும். எஞ்சியிருக்கும் குடும்பங்களையெல்லாம் ஒரே சமயத்தில் தகர்த்துத் தரைமட்ட மாக்கும் திட்டம் இது என்று சேன்னாடனுக்குத் தோன்றியது. அதாவது, குடும்பத்திலுள்ள சொத்துக்களையெல்லாம் தலையை எண்ணி விகிதப்படிப் பிரித்துக் கொடுக்க வேண்டும். ஒவ்வொரு வரும் அவரவருக்குக் கிடைத்ததைக் கொண்டு தனித்தனியாய்ப் போய்க் கொள்ளலாம். பின்னர் குடும்பம் என்று ஒன்று இருக்காது. அப்படியானால் அதற்குப் பிறகு பெண்களை யார் காப்பாற்றிப் பராமரிப்பார்கள்? அவர்களுடைய கணவன்மார்கள் காப்பாற்ற வேண்டும். நாயர் வீடுகளில் அது நடக்குமா? சேன்னாட்டு கொச்சு நங்கை என்ற சகோதரியைக் குஞ்சுநாயர்தான் இத்தனை நாட்களும் காப்பாற்றி வருகிறார். கொச்சுநங்கை எட்டு பிள்ளைகளைப் பெற்றாள். பெற வைத்த கணவன் ஒருவன் உண்டு—குஞ்ஞி ராமஸ்ஸார். அவன் அவளுக்கும் குழந்தைகளுக்கும் இன்று வரையிலும் எதுவும் கொடுத்ததில்லை. தனிநபர் சொத்துரிமை வந்தால் மனைவியைக் கணவன் காப்பாற்றும் ஏற்பாடு வருமோ?

சேன்னாட்டுக் குடும்பத்திற்குக் குஞ்சுநாயர் சம்பாதித்த சொத்து முழுவதையும் தனிநபர் சொத்துரிமைபடி பாகம் வைக்கும்போது கொச்சுநங்கைக்கும் மக்களுக்கும் அவர்களுடைய குழந்தைகளுக்கும் ஒவ்வொரு பங்கு கிடைக்கும். தான் அதை வாங்கிக் கொண்டு சேன்னாட்டுப்படி இறங்கிவிட நேருமோ? சிந்தித்தபோது குஞ்சுநாயர் எந்தத் தீர்வோ பிடிமானமோ கிடைக்காத நிலைக்குள்ளானார்.

குஞ்ஞுமாளுவின் தம்பி அத்திப்புரய்க்கல் ராகவன் பிள்ளைக்கு வாத்தியார் வேலை கிடைத்தது. அவனுக்கு ஒரு புதிய ஆசை. கிழக்குத் தொடர்ச்சி மலையில் ஒரு தோட்டம் வைக்க வேண்டும். குஞ்ஞுமாளுவும் ராகவன்பிள்ளையும் மற்ற தம்பிமாரும் சேர்ந்து அதைப்பற்றிப்பேசிக் கொண்டிருந்ததைச் சேன்னாடன் கேட்டார். குஞ்ஞுமாளுவுக்கும் அதற்குச் சம்மதம்தான். ஊரிலிருந்த கிறிஸ்தவர்களெல்லாம் பணக்காரர்களானது கிழக்குத் தொடர்ச்சி மலையில் தோட்டம் வாங்கி விவசாயம் செய்துதான். ஆனால் அதற்குப் பணம் செலவாகும். குடும்பத்திலிருந்து சொத்தை முடக்க வேண்டுமென்று ராகவன்பிள்ளைக்காகக் குஞ்ஞுமாளு விவாதித்த போது சேன்னாடன் சொன்னார்; உன்னோட தம்பிகளெல்லாம் உதவாக்கரைங்க. வாலிபத்திலே அவங்களோட பராமரிப்பை நானே ஏத்துகிட்டேன். அதைச செஞ்சி முடிச்சேன். அத்திப்புரய்க் கல் குடும்பத்திற்கு சொத்து சம்பாதிச்சிக் கொடுத்தேன். இனிமே உங்க பாட்டை நீங்களே பார்த்துக்கணும். கடைசியில் குடும்பச் செலவுக்குத் தேவைப்படுவது போக மீதி நெல்லை விற்றுத் தோட்டம் வாங்க நிச்சயமாயிற்று. ராகவன்பிள்ளை எருமேலியில் தோட்டம் வாங்கினான். அங்கே விவசாயம் அபிவிருத்தி யடைந்ததும் அத்திப்புரய்க்கலிலும் கோயிற்புரத்திலும் பெரிய மாடி வீடுகள் கட்டப்படும் என்று குஞ்ஞுமாளு கனவு கண்டாள். ஒரு தடவை வந்தபோது ராகவன்பிள்ளை சகோதரியின் பத்துப்பவுன் எடையான கழுத்துமாலையுடன் திரும்பிப் போனான். ஈச்சர பிள்ளை மகளுக்காகச் செய்து கொடுத்த கழுத்துமாலை அது. ராகவன்பிள்ளையின் தேன் கலந்தாற்போன்ற பேச்சு எவரையும் வசீகரிக்கும். பாவம், குஞ்ஞுமாளு தம்பியை நம்பினாள்.

குஞ்சுநாயருடைய சேன்னாட்டுக் குடும்பத்தில் நிலைமை மெச்சக் தகுந்ததாக இல்லை. மூத்த மருமகன் கொச்சுகிட்டன் தாய்மாமனை அனுசரித்துப் போவதில்லை. விவசாய வேலைகள் எதிலும் ஈடுபட அவனுக்கு நேரமில்லை. எப்போதும் வெடிப் புரய்க்கல் குஞ்ஞன்நாயருக்குப் பின்னால் போவதுதான் அவனுக்கு

வேலை. நாயர் சர்வீஸ் சொசைட்டி ஏற்படுத்தவும், தனிநபர் சொத்துரிமையை நடைமுறைப்படுத்தவும் குஞ்ஞன்நாயர் எடுத்துக்கொண்ட முயற்சிகளில் அவன் பங்கெடுத்துக் கொண்டான். ஆசைப்பட்ட ஒரு பெண்ணுக்குப் புடவை எடுத்துக் கொடுத்துக் கல்யாணம் செய்துகொள்ள அவன் நிச்சயித்திருந்தான். சேன்னாடனுக்கு அது தெரிந்தது. முன்பு சேன்னாடன் கொடுத்த ஒரு வழக்கில் எதிர் சாட்சி சொன்ன ஒருவருடைய மருமகள் அந்தப் பெண். ஆனாலும் சேன்னாடன் அதற்குச் சம்மதம் கொடுத்தார். தனிநபர் சொத்துரிமை வந்தால் சேன்னாடனும் காரணவர் என்ற நிலையில் குஞ்சுநாயர் சம்பாதித்த சொத்தின் பதினைந்தில் ஒரு பாகம் கொச்சுநங்கைக்கும் மக்களுக்கும் அவர்களுடைய மக்களுக்கும் கிடைக்கும்—அதாவது ஐந்தோ பத்தோ மரக்கால் நிலம். காரணவர் எங்கேயாவது போகட்டும் என்பது தான் இப்போது கொச்சுநங்கை அவளுடைய பிள்ளைகள் ஆகியோரது மனோபாவம்.

***

பாலத்தோள் வீட்ட வேலைக்காரி குஞ்ஞூச்சியின் ஒரே மகன் வெடிப்புரய்க்கல் குஞ்ஞன்நாயர். வேலை செய்யும் வீட்டிலிருந்து கொண்டு வந்த பழைய சோறுதின்றுதான் அவன் வளர்ந்தான். ஆனால் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தபோது ஒருநாள் அவன் அம்மாவிடம் சொன்னான்; அங்கிருந்து கொண்டு வர்ற பழைய சோறு எனக்கு வேணாம். அதற்குப் பிறகு அவன் ஒரு போதும் அதைச் சாப்பிட்டதில்லை. குஞ்ஞன் படிப்பில் கெட்டிக் காரனாக இருந்தான். நல்ல குணம். அடக்க ஒடுக்கமானவன். தான் படித்த பள்ளிக்கூடத்திலேயே குஞ்ஞன் நாயருக்கு வாத்தியார் வேலை கிடைத்துவிட்டது. அதற்குப் பிறகு அவன் அம்மாவை வீட்டு வேலை செய்ய அனுப்புவதில்லை. அம்மாவை அவன் பராமரித்துக் காப்பாற்றினான். எல்லோருடனும் நட்புறவுடன் பழகி நல்ல பெயரெடுத்தவள் குஞ்ஞூச்சி. அவளுக்கு ஓர் ஆசை இருந்தது—மகன் ஒரு கல்யாணம் செய்துகொள்ள வேண்டும். சமூகப் பிரச்சினைகளைப் பொறுப்பேற்றுக்கொண்ட குஞ்ஞன்நாயருக்கு அதற்கெல்லாம் நேரம் கிடைக்கவில்லை. கடைசியில் மகனுக்குக் கல்யாணம் செய்து பார்க்காமலே குஞ்ஞூச்சி இறந்தாள். அவளுடைய சரீரத்தைச் சிதையில் வைத்துத்

தீ மூட்டியதும், அஸ்தியை எடுத்து அஸ்திக்கலசத்தில் இட்டது அல்லாமல் அம்மாவின் இறுதிச் சடங்குகள் எதையும் குஞ்ஞுண்ணி நாயர் செய்யவில்லை. அவனுக்கு அதிலெல்லாம் நம்பிக்கை கிடையாது. ஈமச்சடங்குகள் செய்யாததனால் குஞ்ஞூச்சியின் ஆத்மா வழி தெரியாமல் அலைந்து திரிவதாக அக்கம்பக்கத்துப் பெண்களுக்குத் தோன்றியது.

ஒருநாள் குஞ்ஞுண்ணிநாயரைக் காணவில்லை. அவர் காந்திஜியின் ஆசிரமத்திற்குப் போய்ச் சேர்ந்துவிட்டதாகப் பின்னர் தான் தெரிந்தது. அவருடைய வீடு இப்போது ஒரு வாசகசாலை. குஞ்ஞுண்ணிநாயருடைய தொண்டர்களாயிருந்த இளைஞர்கள் அங்கே கூடுவார்கள். நாட்டினுடைய சுதந்திரத்தைப் பற்றியும் தனிநபர் சொத்துரிமை பற்றியும் அங்கே சர்ச்சை நடக்கும்.

***

தெற்குக் காசி என்று புகழ் பெற்றது வைக்கம் கோயில். அங்கே சத்தியாகிரகம் ஆரம்பித்திருக்கிறது. தீண்டத்தகாதவர்களுக்குப் பொது இடங்களில் நடமாடுவதற்கான சுதந்திரம் பெற்றுத் தருவ தற்கான சத்தியாக்கிரகம். அங்கே வடக்கே காந்திஜியின் ஆசிரமத் திற்குப் போன வெடிப்புரய்க்கல் குஞ்ஞுண்ணிநாயரும் சத்தியாக் கிரகத்தில் பங்கெடுத்துக் கொள்வதற்காக வருகிறார். ஊரில் இளைஞர்கள் எல்லோருமே சத்தியாக்கிரகத்தில் பங்கெடுத்துக் கொள்வார்களோ என்று காரணவர்கள் பயந்தார்கள். குழந்தைகள் வெடிப்புரய்க்கல்லில் உள்ள வாசகசாலைக்குப் போவதை வற்புறுத்தித் தடுத்தார்கள். அங்கே கால் வைத்தால் எப்படிப்பட்ட நல்லவனும் உதாவக்கரையாகிவிடுவான் என்பது அவர்களுடைய கணிப்பு. ஆனால் இளைஞர்களில் பலர் இப்போது இருப்பதும் உறங்குவதும் அங்கேதான். அங்கே பத்திரிகைகள் வரும். தபால் காரர் பத்திரிகை கொண்டு வந்து கொடுத்ததும் எல்லோருமாகச் சேர்ந்து படிப்பார்கள். சேன்னாடனும் கூட்டாளிகளும் பாலத் தோள் வீட்டில் சபை கூடினார்கள். நாடு முழுவதையும் பாதித் திருக்கும் ஒரு செயல். தீண்டத்தகாதவர்கள் இனி ஆலயப் பிரவேசமும் வேண்டுமென்று கேட்பார்கள். பட்டாளத்துக்காரர் களைக் கொண்டு வந்து சத்தியாக்கிரகிகளை அடித்து நொறுக்கி உதைத்து மிதிக்க வேண்டும் என்பது சேன்னாடனின் அபிப்பிராயம். ஆனால் அவருடன் சேர்ந்திருந்த மற்றவர்களுக்கு

அவரளவுக்கு ஆவேசம் வரவில்லை. உலகத்தில் ஏராளமான மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. உலக மகாயுத்தம் ஒன்று நடந்து முடிந்திருக்கிறது. இனியும் ஏராளமான மாற்றங்கள் ஏற்படும். அவை எல்லாவற்றையும் பத்திரிகைகள் மூலமாகத்தான் தெரிந்து கொள்ள முடியும். குழந்தைகள் பத்திரிகைகள் படிப்பதைத் தடுக்கக் கூடாது என்பது ஈஸ்வர நம்பூதிரியின் அபிப்பிராயம். வைக்கத்திற்கு மலைவெள்ளம் போல் சத்தியாக்கிரகிகள் வந்துகொண்டிருந் தார்கள். மலை வெள்ளத்தை மணல்கொண்டு அணையிட்டுத் தடுத்து நிறுத்தமுடியுமா? அடித்துக் கொன்றாலும் பின்வாங்காத வர்கள் அவர்கள். உயர்ஜாதிக்காரர்கள்தான் சத்தியாக்கிரகத்தை நடத்துகிறார்கள். காங்கிரஸ்தான் அதன் பின்னணியிலிருந்த பெரிய சக்தி. இந்த விஷயத்தில் காந்திஜிக்குப் பெரிய நிர்ப்பந்தம். ஜாதி வேற்றுமைக்கு எதிராகப் போராட ஈழவர்களுக்கு ஸ்ரீ நாராயண தர்ம பரிபாலன சங்கம் என்று ஒன்று உண்டு. நம்பூதிரிப்பெண் களுக்கு முகத்திரையாக ஓலைக்குடைத் தடுப்பு தேவையில்லை. நம்பூதிரிகளுக்கு பழைய முறைப்படியான நாயர் சம்பந்தம் கூடாது. விதவை விவாகத்தை நடைமுறைப்படுத்த வேண்டும். சேன்னாடனும் வட்டாளிகளும் இதையெல்லாம் கேட்டு நாக்குத் தொங்கிப் போனார்கள். நாட்டுக்குப் பெரிய ஆபத்து நேரப் போகிறது என்று பயந்து, அதிலிருந்து தப்பிக்க ஆலோசிப்பதற்காகப் பாலத்தோள் வீட்டில் ஒன்றுகூடி விருந்து சாப்பிட்டுப் பிரிந்தது தான் மிச்சம். ஆனாலும் ஒரு பயன் ஏற்பட்டது; சேன்னாடனுக்கும் கணபதி நம்பூதிரிக்கும் இடையே இருந்த பகைமை அத்துடன் முடிவடைந்தது. அது மட்டுமல்ல, ரிசீவர் நிர்வாகத்திலிருந்த கோயில் ஊரார் பொறுப்புக்கு மீண்டுவர இரு பிரிவினரும் ஒன்றிணைந்து செயல்படத் தீர்மானித்தார்கள். இரு பிரிவினர் களின் வக்கீல்கள் மூலமாக வழக்கு வாபசாகி, ரிசீவர் நிர்வாகம் முடிவுக்கு வரவேண்டும். நீதிமன்றத்தின் அனுமதியுடன் கிருஷ்ண பிள்ளை என்ற ஒருவரை நிர்வாகியாக்கினார்கள். அந்த உத்தி யோகத்தின் பெயரும் மாறியது—மானேஜர் என்பது அந்தப் புதிய பெயர்.

தீண்டத்தகாதவர்கள் பொதுப் பாதைகளில் நடக்கத் தொடங் கினார்கள். பறையன் இட்டேப்பன்தான் முதல்முதலாக நடந்தான். யாரோ அவனை முறுக்கி விட்டிருக்கிறார்கள்; அல்லது அவன் சுயமாகவே தீர்மானித்து இப்படி நடக்கத் தொடங்கி யிருக்கலாம். இயல்பாக அவன் முரடன். சேரமன்னன் திருவஞ்சனின் வம்சத்தில் பிறந்தவன். ஊரில் அது ஒரு முக்கிய நிகழ்ச்சியாயிற்று.

வாசகசாலையில் பெரிய ஏற்பாடுகள் நடக்கின்றன. வைக்கம் சத்தியாக்கிரகத்தில் பங்கேற்று ஜெயிலுக்குப் போன வெடிப்புரயக் கல் குஞ்ஞன் நாயருக்கு ஊராரின் ஒரு வரவேற்பு! முதல் முதலாக ஊரில் ஒரு வரவேற்பு விழா நடக்கிறது. பலருக்கு அது என்ன வென்று கூடத் தெரியாதிருந்தது. பெண்கள் உட்படப் பெருங் கூட்டம் கூடியது. வரவேற்பு விழாவிற்குப் பிறகு ஒரு கருத்தரங் கத்திற்கு ஏற்பாடாயிற்று. ஹரிஜன முன்னேற்றம், சுதந்திரம் ஆகியவற்றைப் பற்றியெல்லாம் குஞ்ஞன்நாயர் ஆவேசமாகப் பேசினார். அத்திப்புரயக்கல் ராகவன்பிள்ளை தலைமை வகித்தார். மணிகண்டனுக்கு மிகவும் பெருமையாக இருந்தது. அவனுடைய தாய்மாமன் பிரசங்கம் செய்கிறார். கூட்டம் முடிந்து அவனும் ராகவன்பிள்ளையின் கையைப பற்றிப் பிடித்துக்கொண்டு வாசக சாலைக்குப் போனான். அங்கே நடந்த சமபந்தி போஜனத்தில் தாய்மாமனுடன் கூட உட்கார்ந்து சாப்பிட்டான். வீட்டிற்குத் திரும்பி வந்தபோது குட்டி போட்ட புலிபோலக் கோபாவேசத் துடன் நின்ற அப்பாவைப் பார்த்தான். தன்னுடைய மகனைத் தீண்டத்தாகத ஜாதியாருடன் ஒன்றாகச் சேர்ந்து சாப்பிடச் செய்த ராகவன்பிள்ளையின் நடவடிக்கையைச் சேன்னாடன் கேள்விக் குட்படுத்தினார். கடைசியில் மூாண்பட்டு வெளியேறிய சேன்னாடனைப் பின்பற்றிப்போய் அமைதிப்படுத்தியது மணி கண்டன்தான். கோயிற்புரத்து குஞ்ஞுமாளுவையும் அவள் மகளையும் சமூகத்திலிருந்து புறக்கணிக்க வேண்டுமென்று சமூகத்துப் பெண்கள் பலர் சொன்ன போதிலும் அப்படி யொன்றும் நடந்துவிடவில்லை.

* * *

ஊர்ப் பள்ளிக்கூடத்தில் மணிகண்டனின் படிப்பு முடிந்தது. இனி இங்கிலீஷ் பள்ளிக்கூடத்தில் கொண்டுபோய்ச் சேர்க்க வேண்டும். இங்கிலீஷ் பள்ளிக்கூடத்திற்கு அம்பலப்புழைக் கடற்கரையிலிருந்து அங்குமிங்குமாகப் பத்து நாழிகை நடக்க வேண்டும். மணிகண்ட னுக்கு நடப்பதற்குச் சோம்பலில்லை. இங்கிலீஷ் பள்ளிக்கூடத்தில் சேர்வதற்காக விதிமுறைகளைப் பற்றிச் சேன்னாடன் ஸ்ரீ தரனுண்ணியிடம் கேட்டறிந்து கொண்டார். செலவு பிடிக்கும் காரியம். அன்றைய நிலையில் தாய்மாமன்மார்கள்தான் மருமகன் களைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்துப் படிக்க வைக்க வேண்டும்.

ராகவன்பிள்ளை அதெல்லாம் செய்ய மாட்டான் என்று சேன்னா டனுக்குத் தெரியும். எவ்வளவு கஷ்டப்பட்டாலும் மணிகண்டனை இங்கிலீஷ் படிக்க வைக்க வேண்டும் என்பதில் சேன்னாடன் உறுதியாக இருந்தார். தன்னுடைய மருமகன் கொச்சுகிட்டனுக்கு இங்கிலீஷ் படிப்பிக்க வேண்டியிருந்தது. கொச்சுகிட்டன் படித்து ஒரு உத்தியோகத்தில் இருந்தானென்றால் அவனுடைய தம்பி மார்கள் பாதுகாக்கப்பட்டவர்களாக விடுவார்கள். வெட்டிக்காட்டு நாணுக்குறுப்பு மருமகன் பரமேஸ்வரனை இங்கிலீஷ் படிக்க வைத்தார். அவன் இப்போது போலீஸ் இன்ஸ்பெக்டர். கலெக்டரின் அந்தஸ்திலான ஒரு பேஷ்காரின் மகளைப் பரமேஸ்வரன் கல்யாணம் செய்து கொண்டிருந்தான். இப்போது வெட்டிக்காட்டுக் குடும்பம் உயர்ந்த நிலைக்கு வந்துவிட்டது. ஆனால் பெரிய பெரிய உத்தியோகஸ்தர்களின் சமையல்காரனாக வேலை பார்த்து மருமகனைப் படிக்க வைத்த நாணுக்குறுப்பு முதுமை அடைந்தபோது தாய்மாமனை ஒரு வேலைக்காரனைப் போன்று பரமேஸ்வரன் நடத்தினான். நாணுக்குறுப்புக்கு அதில் வருத்தம் எதுவும் இல்லை. மருமகன் பெரிய நிலைமைக்கு வந்து விட்டான் அல்லவா! அது போதும். குடும்பம் வளமாகிவிட்டது என்று மனச்சமாதானம் செய்துகொண்ட கிழவர் ஒதுங்கியிருந்து பிழைத்தார்.

சேன்னாடன் ஆலப்புழையிலிருந்து தைத்துக்கொண்டு வந்திருந்த முரட்டுத் துணியான கேம்பிரித் துணியுடுப்பு மணி கண்டனுக்குப் பொருத்தமாக இல்லை. போட்டுப் பார்த்தபோது பெரிதாக அமைந்துவிட்டதாகச் சேன்னாடனுக்குத் தோன்றியது. ஆனாலும் அது போதும் என்றிருந்துவிட்டார். கிட்டக்கணியார் ஒரு நல்ல ஓலைக்குடை தயார் செய்துகொண்டு வந்து கொடுத்தார். மணிகண்டன்வேட்டி கட்டிக்கொண்டு, அப்பா தைத்துக் கொடுத்த உடுப்புக்குள் நுழைந்து, ஓலைக்குடையும் பிடித்துக்கொண்டு இங்கிலீஷ் படிக்கப் போனான். அவனுடன் படித்துக் கொண் டிருந்தவர்களில் பலர் தொலைவான ஊர்களில் இங்கிலீஷ் பள்ளிக் கூடங்களில் சேர்ந்தார்கள். சிலர் படிப்பை நிறுத்தி விட்டார்கள். மணிகண்டன் அவனுடைய தாய்மாமன் ராகவன்பிள்ளைக்கு ஒரு கடிதம் எழுதினான். அவர் அங்கே எருமேலியிலுள்ள தோட்டத் தில் இருந்தார். அவனுக்குப் பொருத்தமான உடுப்பு ஒன்றும் துணிக்குடை ஒன்றும் வேண்டுமென்று தாய்மாமனுக்கு எழுதினான். உடுப்புகொண்டு வருவதாகத் தாய்மாமனிடமிருந்து பதில் கடிதமும் வந்தது.

மகாராஜா புதிதாக நிறுவிய நீதிமன்றத்தில் தனிநபர் சொத்துரிமை பற்றி வாதப் பிரதிவாதம் நடந்துகொண்டிருந்தது. சார்ந்துள்ளவர்களும் எதிர்ப்பவர்களும் சொல்வதெல்லாம் பத்திரிகைகளில் வரும். தனிநபர் சொத்துரிமை சட்டமாகிவிடும் என்று பரவலாகப் பேசப்பட்டது. இதை முன்கூட்டியே அறிந்து கொண்டு, அத்திப்புரய்க்கல்லைச் சேர்ந்த சில சொத்துக்களை விற்க ராகவன்பிள்ளை தனது முனைப்பை வெளிப்படுத்தினார். அவர் வந்தபோது மணிகண்டனுக்கான உடுப்பைக் கொண்டுவரவில்லை. மருமகன் இங்கிலீஷ் பள்ளிக்கூடத்தில் சேர்ந்ததைப் பற்றி அவர் பொருட்படுத்தவே இல்லை. தோட்டத்தின் தேவைக்கு இப்போது மேலும் கொஞ்சம் பணம் வேண்டும். அதற்காக அத்திப்புரய்க் கல்லைச் சேர்ந்த நிலத்தை விற்க வேண்டும். தம்பிகள் கோவிந்தப் பிள்ளையும் கேசவபிள்ளையும் சிறிதும் மறுக்கவில்லை. அவர் களுக்கு அண்ணனை எதிர்த்துப் பேசும் எண்ணம் கிடையாது. குஞ்ஞுமாளுவுக்காகப் பேசியது சேன்னாடன்தான். இப்போது குடும்பச் சொத்துக்களைப் பத்திரம் போடவேண்டுமென்றால், அது குடும்பத் தேவைக்காகத்தான் என்பது காண்பிக்கப்படவேண்டும். குடும்பத்திற்கு வேறு புதிய சொத்து வாங்குவதோ, குடும்பச் சொத்துக்களிலிருந்து செலவு செய்வதோ, சொத்துக்களை எழுதி விற்பதோ கூடாது என்பது புதிய சட்டம். அதனால் அத்திப்புரய்க் கல் குடும்பத்தைச் சேர்ந்த எருமேலியிலுள்ள தோட்டத்தின் தேவைக்காகப் பற்று எழுதி இங்குள்ள ஏதேனும் நிலத்தை விற்பதில் தவறில்லை என்று சேன்னாடன் மிகவும் சகஜமாகச் சொன்னார். ராகவன்பிள்ளை இவ்வளவு காலம் செய்த சதி அப்போதுதான் தெரிய வந்தது. எருமேலியில் அவர் தோட்டம் வாங்கியிருப்பது குடும்பச் சொத்தாக அல்ல. தன்னுடைய சொந்தப் பெயருக்கு வாங்கியிருந்தார். சேன்னாடனுக்கு இந்த விஷயத்தில் முன்னரே சந்தேகம் இருந்ததனால் அவர் இப்படி தலையிட்டார். எல்லோ ருக்கும் உரிமையான குடும்பச் சொத்தைக் கொண்டுபோய்ச் சொந்தப் பெயரில் தோட்டம் வாங்கியது, ராகவன்பிள்ளை அத்துமீறிக் குடும்பச் சொத்தைக் கைப்பற்றுவதற்கான முயற்சி. இனிக்க இனிக்கப் பேசிக் கவர்ந்து தன்னுடைய நகைகளைத் தட்டிப் பறித்த தம்பியின் நிறத்தைப் புரிந்துகொண்டபோது குஞ்ஞுமாளு அம்மை சோர்ந்து போனாள். கணவனைக்கூடக் கேட்காமல் நகைகளைத் தம்பிக்கு எடுத்துக் கொடுத்திருந்தாள். தனிநபர் சொத்துரிமை என்கிற காற்றடித்ததன் காரணமாக இனிமேல் பாசம் எதுவும் இல்லாமல் எல்லோரும் தன்

காரியத்தைப் பார்த்துக் கொள்வார்கள். இந்தக் காற்றில் குடும்பத்தின் அஸ்திவாரம் சிதையும். போனால் போகட்டும் என்று சேன்னாட்ன் மனைவியைச் சமாதானப்படுத்தினார்.

சொத்து விற்றுப் பணம் வேண்டும் என்ற பிடிவாதத்தில் இருந்தார் ராகவன்பிள்ளை. அல்லது அவருக்குத் தனியாக அவருக்குரியதான தனிநபர் சொத்து வேண்டும். அது இனிமேல் குடும்பத்தின் பொதுச் சொத்து அல்ல; சொத்துக்களை ஆறாகப் பிரிக்கவேண்டும். குஞ்ஞுமாளு அம்மைக்கு இரண்டு தங்கைகளும் மூன்று தம்பிகளும் உண்டு. தங்கைகளுக்கு நிறையப்பிள்ளைகள் உண்டு. குஞ்ஞுமாளுவுக்கு இரண்டு பிள்ளைகள் இருந்தார்கள். தனிநபர் சொத்துமுறைப்படி பாகம் வைத்தால் ராகவன் பிள்ளைக்குப் பதின்மூன்றில் ஒரு பங்குதான் கிடைக்கும். அவர் வாதிப்பது அப்பா சம்பாதித்துப் பிள்ளைகளுக்குக் கொடுத்த சொத்து அது என்பதாக; அத்திப்புரய்க்கல் குடும்பத்தைச் சேர்ந்த சொத்து அல்ல அது. எனவே நெல் களஞ்சிய மேலதிகாரி ஈச்சர பிள்ளையின் ஆறு பிள்ளைகளுக்கு மட்டும் பங்குவைத்தால் போதும் என்பதுதான் அவருடைய வாதம். ஆனால் முன்பு அத்திப்புரய்க்கல் உண்ணாச்சியம்மையைச் சேர்ந்த சொத்துக்கள் ஈச்சரபிள்ளை சம்பாதித்ததுதான் என்று வாதித்து அவருடைய மருமகன்கள் தொடுத்த வழக்கில், சேன்னாட்டு குஞ்சுநாயர்தான் ஓடியலைந்து வழக்கை விவாதித்து. அந்த சொத்துக்கள் எதுவும் கைவிட்டுப் போய்விடாமல் காப்பாற்றியவர். அன்றைகதுக் குஞ்சு நாயர் முயற்சி எடுத்து முடிவடைந்த தீர்ப்பை அனுசரித்து, அத்திப் புரய்க்கல் வகைப்பட்ட சொத்து முழுவதும் உண்ணாச்சி யம்மையைச் சேர்ந்ததாகும்; அது குடும்பச் சொத்து. அப்படி ஒரு கோர்ட்டுத் தீர்ப்பு வந்ததனால் அத்திப்புரய்க்கல் வகைச் சொத்துக்கள் பாதுகாக்கப்பட்டன. இல்லாவிட்டால் அதை யெல்லாம் ஈச்சரபிள்ளையின் மருமகன்கள் கொண்டுபோயிருந் திருப்பார்கள். ஆனால் ராகவன்பிள்ளை அதையெல்லாம் மறுத்தார். அது சத்தியத்தை இல்லாமல் செய்து உருவான ஒரு கோர்ட் தீர்ப்பு என்பது அவருடைய வாதம். அவர் மறு அப்பீல் தாக்கல் செய்தார். குஞ்ஞுமாளு அம்மையின் தங்கைகள்கூட ராகவன்பிள்ளையின் பக்கம் சேர்ந்தார்கள். தனிநபர் சொத்துரிமை அமலாகுமானால் அவர்களுக்குக் கூடுதலான பங்கு கிடைக்கும் என்றிருந்தபோதும்கூட ராகவன்பிள்ளைக்கு எதிராக வழக்குத் தொடுக்க அவர்கள் சேரவில்லை. குஞ்ஞுமாளு அம்மை தனிமைப் பட்டாள். கடைசியில் குஞ்ஞுமாளு குடியிருக்கும் கோயிற்புரத்து

வீடும் பண்ணைவீடும் மட்டும் குஞ்ஞுமாளுவுக்குக் கிடைத்தன. நானூறு மரக்கால் நிலத்தையும் மற்ற பண்ணை வீடுகளையும் தம்பிகள் பங்கிட்டு எடுத்துக்கொண்டார்கள். அத்துடன் அத்திப் புரய்க்கல் குடும்பம் என்ற ஒன்று இல்லாதாயிற்று. குஞ்ஞுமாளுவுக்கு விவசாயம் செய்ய ஒரு துண்டு நிலம்கூட இல்லை.

ஊரெல்லாம் வழக்குகள், வல்லடி வழக்குகள்! நீதிமன்றத்தில் தனிநபர் சொத்துரிமைச் சட்டம் அமலாக்கப்பட்டது. மகாராஜா நல்ல மனது வைத்துக் கையெழுத்திட்டதனால், அது சட்டமாயிற்று. சேன்னாட்டுக் குடும்பத்திற்குப் பதினைந்து மரக்கால் நிலம்தான் இருந்தது. பினனால் வந்த சொத்துக்கள் முழுவதும் சேன்னாடன் உழைத்துச் சம்பாதித்தது. ஆனால் தனிநபர் சொத்துரிமைச் சட்டத்தின்படி பங்கு வைத்தே ஆகவேண்டும். கொச்சுநங்கையின் பிள்ளைகளுக்கும் அவர்களுடைய பிள்ளைகளுக்கும் ஒவ்வொரு பங்கு கிடைக்கும். ஒரு பங்கு குஞ்சுநாயருக்கும் கிடைக்கும். அதிகப்படியானால் பத்து மரக்கால் நிலம் கிடைக்கும். இத்தனை நாளும் தான் சேன்னாடன் என்றுதான் அறியப்பட்டவன். சேன்னாடன் பாகம் பிரித்து முடிக்கும்போது தான் வெறும் குஞ்சுநாயர் மட்டுமே. ஏராளமாக நெல்லும் பணமும் கையில் வைத்திருந்து அதிகாரம் செய்தவர். சொத்து கிடைத்தால் நல்லதுதான்; ஒரு நேரத்துக் கஞ்சிக்குக் குறைவிருக்காது. ஆனால் வழக்கும் சச்சரவும் வேண்டாமென்று அவர் நிச்சயித்தார். சகோதரி கொச்சுநங்கையை அழைத்துக் கூறினார், "நான் இப்பவே சாவியைக் கொடுத்திடுறேன். நிலத்தையும் பண்ணை வீட்டையும் விட்டுக் கொடுத்திடுறேன். பிள்ளைவாள் கிட்டச் சொல்லு. அவர்கள் ஒவ்வொருத்தருக்கும் பிய்த்துக் குதறித் துண்டுகளாகத்தான் வேண்டுமென்றால் அப்படியே ஆகட்டும். இல்லாட்டி, நீங்க எல்லாருமா ஒன்று சேர்ந்திட்டா அப்படியே ஆகட்டும். எனக்கு என்ன தாரணும்னு நினைக்கிறீங்களோ அதைக் கொடுங்க." கொச்சுநங்கை இவ்வளவு எதிர்பார்க்கவில்லை. இத்தனை நாளும் தங்களைப் பராமரித்துக் காப்பாற்றிய சகோதரன் அந்தக் குடும்பத்திலிருந்து வெளியேறிப்போகும் காட்சி கண்டு அவர்களுடைய இருதயம் விம்மியது. பாகப்பிரிவினை நடந்து முடிந்த பிறகு கொச்சு நங்கையைப் பிள்ளைகள் வைத்துக் காப்பாற்றுவார்கள் என்பது என்ன உறுதி?

மகாராஜா திருவுள்ளம் கொண்டு கையெழுத்திட்ட தனிநபர் சொத்துரிமைச் சட்டத்தின் ஒரு நகலைச் சேன்னாடன் விலைக்கு வாங்கினார். மணிகண்டன் அதில் ஒரு பகுதியை அப்பாவின்

கவனத்திற்குக் கொண்டுவந்தான். குடும்பச் சொத்துக்கள் காரணவர் சம்பாதித்ததாக இருந்தால், அதில் நான்கில் ஒரு பங்கு காரணவருக்கு உரிமையானதாகும். அப்படி ஒரு பகுதி அதில் உள்ளதைக் கண்டுபிடித்த மணிகண்டனின் அறிவுத்திறனைச் சேன்னாடன் மனதார வாழ்த்தினார். இந்தப் பகுதிப் பிரிவை அனுசரித்து, சேன்னாட்டுக் குடும்பத்திற்குக் குஞ்சுநாயர் சம்பாதித்த சொத்தின் நான்கில் ஒரு பங்கு குஞ்சுநாயருக்கு உரிய தாகும். ஆனால் அதற்கும் அதிர்ஷ்டமில்லை என்று பத்திரங் களைப் பரிசோதித்த வக்கீல் குமாஸ்தா கூறினார். காரணம், குஞ்சு நாயர் பணம் கொடுத்துத்தான் சேன்னாட்டுக் குடும்பத்திற்குச் சொத்துக்கள் வாங்கியதாகப் பத்திரத்தில் சொல்லப்பட்டிருந்த போதிலும், அந்தச் சொத்துக்கள் குடும்பத்தைச் சேர்ந்தவை என்பதாக வியாக்கியானம் செய்யும் அளவில் பத்திரவாசகம் இருந்தது. கடைசியில் குஞ்சுநாயருக்குக் குடும்பத்திலிருந்து கிடைத்தது கஷ்டப்பட்டுச் சம்பாதித்த ஏழரை மரக்கால் நிலம் மட்டும்தான். அவ்வாறாக அந்த அத்தியாயமும் முடிவடைந்தது. இதே போன்று குடும்பத்திற்காக ஏராளமாகச் சொத்து முடி வடைந்தது. இதேபோன்று குடும்பத்திற்காக ஏராளமாகச் சொத்து சம்பாதித்த நட்டாச்சேரி பத்மநாபனும் கேசும் வாய்தாவுமாகச் சில நாட்கள் நடையாய் நடந்தார். கடைசியில் கிடைத்தது ஒரு பங்கு மட்டுமே. அவ்வாறாகப் பற்பல குடும்பங்கள் நசிந்து இல்லாதாயின.

குஞ்சுநாயர் இப்போது கோயிற்புரத்தில் குடியிருக்கிறார்; மனைவியும் மக்களும் அடங்கிய ஒரு குடும்பத்தின் தலைவர். ஆனால் எதைக்கொண்டு செலவு செய்வது. குஞ்ஞுமாளு அம்மைக்கும் மொத்தம் கிடைத்தது கோயிற்புரத்துப் பண்ணைவீடு மட்டும்தான். குஞ்சுநாயருக்கு ஏழரை மரக்கால் நிலம் உண்டு. வீட்டுச் செலவு செய்ய வேண்டும்; மணிகண்டனைப் படிக்க வைக்க வேண்டும். அப்பா முன்பு அத்திப்புரய்க்கல் மற்றும் சேன்னாட்டு நிலங்களில் விவசாயம் மேற்கொண்டிருந்த காலம் மணிகண்டனின் நினைவுக்கு வந்தது. இன்றைக்கு இப்போது எப்படி இந்த நிலைமை வந்தது? மகாராஜா கொண்டு வந்த புதிய சட்டத்தின் மூலம்தான்! அப்படி ஒரு சட்டம் கொண்டுவந்த மகாராஜாவை மணிகண்டன் வெறுத்தான். பள்ளிக்கூடத்தில் பொன்னுதம்புரான் திருநாள் கொண்டாட்டத்தில் அவன் கலந்து கொள்ளவில்லை. ஆனாலும் இந்தச்சட்டத்தின் மூலம் மணி கண்டனுக்கு மகிழ்ச்சிதந்த ஒரு நிகழ்ச்சி நடந்தது; அப்பா

தங்களுடன் நிரந்தரமாக வீட்டில் தங்கிவிட்டார். அது ஒரு நல்ல மாற்றமாக மணிகண்டனுக்குத் தோன்றியது. ஆனாலும் அப்பா மிகவும் மெலிந்துவிட்டார். மனக்கவலையினால்தான் அப்படி ஆகிவிட்டார் என்று அம்மா சொன்னாள். நாடு முழுக்க வந்து விட்ட விஷயம். ஒரு ஆளுக்கு மட்டும் வந்ததில்லே. கவலைப்பட்டு என்ன பிரயோஜனம்? அம்மா அப்பாவைத் தேற்றுவாள்.

மணிகண்டன் படிப்பில் கெட்டிக்காரன். விஸ்வநாதன் அவனுடைய மிக நெருங்கிய நண்பன். தோற்றத்திலும் நடவடிக்கை களிலும் நாகரிகமானவன். மொழிப்பாடங்களில் மணிகண்டனுக்கு அதிக மதிப்பெண் கிடைக்கும். கணக்கில் மோசம். கணக்கு வாத்தியாரிடம் அடி வாங்காத நாளே கிடையாது. மதியத்திற்குப் பிறகான கணக்கு வகுப்புகளுக்கு அவன் போவதில்லை. ஒரு சமயம் மணிகண்டனின் வீட்டிற்கு வந்திருந்த விஸ்வநாதன், மதியத் திற்குப் பின்னரான கணக்கு வகுப்புக்கு மணிகண்டன் வரவில்லை என்பதைச் சொன்னான். குஞ்ஞுமாளு அம்மை மகனைக் கோபித்தாள். கோபம் அடக்க முடியாத அவள் அழுதுகொண்டு நின்றிருந்த மணிகண்டனின் வாயில் சூடான சாணத்தைத் திணித்து வைத்தாள். குஞ்சுநாயரும் அவனைத் திட்டினார். அதற்குப் பிறகு மணிகண்டன் மதியத்திற்குப் பிறகும் பள்ளிக் கூடத்திற்குப் போகலானான். ஒரு சமயம் விஸ்வநாதனுடைய வீட்டிற்குச் சென்றிருந்தபோதுதான் மணிகண்டன் முதல் முதலாகத் தேநீர் குடித்தான். விஸ்வநாதனின் அம்மா ஒரு பள்ளிக் கூடத்தின் தலைமை ஆசிரியை. மணிகண்டன் எழுதிய சில கவிதைகளை விஸ்வநாதன் அம்மாவிடம் படித்துக் காண்பித்தான். அவளுக்கு அது பிடித்திருந்தது. பின்னர் தன்னுடைய பள்ளிக் கூடத்தின் ஆண்டுவிழாவின்போது மணிகண்டன் தனது கவிதை ஒன்றை வாசித்தான். பிச்சைக்காரர்களைப் பற்றியதாக இருந்தது அந்தக் கவிதை. வீட்டிலிருந்து பள்ளிக்கூடத்திற்குக் கொண்டுவரும் சோற்றைச் சாப்பிடத் தொடங்கும்போது சாப்பாட்டு அறையைச் சுற்றிலும் எப்போதும் சில பிச்சைக்காரர்களை அவன் பார்ப்ப துண்டு. பல சமயங்களில் மணிகண்டன் தன்னுடைய சோற்றை அவர்களுக்கு எடுத்துக் கொடுத்திருக்கிறான். அந்தப் பிச்சைக்காரர் களில் ஒருவன் உடம்பு முழுவதும் சொறிபிடித்தவன். ஒருத்தி குஷ்டம் பிடித்தவள். வயிறு ஊதி பிருஷ்டம் சுருங்கி கூடுவைத்த நெஞ்சுடன் மற்றொருத்தி. அவள் நடந்து போகும்போது பின்பக்கமாக நாற்றமெடுத்த நீர் தொடை வழியாக ஒழுகிக் கொண்டிருக்கும். ஒருநாள் அவள் பள்ளிக்கூடத்திற்கு எதிரில்

செத்துக் கிடந்ததை மணிகண்டன் பார்த்தான். அதுதான் அவனுடைய கவிதையின் கருப்பொருள். கவிதையை வாசித்து முடித்தபோது நீண்ட கைதட்டல் எழுந்தது. மகன் கவிதை எழுது வான் என்பதை அறிந்தபோது சேன்னாடனும் மகிழ்ந்தார். ஆனாலும் குஞ்சுநாயர் சொன்னார்; அவன் இந்தப் பிச்சைக்காரப் பசங்களைப் பத்தியெல்லாம் எழுதுறான். ஏதாச்சும் புண்ணிய முண்டா? அவன் பக்திக் கவிதைகளை எழுதினால் என்னவாம்? அவன் இப்படி எழுதியெழுதி பின்னர் பக்திக் கவிதைகளையும் கதைகளையும் எழுதுவான் என்று குஞ்சுநாயர் தேற்றிக் கொண்டார்.

சாயங்காலம் பள்ளிக் கூடத்திலிருந்து திரும்பும் மணிகண்டன் நேராக வீட்டிற்கு வரமாட்டான். வெடிப்புரய்க்கல் குஞ்ஞன் நாயரின் வாசகசாலைக்குப் போவான். அங்கே பஜனை இருக்கும். அவன் பஜனையில் கலந்துகொள்வான். ஒரு சமயம் குஞ்சுநாயர் இதை அறிந்து, அங்கே போனார். காந்தி ஆசிரமம் என்று அங்கே எழுதி வைக்கப்பட்டிருந்தது. ரகுபதி ராகவ ராஜா ராம் என்ற பாட்டை அங்கே பாடினார்கள். குஞ்சு நாயரும் அந்தப் பாட்டில் லயித்துப் போனார். அவ்வளவு பக்திமயமாக இருந்தது அந்த பஜனை. குஞ்சுநாயர் அன்றைக்கு மகனைக் குற்றம் கூறவில்லை. ஆனாலும் அவர் அறிவுரை கூறினார். வெடிப்புரய்க்கல்லில் கூடும் இளவட்டங்களோடு சேர வேண்டாம். வெடிப்புரய்க்கல் போகவில்லை என்று இத்தனை நாளும் பொய் சொன்னது மிகப்பெரிய பாவம். பொய்சொல்லிவிட்டு எத்தனை மந்திரம் ஜபித்தாலும் பலன் கிடையாது. அப்பாவின் அறிவுரையை அவன் மனதில் ஏற்றுக் கொண்டான்.

மணிகண்டன் எல்லா ஆண்டுகளிலும் தேர்வுகளில் வெற்றி கண்டான். இதற்கிடையே விஸ்வநாதனின் அம்மா வேறொர் ஊருக்கு மாற்றலாகிப் போனாள். அவ்வாறாக அந்த நண்பனை மணிகண்டன் இழந்தான். மணிகண்டனை நேசித்த மற்றொரு நபரும் அவனுடைய வகுப்பில் உண்டு—சாரதா என்ற மாணவி.

வெடிப்புரய்க்கல குஞ்ஞன்நாயருக்கு ஒரு வகையில் சந்நியாச வாழ்க்கைதான். காவி உடை மட்டும் கிடையாது. தனக்குத்தானே சமைத்து சாப்பிட்டுக்கொள்வார். உப்பு சேர்த்து வேகவைத்த காய்கறிகளைச் சாப்பிடுவார். டீயும், காபியும் தொடுவதில்லை. அதிகாலையிலேயே எழுந்துவிடுவார். நாமஜபமும் நூல் நூற்றலும்தான் பெரும்பகுதி நேரமும். வெடிப்புரய்க்கல் மேற்குப் பக்கம் ஒரு துண்டு நிலத்தில் அவர் விவசாயம் செய்வார். அங்கே

பெண்கள் களையெடுக்க வருவது அவருக்கு விருப்பமில்லை. பெண்ணாகப் பிறந்தவர்களுடன் அவர் பேசுவதுகூடக் கிடையாது. வடக்கே ஏதோ ஓர் ஆசிரமத்தில் அவர் யோகாசனங்களைக் கற்றிருந்தார். புலனடக்கத்திற்காகக் கற்றுக் கொண்டவை. காம குரோதம் ஆகியவற்றை வென்றெடுக்கவே அவற்றைக் கற்றார். ஆனால் அவருக்கு இதனாலெல்லாம் பலன்கிடைக்கவில்லை. மன ஒன்றிப்பு கிட்டவில்லை. பிரம்மச்சாரியாக வாழத்தான் ஆசை. ஆனால் மனம் பிடிவிட்டுப்போகிறது. அந்தி மயங்கும் போது யாரோ வாசல்படியில் வந்துநின்று கூப்பிடுவது போலக் கனவு காண்கிறார்; பக்கத்துவீட்டு யுவதிதான். சில சமயங்களில், தான் அவளுடைய படுக்கையறையை அடைந்து நின்று கொண்டிருப்பது போல் தோன்றும். முன்பு கோடாந்த்ரக் குளத்தில் குளித்துக் கொண்டிருந்த ஒரு பெண்மணியின் நிர்வாணத்தைப் பார்த்தது மனதில் அவ்வப்போது நினைவுக்கு வரும். குஞ்ஞன்நாயர் நடத்தும் பிரார்த்தனைக் கூட்டத்திற்கு ஆட்கள் ஏராளமாக வருவார்கள். பிரார்த்தனைக்கிடையே ஏற்படும் மனப்பதற்றம் எல்லோரும் பார்க்கும்படியாக வெளிப்பட்டுவிடும். பிரார்த்தனை பிறழ்ந்த பிரசங்கங்கள் பலிப்பதில்லை என்று அவருக்கே தோன்றுவதுண்டு. அகண்ட நாம ஜபத்துடன் பத்து நாட்கள் உண்ணாவிரதம் அனுஷ்டித்தார். சேன்னாடனும் கூட்டாளிகளும் அந்த நாமஜபத்தில் பங்கெடுத்துக் கொண்டார்கள். குஞ்ஞன்நாயர் உண்ணாவிரதம் அனுஷ்டித்துப் படுத்திருக்கும்போது புடம்போடும் தங்கம் போன்று அவருடைய தேகம் வளர்வதைக் காண இருந்தார்கள். விரதத்தை முடித்துக் கொண்டபிறகு அவர் செய்த பிரசங்கத்திற்கு ஒரு தனிப் பட்ட சக்தி உண்டாயிற்று. நூல்நூற்பும் பிரார்த்தனையும் மட்டு மல்லாமல் கிராம முன்னேற்றத்தையும் ஹரிஜன முன்னேற்றத்தை யும் ஆரம்பித்தார். ரிசீவர் நிர்வாகத்திலிருந்த கோயிலை முழுவதுமாக மீட்டு சமூகத்தவரின் தேர்ந்தெடுக்கப்பட்ட குழு ஒன்று அந்த நிர்வாகத்தை ஏற்றது. கோயில் மீண்டும் செல்வச் செழிப்பு பெற்றது. அந்த வருடம் திருவிழாவைக் குஞ்ஞன்நாயர் நேரில் நின்று நடத்தினார்.

ஊரில் வெறிநாய்த்தொல்லை பரவியபோது, ஆசிரமத்தின் பாலசேனைக் குழு நாய்களை வேட்டையாடியது. வெறிபிடித்ததும் பிடிக்காததுமான பல நாய்களை அவர்கள் விரட்டிப்பிடித்து அடித்துக் கொன்றார்கள். குஞ்ஞன்நாயருக்கு இது பொறுக்க வில்லை. வெறிநாய்களானாலும் இம்சிக்கக் கூடாதென்பது குஞ்ஞன்நாயரின் வாதம். பாலசேனையில் உறுப்பினனான சுரேந்

திரனுக்கு அது புரியவில்லை. அகிம்சையின் அடிப்படைத் தத்துவத்தைச் சொல்லிக் கொடுக்கக் குஞ்ஞுண்ணிநாயருக்கும் முடியாமல் போயிற்று. ஆசிரமத்திற்குப் போவதில்லை என்று சொல்லிவிட்டுத்தான் மணிகண்டன் தினமும் ஆசிரமத்திற்கு வருகிறான் என்பதை அறிந்தபோது, குஞ்ஞுண்ணிநாயர் மணி கண்டனுக்கு புத்திமதி சொன்னார். எவ்வளவு நியாயமான தேவை ஏற்பட்டாலும் பொய்சொல்லக்கூடாது. பொய்சொல்லாமல், தான் அங்கு வரமுடியாது என்று மணிகண்டன் வாதித்தான். ஆசிரமத்திற்கு வருவது என்பதைத் தன்னால் தவிர்க்க முடியாது. அங்கு வருவது வேறு யாருக்காகவும் இல்லை. நாட்டினுடைய சுதந்திரத்தைக் கருதித்தான். மணிகண்டனின் வாதப்போக்குகளை மறுக்க குஞ்ஞுண்ணிநாயரால் முடியவில்லை. இப்படிப் பல சந்தர்ப்பங் களில் மனம் தளர்ந்தது. உண்ணாவிரதம் இருந்து மீட்டெடுத்த கருத்துக்குப் பின்னடைவு வந்தது போலத் தோன்றியது. இப்போதும் மனம் தெளிவடையவில்லை. எங்கிருந்தவாறோ ஈர்ப்புகளும் ஆசைகளும் கைநீட்டுகின்றன. காந்திஜி தோற்றுப்போகிறாரோ? காந்திஜியைப் போல வாழ்வது அசாத்தியமோ? எல்லா சுகசௌகரி யங்களையும் புறக்கணித்துவிட்டு அகிம்சையை நாடிச்சென்ற பெரிய தலைவர்களைக் குஞ்ஞுண்ணிநாயர் பார்த்திருக்கிறார். தன்னால் அதைக் கடைப்பிடிக்க முடியவில்லை. மேலும் ஒரு சுத்தீகரணம் தேவை. ஆசிரமத்திற்கு வருபவர்களுக்கும் கொஞ்சம் முனைப்புக் குறைவு உண்டு. அவர்களுக்கு உற்சாகத்தை ஊட்டு வதற்கு, துடிதுடிப்பை ஏற்படுத்துவதற்கு என்ன வழி?

ஊரைத் திடுக்கிடச் செய்த மற்றொரு நிகழ்ச்சி நடந்தது. மதம் மாறிய புலையரில் சிலர் மீண்டும் ஹிந்துக்கள் ஆவதற்கான ஒரு முயற்சியில் இறங்கினார்கள். ஆற்றுத் துறையில் கிறிஸ்துவர்களின் வேலைக்காரர்களாக இருந்தவர்கள் அவர்கள். அவர்களுடைய நிலச்சுவான்தார்களான கிறிஸ்தவர்கள் எல்லோருமாகச் சேர்ந்து அவர்களைத் தென்னைமரத்தில் கட்டி வைத்து அடித்தார்கள். பலருக்குச் சாகடிக்கும் அளவுக்கு அடி உதை. சேன்னாட்டு குஞ்ஞு நாயரும் கூட்டாளிகளும் ஆசிரமத்திற்கு ஓடிச்சென்று இந்த அத்துமீறலைத் தெரிவித்தார்கள். இதற்குப் பழிக்குப்பழி வாங்க வேண்டுமென்று எல்லோரும் ஒரே குரலில் சொன்னார்கள். ஆனால் இது ஒரு இனப் போராட்டமாகிவிடுமென்று கூறிக் குஞ்ஞுண்ணிநாயர் அவர்களை ஒரு வழியாக அமைதிப்படுத்தித் திருப்பி அனுப்பினார். சுரேந்திரனும் மணிகண்டனும் சேர்ந்து அடியுதைபட்ட புலையரின் வீடுகளுக்குச் சென்று பார்த்தார்கள்.

அது அவர்களுக்குப் பெரும் ஆறுதலாக இருந்தது. இளவட்டமான ஒரு புலையன் சொன்னான்; நான் இனிமே ஔதேம் அல்ல, குஞ்ஞோதனும் அல்ல. ஹிந்துவும் கிறிஸ்தவனும் அல்லாத ஒரு பெயர் தனக்கு வேண்டுமென்று அவன் வேண்டினான். அதனுடைய அர்த்தத்தை முழுவதுமாகப் புரிந்துகொள்ள முடிய வில்லை என்றாலும் அத்தகையவர்களை ஒன்றுதிரட்டுவது தேவை என்று சுரேந்திரனுக்குத் தோன்றியது.

மணிகண்டன் இங்கிலீஷ் பள்ளிக்கூடத்தில் கடைசி வருடத் தேர்விலும் வெற்றி பெற்றான். ஸ்ரீ பத்மநாபன் முத்திரை பதித்த பத்து சக்கரம் சம்பளம் கிடைக்கும் ஒரு வேலை கிடைப்பதற்கான வழியைத் தேடினான். குஞ்ஞுமாளு அம்மையின் வாழ்க்கை பலன் தருவதுபோல் தோன்றியது. ஆனால் கல்லூரியில் சேர்ந்து படிக்கத் தான் மணிகண்டனுக்கு உள்ளூர விருப்பம். அது பெரும் செலவு பிடிக்கும் விஷயம். வீட்டுச் செலவுக்கான வருமானம்கூட இல்லை. குஞ்ஞுமாளு அம்மை அவனைத் தாய்மாமனிடம் அனுப்பி வைத்தாள். தாய்மாமன் ராகவன்பிள்ளையின் தோட்டம் எருமேலியில் இருந்தது. குடியிருந்ததும் அங்கேதான். அங்கு போய்ச் சேரக்காட்டினூட்ட நடந்துசெல்ல வேண்டும். வழியில் ஊர்க்காரக் கிறிஸ்தவர்களின் பெரிய பெரிய தோட்டங்களைப் பார்த்தான். கடைசியில் தாய்மாமன் குடியிருந்த இடத்தை அடைந்தான். கல்லூரியில் சேர வேண்டாம் என்ற அறிவுரைதான் ராகவன் பிள்ளையிடமிருந்து வந்தது. நிராசையுடன் திரும்பினான். திரும்பிப் போகும்வழியில் கோட்டயம் நகரில் சுற்றி அலைந்தான். ஒருவேலை வேண்டும் என்று பல வாசல்களைத் தட்டினான். பறயத்தற பாச்சுவை அங்கே சந்தித்தான். அவன் அங்கே ஒரு ஹோட்டலில் வேலைபார்த்து மாதம்தோறும் அம்மாவுக்கும் சகோதரிகளுக்கும் செலவுக்கான பணத்தை மணியார்டர் செய்து கொண்டிருந்தான். இரவுபகல் கடுமையாக உழைத்து வாழும் பாச்சு நல்ல மனம் படைத்தவன். வேலை கிடைப்பதற்கான முயற்சிகள் எதுவும் பலிக்காமல் மணிகண்டன் ஊருக்குத் திரும்பினான்.

மணிகண்டனைக் கல்லூரியில் சேர்ப்பதென்று அப்பாவும் அம்மாவும் நிச்சயித்தார்கள். கஷ்டப்பட்டாவது மகனை மேலே படிக்க வைக்க வேண்டுமென்று குஞ்சு நாயருக்குத் தோன்றியது. இரண்டு ரூபாய் விலைமதிப்புள்ள ஒரு தகரப்பெட்டியைத் தலையில் தூக்கிக்கொண்டு மணிகண்டன் திருவனந்தபுரத்திற்குப் புறப்பட்டான். பயணம் அனுப்பி வைக்க சுரேந்திரனும் வந்திருந் தான். அம்மா நீர் நிறைந்த கண்களோடு பிரார்த்தித்துக்

கொண்டாள். கல்லூரியில் சேர்ந்த பிறகு, மணிகண்டன் தங்கு வதற்கு ஒரு வீடு தேடிக் கண்டுபிடித்தான். நந்தன்கோடு பகுதியில் ஒரு பழைய வீடு. அங்கே கோவிந்தப்பிள்ளை என்ற ஒரு நடுவயதுக் காரரின் குடும்பம் குடியிருந்தது. அந்த வீட்டின் ஓர் அறையை அவனுக்காக அவர் ஒதுக்கிக் கொடுத்தார். சாப்பாடு தனியே பொங்கிக் கொள்ளவேண்டும்.

கல்லூரி திறந்தது. அன்று மணிகண்டன் விஸ்வநாதனைப் பார்த்தான். பழைய நண்பர்கள் அவ்வாறாக ஒன்று சேர்ந்தார்கள். மணிகண்டன் கவிதை எழுதுவான் என்ற விஷயம் விஸ்வநாதன் சொல்லி மற்ற மாணவர்கள் அறிந்துகொண்டார்கள். கல்லூரி விடுதியில் விஸ்வநாதன் தங்கியிருந்தான். எப்போதும் அவனைச் சூழ்ந்து ஒரு மந்தை நண்பர்கள் குழுமியிருப்பார்கள். மணிகண்ட னுக்கு விஸ்வநாதனுடன் மட்டுமே நட்புறவு இருந்தது. எல்லோ ருடனும் பேசுவான் என்ற போதிலும் சிரித்துக் கும்மாளமிடுவ தில்லை; முடிந்த மட்டும் மற்றவர்களிடமிருந்து ஒதுங்கி நிற்கும் இயல்பு. பழைய சுறுசுறுப்பும் ஒட்டிப்பழகுதலும் இல்லை. மணிகண்டன் ஒட்டுமொத்தமாக மாறிப்போயிருக்கிறான் என்பதாக விஸ்வநாதனுக்குத் தோன்றியது.

சில நாட்களில் தம்பானூரில் காங்கிரஸ் மாநாடு நடந்தது. விஸ்வநாதனுக்குப் பக்கத்தில் மணிகண்டன் நின்றிருந்தான். ஒரு பேச்சாளர் சொன்ன அபத்ததைக் கேட்டதும் விஸ்வநாதன் உரக்கச் சிரித்தான். அன்று விஸ்வநாதன் மணிகண்டனை வேறொர் இடத்திற்கு அழைத்துச் சென்றான். ஒரு சின்ன அறை. அங்கே ஒருவர் சிலருக்குக் கற்றுக்கொடுத்துக் கொண்டிருந்தார். சிஷ்யர்களின் கேள்விகளுக்கு குருநாதர் பதில் சொல்லிக் கொண் டிருந்தது போலிருந்தது. மணிகண்டனும் அந்தக் கூட்டத்தில் ஒருவனானான். வாரத்திற்கு இரண்டோ மூன்றோ நாட்கள் ஸ்டடி க்ளாஸ் இருக்கும். அங்கே வருகின்றவர்களில் மாணவர்கள் உண்டு; தொழிலாளிகள் உண்டு; காங்கிரஸ்காரர்களும் உண்டு. அங்கே நடக்கும் சர்ச்சைகளிலிருந்து புதிய வெளிச்சம் கிடைப்பதாக மணிகண்டனுக்குத் தோன்றியது. ஒரு தனிப்பட்ட சிந்தனைப் போக்கு மலர்ந்து வந்தது. இல்லாதவர்களின் அவலங்களுக்குக் காரணம் புரிந்தது. புதிய வெளிச்சத்தில் மணிகண்டன் ஒரு கவிதை எழுதினான். கல்லூரியில் ஒரு கூட்டத்தில் அவன் அந்தக் கவிதையைப் படித்தான். அவனுடைய கணீர்க்குரல் அவையில் முழக்கமாகக் கேட்டது. அந்தக் கவிதையில் தாளமும் லயமும் சேர்ந்திருந்தன. விஸ்வநாதன் வியந்துபோனான். அவையோர்

கவிதையில் மூழ்கினார்கள். ஆனால் கூட்டம் முடிந்தபோது, கல்லூரியின் மலையாளத்துறைத் தலைவர் அவனைக் கூப்பிட்டுக் கேபித்துக்கொண்டார். ராஜதுரோகத்திற்கு அடிகோலுகிறது அவன் படித்த அந்தக் கவிதை. கல்லூரியிலிருந்து வெளியேற்ற நேருமென்று அவர் அவனை பயமுறுத்தினார். கடைசியில் இனிமேல் புரட்சிக்கு மாணவர்களைத் தூண்டும் இந்த மாதிரியான கவிதைகளை எழுதக் கூடாதென்று எச்சரிக்கை செய்து அனுப்பிவைத்தார். கல்லூரியில் அவன் பிரபலமானான. சீஃப் செக்ரட்டரியின் மகள் அவனை அப்படியே பார்த்தபடி நிறிருப்பாள். கல்லூரியில் அடுத்து நடந்த ஒரு கூட்டத்தில், அவன் படித்த கவிதை பெண்ணின் நிர்வாணத்தைப் பற்றியதாக இருந்தது. மலையாளத் துறைத்தலைவர் அன்றைக்கும் மணிகண்டனைக் கோபித்துக் கொண்டார். உன் னுடைய கவிதை ஆபாசமானது. அதிகம் கோபப்பட்டது விஸ்வ நாதன்தான. கூப்பிட்டு வைத்து பேய் காலிப்பயலே என்று திட்டினான். பயிற்சி வகுப்புக்களில் பங்கெடுத்துக் கொண் டிருந்ததும நீ எப்படி இவ்வளவு கீழ்த்தரத்துக்கு இறங்கினாய்? என்பதாக இருந்தது விஸ்வநாதனின் கேள்வி. என்ன குற்றம் தான் செய்தது என்று மணிகண்டனுக்குப் புரியவில்லை.

மணிகண்டன் விடுமுறைக்கு ஊருக்கு வந்தான். சுரேந்திரன் இதற்குள்ளாக ஊரில் பறையரையும் புலையரையும் ஒன்று திரட்டி தொழிற்சங்கம் அமைத்திருந்தான். அங்கே வெளியிலிருந்து வந்த சிலர் தொழிலாள வர்க்கத்தின் மகத்தான சக்தியைப் பற்றி பயிற்சி வகுப்புகள் நடத்தினார்கள். இருவரும் படிப்பது மார்க்சிசம்தான் என்றாலும் இரண்டுக்குமான வித்தியாசத்தை அவனால் புரிந்து கொள்ள முடிந்தது. சுரேந்திரன் புலையர் குடிசைகளுக்குச் சென்று அவர்களிடமிருந்து சாப்பாடு வாங்கிச் சாப்பிடுவான். அவர் களோடு கலந்திருப்பதுதான் அவனுடைய வாழ்க்கை. தான் வர்க்கமறச் செய்தாயிற்று என்று பெருமையுடன் சொல்லிக் கொள்வான். கண்ட கண்ட புலைக்குடிசைக்கும் பறைக் குடிசைக்கும்போய் அவர்களுடைய புளித்த கஞ்சியைக் குடித்துக் கொண்டு அலைந்து திரியும் அவனுடைய சகவாசம் வேண்டா மென்று குஞ்சுநாயர் மணிகண்டனை அவனிடமிருந்து பிரித்து வைத்தார்.

சுரேந்திரனுக்கு அப்பாவும் அம்மாவும் இருந்தார்கள். அப்பாவின் நான்காவது மனைவிக்குப் பிறந்தவர்களில் மூத்தவன் சுரேந்திரன். அதற்குப் பிறகும் அப்பா ஒரு திருமணம் செய்து கொண்டார். அந்த ஐந்து மனைவிமார்களும் உயிருடன்தான்

இருந்தார்கள். சுரேந்திரனை வளர்த்தது அவனுடைய அம்மாதான். பள்ளிக்கூடப்படிப்பு அவனுக்கு நின்றுபோனது. முதலில் குஞ்ஞன் நாயர் ஆசிரமத்திலும், பின்னர் தொழிலாளர் நடவடிக்கைகளிலும் மூழ்கினான். திடீரென்று அவனுக்குக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்று தோன்றியது. பெண்ணையும் பார்த்தான்; தாய் தந்தை இல்லாத ஒரு பெண். பொன்னம்மாவை சுரேந்திரன் திருமணம் செய்துகொண்டான். திடீரென்று திருமணம் செய்து கொள்வதற்கான காரணத்தை அவன் மணிகண்டனிடம் மட்டும் சொன்னான். புலையர் குடிசைகளுக்கும் பறையர் குடிசைகளுக்கும் தொழிற்சங்க காரியங்களுக்காகச் செல்லும்போது பல சமயங்களில் மனது அலைக்கழிகிறது. அங்கேயெல்லாம் வயதுக்கு வந்த பெண்கள் இருக்கிறார்கள். அங்கே ஏதாவது அசம்பாவிதம் நடந்து விடக் கூடாது என்பதற்காகத்தான் திருமணம் செய்துகொண்டான். சுரேந்திரனுக்கு அமைந்த பயிற்சி வகுப்பு சரிவர இல்லை என்பதாக மணிகண்டனுக்குத் தோன்றியது.

விவசாயத் தொழிலாளர்களுக்கென்று ஒரு கூட்டம் போட்டா லென்னவென்று சுரேந்திரனுக்குத் தன்னிச்சையாக ஓர் எண்ணம் ஏற்பட்டது. ஊர் முழுக்க இதை எதிர்க்கும். தொழிலாளர்கள் கூலியை அதிகரித்துக் கேட்கப் போகிறார்கள் என்ற பேச்சு இப்போதே ஊரில் நடமாடுகிறது. தொழிலாளர்களுக்குத்தான் சுய உணர்வு இன்னும் வரவில்லை. எஜமானர்களுக்கு அடிமையாக இருந்தே பழக்கப்பட்டவர்கள் ஆனாலும் கூட்டம் நடத்த நிச்சயித்தான். ஊர்வலம் ஒன்று வேண்டும் என்று சோதரு புலை யரின் மகள் பாப்பி சொன்னாள். கயிறு முறுக்கும் தொழிலாளர் களின் ஊர்வலம் ஒன்றை ஆலப்புழையில் அவள் பார்த்திருக் கிறாள். அப்படி ஒன்று நடத்த வேண்டும். அதில் முன்நின்று நடக்கப் பாப்பி தயாராக இருந்தாள். சுரேந்திரன் மகிழ்ச்சியில் துள்ளிக் குதித்தான். சில தினங்களுக்குள்ளாக ஊருக்குக் கடைசியில் ஒன்றுகூடி விவசாயத் தொழிலாளர்களின் ஒரு நீண்ட ஊர்வலம் ஊருக்குள் கடந்து சென்றது.

குஞ்ஞன்நாயரின் காந்தி ஆசிரமம் உயிர்த்துடிப்பற்று இருக்கிறது இப்போது. பிரார்த்தனைக்கு வருபவர்களின் எண்ணிக்கையும் குறைந்துவிட்டது. மக்களுக்கு சுதந்திரப்போராட் டத்தின் தீவிரத்தை எடுத்துச் சொல்ல அதிகம்பீரமான ஒரு காங்கிரஸ் மாநாடு நடத்த வேண்டுமென்று குஞ்ஞன்நாயருக்குத் தோன்றியது. மக்கள் செயற்படுவதற்கு அது ஒரு வாய்ப்பாகும். மாநாடு நடத்துவதற்கான செயற்குழுக் கூட்டத்தில் குஞ்ஞன்நாயர்

பேசினார். செயல்களைத் தீவிரப்படுத்தும்படிக் கூறினார். அவையில் இருந்தவர்களை அந்தப் பேச்சு உற்சாகப்படுத்தியது. காங்கிரஸ் மாநாட்டை வெற்றிகரமாக நடத்த வட்டத்ர க்ரிகரி, பருத்திக்காட்டு தாமஸ் முதலிய முக்கியஸ்தர்களான கிறிஸ்தவர்கள் முன்வந்து இறங்கினார்கள். பறையரும் புலையருமான விவசாயத் தொழிலாளர்கள் ஒன்று திரள்வதைத் தகர்க்கக் காங்கிரஸ் சேர்வது தான் நல்லதென்று அவர்களுக்குத் தோன்றியது. ஆனால் மாநாடு நடத்துவதற்கு அரசாங்கத்திடமிருந்து தடையுத்தரவு வந்தது. துப்பாக்கிச் சூடும் லத்திச் சார்ஜும் கையாளப்படுமாம். குஞ்ஞன் நாயரின் தலைமை அணியினருக்கு உற்சாகத்தை ஊட்டியது. மாநாட்டை நடத்துவதற்கு மக்கள் முன்னோக்கி வந்தார்கள். வட இந்தியாவிலிருந்தும் சில காங்கிரஸ் தலைவர்கள் வருவார்கள். ஊர் முழுக்கத் திருவிழா ஆனந்தம். அதைப்போல பயத்தின் பின்னணியும் அங்கே நிறைந்திருந்தது. முந்தின நாள் காலையில் குஞ்ஞன்நாயர் கொடி ஏற்றினார். காற்றில் ஆடிப்பறக்கும் கொடியின்மீது கண்களைச் செலுத்தி பயபக்தியுடன் விழிமூடித் தொழுத கைகளுடன் நெடுநேரம் நின்றுவிட்டார் சேன்னாட்டு குஞ்சுநாயர். அன்று மாலையில் குஞ்ஞன்நாயரின் தலைமையில் விஷய நிர்ணயக் கமிட்டி கூடுவதாக இருந்தது. மறுநாள் கூடவிருக்கும் கூட்டத்தில் முன்மொழிந்து நிறைவேற்றுவதற்கான தீர்மானங்களை எழுதித் தயாரித்தார்கள். பந்தலில் ஏராளமானோர் கூடியிருந்தார்கள். திடீரென்று ஆற்றில் வடக்குப் பக்கமாகச் சில சிவப்பு விளக்குகள் பிரகாசிப்பதைப் பார்த்தார்கள். போலீசாரின் படகுகள் அவை. மூன்று படகுகள் சீறிப்பாய்ந்து வந்தன. துப்பாக்கியும் தலையில இரும்புத் தொப்பியும் அணிந்த ஒரு பெரிய பட்டாளம் வந்திறங்கியது. மேடையிலிருந்து குஞ்ஞன்நாயர் குரல் கொடுத்தார். பாரத் மாதா கீ ஜே. தொழிலாளர்களில் சிலர் அவரைப் பின்பற்றி முழங்கினார்கள். அந்த முழக்கத்தை நிறுத்தும் படிப் போலீஸ் அதிகாரி உத்தரவிட்டார். குஞ்ஞன்நாயர் முடிந்த வரையிலான உச்சத்தில் கோஷமிட்டார். அது ஆகாயத்தைத் தொட்டது. குஞ்ஞன்நாயரைக் கைது செய்வதற்கான ஆணை பிறந்தது. எங்கிருந்தென்று தெரியவில்லை. பந்தலுக்குள் கருங்கற்கள் சரமாரியாக வந்து விழுந்தன. சில போலீஸ்காரர்களுக்குக் கல்லடி விழுந்தது. போலீஸ் அட்டகாசம் ஆரம்பித்தது. ஆட்கள் நாலா பக்கமும் சிதறி ஓடினார்கள். துப்பாக்கி சூடும் நடந்தது. ஊரெல்லாம் நடுங்கிவிட்டது. குஞ்ஞன்நாயரையும் வேறு சிலரையும் கைது செய்துகொண்டு போனார்கள். சாவுக்கு

அழைப்பு விடுக்கும் இரவாக அது இருந்தது.

குஞ்ஞுண்நாயர் மட்டும் நீண்ட நாட்கள் சிறையில் இருந்தார். அவர் ஜாமீனில் வெளிவர விரும்பவில்லை. போலீசார் ஒரு விடிகாலையில் குஞ்ஞுண்நாயரை காந்தி ஆசிரமத்தில் கொண்டு வந்து விட்டார்கள். ஊர் முழுக்க ஆறுதலடைந்தது. எல்லோரும் அவரைப்போய்ப் பார்த்தார்கள். மிகவும் நலிந்த நிலையில் காணப்பட்டார். எவரிடமும் எதுவும் அவர் பேசவில்லை. அன்று ஏதோ அத்தியாவசியக் காரணத்தைச் சொல்லிவிட்டு ஆலப்புழை நகரத்திற்குப் போன குஞ்ஞுண்நாயர் அன்றைக்குத் திரும்பவில்லை. மறுநாள் காலையில் ஆசிரமத்திற்குத் தெற்குப் பக்கத்திலுள்ள மாந்தோப்புக் கிளை ஒன்றில் ஓர் ஆள் தொங்கிக் கொண்டிருந்தார். அது குஞ்ஞுண்நாயர்தான். கொஞ்ச நேரத்திற்குள்ளாக ஊர் முழுவதும் அங்கு கூடிவிட்டது. உடம்பிலிருந்து ஒரு கடிதத்தைக் கண்டெடுத்தார்கள். குஞ்ஞுண்நாயர் சட்டப்படி எழுதி வைத்த ஒரு மரண வாக்குமூலத்தின்படி, வெடிப்புரய்க்கல் வயலையும் வீட்டையும் புதுப்பறம்பில் கார்த்தியாயினிக்கும் அவளுடைய வயிற்றில் இருக்கும் சிசுவுக்கும் வாரிசுரிமையாகக் கொடுத்துச் சென்றிருந்தார்.

## 4

மலை மடுவாகும்; மடு மலையாகும். பழைய பெரிய குடும்பங்கள் எல்லாமே நசிந்துவிட்டன. முன்பு வெளியே தெரியாதிருந்த சில வீடுகள் நன்கு துலங்கிவிட்டன. அதில் ஒன்றுதான் மலஞ்சேரி. முன்பு அங்கே ஓலைக்குடிசை ஒன்று இருந்தது. இப்போது அது மரத்தால் கட்டப்பட்ட ஒரு வலுவான வீடாக மாறியிருக்கிறது. எல்லாம் ஓர் ஆண்பிள்ளை நன்றாய் ஆனதனால் ஏற்பட்ட உயர்வு. மலஞ்சேரி பாப்பியின் மகன் கோபால கிருஷ்ணனுக்கு மலேயா வில் வேலை. ஏராளமாகப் பணம் வருகிறது. பாப்பியம்மைக்குத் தங்கத்தை ஈடுவாங்கிக்கொண்டு கடன் கொடுக்கும் லேவாதேவியும் உண்டு. திருவனந்தபுரத்தில் தங்கியிருந்து படிக்கும் மகன் மணி கண்டனுடைய படிப்புச் செலவுக்குப் பணம் அனுப்பக் கொஞ்சம் நெருக்கடி வரும்போது சேன்னாட்டு குஞ்சுநாயர் மலஞ்சேரிக்குப் போவார். அவ்வாறாக வீட்டிலிருந்த தங்கமெல்லாம் பாப்பி யம்மையின் பெட்டிக்குள் இடம் மாறியது. குஞ்சுநாயர் ஓலை

முடைந்துதான் கொஞ்சம் சில்லறை பார்த்தார். போதாததற்கு குஞ்ஞுமாளு பசுவை வளர்த்து அதிலிருந்து கிடைக்கும் லாபம் உதவியது. பல சமயங்களில் அதைக்கொண்டு எதுவும் சரிப்படுத்தி விட முடியாது. அப்போதுதான் பாப்பியம்மையை நாடிப்போக நேரும். ஆனால் இனி ஈடு வைக்க ஒரு பொட்டுத் தங்கம்கூட அவருடைய கைவசம் இல்லை. தங்க ஈடு இல்லாமல் ஒரு காசும் பாப்பியம்மை யாருக்கும் தருவதில்லை. அப்படி ஒரு பழக்கம். மகன் ஒருவன் கடலின் அக்கரையில் கிடந்து கஷ்டப்பட்டுச் சம்பாதித்த காசு அல்லவா? அது வெட்டித்தனமாகப் போய்விடக் கூடாது என்ற கவலை அவளுக்கு உண்டு. ஆனாலும் குஞ்சுநாயர் வந்துகேட்கும்போது வெறும் கையுடன் திருப்பி அனுப்ப அவளால் முடியாது. காரணம் வாலிபத்தில் அவளுடைய ஒரு கள்ளக் காதலனாக இருந்தார் குஞ்சுநாயர். இந்த வயதிலும் அவள் அதை மறக்கவில்லை. கொடும் பட்டினி கிடந்த காலத்தில் எந்தச் சமயத்திலும் ஒரு உதவி என்று பெற்றது அவரைக் கொண்டுதான். குஞ்சுநாயர் குஞ்ஞுமாளு அம்மையைக் கல்யாணம் செய்து கொள்வதற்கு முன்பு அப்படி இருந்தது. அதையெல்லாம் மறப்ப தற்கான காலம் வந்துவிட்ட போதிலும் பாப்பியம்மையின் மனதில் குஞ்சுநாயருக்கு ஓர் இடமிருந்தது.

மலேயாவிலிருந்து பாப்பியம்மையின் மகன் வந்தான். அது ஊரில் ஒரு செய்தியாகப் பரவியது. மூன்று பெட்டிகள் நிறையப் பணத்துடன் கோபாலகிருஷ்ணன் வந்திருப்பதாக ஊருக்குள் பேச்சு. வந்து பார்த்தவர்களுக்கெல்லாம் கோபாலகிருஷ்ணன் பத்தும் இருபத்தைந்துமாக பணம் கொடுத்தான். பணத்திற்கு எந்தக் கஞ்சத்தனமும் இல்லை. பாப்பியம்மைக்குத் தொடர்ந்து வேலை. வருகிறவர்களுக்கெல்லாம் டீ தயாரித்துத் தரவேண்டும். இறைச்சியும் மீனுமாகச் சமைத்தற்கு ஒரு கணக்கு வழக்கில்லை. மதுக் குப்பிகள் ஒவ்வொன்றாகக் காலியாகிக் கொண்டிருந்தன. வருகின்றவர்களிடமெல்லாம் கோபாலகிருஷ்ணன் மலேயா வாழ்க்கையைப் பற்றியதான கதைகளைச் சொல்வான். கேட்டுக் கொண்டிருக்கச் சுவையான கதைகள். அவனுக்கு அங்கே ஒரு வெள்ளைக்காரத் துரையின் தோட்டத்தில் கண்காணிப்புப் பணி. மலேயாவில் தொழிலாளர்களில் பெரும்பாலோர் சைனாக் காரர்கள்தான். குஞ்சுநாயரும் கோபாலகிருஷ்ணனைப் போய்ப் பார்த்தார். மணிகண்டனைத் தன்னுடன் மலேயாவுக்குக் கூட்டிக் கொண்டுபோவதாக அவன் சொன்னான். மலேயாவுக்குப் போனால் பணம் சம்பாதிக்கலாம். ஆனால் பரம மிலேச்சத்

தனமாக ஒரு வாழ்க்கை அது என்பதாக, கோபாலகிருஷ்ணனிடம் வந்து சேர்ந்த மாற்றங்களிலிருந்து குஞ்சுநாயருக்குத் தோன்றியது. விடைபெற்றுப் போகும் நேரத்தில் சில நோட்டுகளை எடுத்து கோபாலகிருஷ்ணன் நீட்டினான். மனமில்லாவிட்டாலும் குஞ்சுநாயர் அதை வாங்கிக் கொண்டார். இப்படியெல்லாம்தான் அங்கேயான வாழ்க்கை என்று தெரிந்திருந்தால் தான் மகனை அங்கே அனுப்பி வைக்காமலே இருந்திருப்பாள் என்பதாகப் பாப்பியம்மை சொன்னாள்.

***

வட்டத்ர க்ரிகரிதான் இப்போது ஊரில் பெரிய விவசாயி. பருத்திக்காட்டு கொச்சௌசேப்பும் ஆற்றுமாலில் அந்தோணியும் அதைவிடப் பெரிய விவசாயிகள். சுருக்கமாகச் சொன்னால் ஊரில் வயலுக்கு வயல் விவசாயம் செய்வது கிறிஸ்தவர்கள்தான். அவர்களுக்குச் சொந்தமாக நிலங்கள் உண்டு; முன்பு வேறு குடும் பங்களுக்குச் சொந்தமாக இருந்த நிலங்கள். அவை தவிர, தேவஸ் தானத்திடமிருந்தும் மங்கொம்பில் ஸ்ரீனிவாசய்யாரிடமிருந்தும் குத்தகைக்கு எடுத்த நிலங்களும் உண்டு. விவசாயத் தேவைக்கு ஸ்ரீனிவாச அய்யாரிடமிருந்து அவர்கள் நெல்லைக் கடன் வாங்கிக் கொள்வதும் உண்டு. அதை முதலும் வட்டியுமாகச் சேர்த்து எல்லோரும் பெரிய தொகையைத் திருப்பிக் கொடுக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது. முதலும் வட்டியும் திரு ்பிக் கொடுக்குமாறு பட்டர் வழக்குத் தொடுத்தார். க்ரிகரியும் நண்பர்களும் பெரிய சிக்கலில் மாட்டிக் கொண்டார்கள். இனி விவசாயம் செய்ய வேண்டுமானால் அது வரையிலான கடனையெல்லாம் ஈடாக்கு வதை நிறுத்தி வைக்க அரசாங்கம் ஒரு சட்டம் கொண்டுவர வேண்டும் என்பது க்ரிகரியின் வாதம். இந்தப் பட்டருக்கு எங்கிருந்து இவ்வளவு அதிகமான நெல்லும் பணமும் சேர்ந்தன? ஸ்ரீனிவாசய்யாரின் கணக்கில்லாத சொத்தைப் பற்றி க்ரிகரி கேள்வி கேட்கத் தொடங்கினான். அவர் கைவசப்படுத்தி வைத்திருக்கும் சொத்து முழுவதும் ஊராருடையது. நிலம் குத்தகைக்கு எடுத்து விவசாயம் செய்யும் அப்பாவிகளான விவசாயிகளிடமிருந்து வட்டி வாங்கிப் பெருக்கிறது. ஸ்ரீனிவாசய்யர் கொடுத்த மனுவின்மீது சம்மன் வாங்கிய க்ரிகரி மடத்திற்குச் சென்று சாமியைச் சந்தித்தான். தடிமனான கணக்குப் புத்தகத்தைத் திறந்து வைத்துப்

பார்த்துக் கொண்டிருந்தார் ஸ்ரீனிவாசய்யர். மனுதாக்கல் செய்த வுடன் நீதிமன்றத் தீர்ப்பு வந்துவிடாது என்றும், அப்படி வந்தாலும் சொத்துக்களை ஏலம்விட அனுமதிக்க முடியாது என்றும் க்ரிகரி பயமுறுத்திக் கூச்சலிட்டான். அதைக்கேட்ட பின்னரும் ஸ்ரீனிவாசய்யாரிடம் எந்தச் சலனமும் இல்லை. எல்லாமே அதனதன் முறைப்படி தான் நடக்கும் என்பதுதான் பட்டரின் பதில். கடனாகக் கொடுத்த அசல் வேண்டாமென்று சொல்லத் தனக்கு அதிகாரம் இல்லை. அதுதான் மடத்தின் நிலைமை. அங்கே எதையும் தள்ளுபடி செய்ய முடியாது. தனக்கு அதற்கு அதிகாரம் கிடையாது என்று பட்டர் சொல்கிறார். அவர் சொல்வது வறட்டுப் பிடிவாதம் அல்ல என்று அங்கிருந்து கிளம்பும்போது க்ரிகரிக்குத் தோன்றியது. விவசாயத்திற்கும் வியாபாரத்திற்கும் தொழிலுக்குமாக மடத்தில் பணம் வினியோகிக்கப்படுகிறது. அதைத் திருப்பிக் கொடுத்துக் கணக்குவழக்கை முடித்தால்தான் மீண்டும் கடன் வழங்கப்படும். ஊரில் விவசாயம் நடக்க வேண்டுமானால் மடம் இப்படித்தான் கண்டிப்பாக இருக்க வேண்டும். மடத்தில் நூற்றாண்டுகளாக இருந்துவரும் இந்தப் பொருளாதார சாஸ்திரம் க்ரிகரிக்கு விளங்கிற்று.

விவசாயக் கடன்களைத் தள்ளுபடி செய்வதற்கான சட்டம் குறித்து சட்டசபையில் சர்ச்சை எழுந்தது. அதற்குப் பின்புலமாகச் செயற்பட்டது முழுவதும் க்ரிகரி தனியாளாகத்தான். திவான் ஜியைப் பார்த்து அன்பளிப்புச் செய்தான். கடன்காரர்களான விவசாயிகளை ஒன்றுதிரட்டி அறிக்கை ஒன்றை வெளியிட்டான். கடன் கொடுத்தவர்கள் இதை அறிந்து ஒன்று திரண்டு அரசாங்கத் திடம் அப்பீல் செய்தார்கள். அவர்களும் திவான்ஜிக்கு அன்பளிப்பு செய்தார்கள். அனுகூலமான சட்டம் வெளிவரும் வரைக்கும் விவசாய வேலைகளை நிறுத்தி வைக்க க்ரிகரி தீர்மானித்தான். கொடுக்கல் வாங்கல்கள் ஸ்தம்பித்தன. நாடு முழுக்க விவசாய வேலைகள் எதுவும் நடக்கவில்லை என்றே சொல்லலாம். தொழி லாளர்கள் கடும் பட்டினியில் விழுந்தார்கள். கடைசியில், விவசாயிகளுக்குக் கடன் சுமையிலிருந்து விடுதலை பெற ஆறுதல் தருவதான நடவடிக்கைகளை மேற்கொள்ள அரசாங்கம் நிச்ச யித்தது. சட்டத்துறையில் அது தயாராகிக் கொண்டிருந்தது. க்ரிகரி அதன் பின்னணியில் விடாமுயற்சியில் இருந்தான்.

திவான்ஜியின் அறுபதாண்டுநிறைவு விழா அண்மையில் வருகிறது. ஊருக்கு ஊர் விவசாய சங்கங்கள் திவான்ஜிக்குக் கோலாகலமான வரவேற்புகளுக்கு ஏற்பாடுகள் செய்தன.

தன்னுடைய ஊரிலும் ஒரு வரவேற்பு அளிக்க வேண்டுமென்று க்ரிகரிக்குத் தோன்றியது. திவான்ஜியை மகிழ்விக்க வேண்டிய சந்தர்ப்பம் இது. மற்ற விவசாயிகளுடன் கலந்து ஆலோசித்தான். முன்பு ஒரு காங்கிரஸ் கூட்டம் போட்டதன் எரிச்சல் திவான்ஜிக்கு இன்னும் இருக்கும். அதைப் போக்கடிக்க இந்த வரவேற்பு பயன்படும். அன்று திவான்ஜியைத் திட்டித் தீர்த்தனர். இனி இப்போது அவரைப் போற்றிப் புகழ்வதில் தப்பெதுவும் இல்லையென்று எல்லோருக்கும் அபிப்பிராயம். ஆனால் இந்தத் தீர்மானத்தை அறிந்த காங்கிரஸ்கார இளைஞர்கள் எதிர்த்தார்கள். அந்தக் கூட்டத்தில் பருத்திக்காட்டு கொச்சௌதையின் மகன் தாமஸ் இருந்தான்; வட்டத்ர க்ரிகரியின் மகன் பிலிப்பு இருந்தான்; ஆற்றுமாலில் அந்தோணியின்மகன் வர்கீ இருந்தான். அவர்களெல்லாம் காங்கிரஸ்காரர்கள். திவான்ஜியை ஊருக்கு அழைத்து வரவேற்பு கொடுத்ததால் அந்தக் கூட்டத்தில் குழப்பத்தை உண்டாக்க வேண்டுமென்பது அந்த இளைஞர்களின் தீர்மானம். ஆனால் அதை அவர்கள் வெளியே சொல்லவில்லை. தந்தைமார்கள் இழுத்துப் பிடித்து நிறுத்திக் கேள்விகேட்டபோது அதற்குப் பதில் சொல்லும் அளவுக்குக்கூட அவர்களைப் பொருட்படுத்தவில்லை. அவர்கள் என்ன செய்யப்போகிறார்கள் என்றும் சொல்லவில்லை. ஸ்ரீதரன் சொல்ல முடியாது என்று மட்டும் பதில் சொன்னான். மற்றவர்கள் வாய் திறக்கவில்லை. அவ்வாறுதான் அவர்களுடைய எதிர்ப்பு வெளிப்பட்டது. அந்த வீடுகளிலெல்லாம் அப்பாவுக்கும் மகனுக்கும் இடையே பெரிய விரிசல் விழுந்தது. அம்மாக்கள்தான் இடையில் கிடந்து திண்டாடினார்கள். திவான்ஜியை அழைத்து வரவேற்றால் அவர்கள் பெரிய குழப்பங்களை ஏற்படுத்துவார்களோ என்று க்ரிகரியும் கூட்டாளிகளும் பயந்தார்கள். திவான்ஜியை ஊருக்கு அழைப்பது என்பது வேண்டாம் என்பதாகக் கடைசியில் முடிவு செய்தார்கள். ஆனாலும் திவான்ஜியின் அறுபதாம் ஆண்டு மணிவிழாவைக் கோலாகலமாக நடத்தினார்கள். கூட்டம் அலங்கோலப்படாமல் இருக்க கனத்த போலீஸ் போடப்பட்டிருந்தது.

மாதங்கள் கழித்து கடன் கட்டுப்பாட்டுச் சட்டம் சட்டசபையில் நிறைவேறியது. விவசாயக் கடன்களைத் தவணை முறையில் திருப்பிக் கொடுத்தால் போதும் என்றிருந்தது சட்டம். நீதிமன்ற நடவடிக்கைகள் தற்போதைக்கு நிறுத்தி வைக்கப்படும். விவசாயிகளுக்குத் தற்போதைக்கு அது ஓர் ஆறுதல். ஆனால் சில குடும்பங்களில் அது சங்கடத்தை விளைவித்தது. குத்தகை

நெல்லைக் கொண்டு செலவு செய்து கொண்டிருந்த பாலத்தோள் வீட்டுக்கு வசூலாகிக் கிடைக்க வேண்டியது எதுவும் கிடைக்காத நிலைமை ஏற்பட்டது.

திருவனந்தபுரத்தில் தங்கியிருந்து படிக்கும் மணிகண்டனுக்கு அப்பா எழுதியிருந்த ஒரு கடிதம் கிடைத்தது. இவ்வளவு நீளமான ஒரு கடிதத்தை சேன்னாட்டு குஞ்சுநாயர் இதற்கு முன்பு எழுதிய தில்லை. பல நாட்களாக எழுதி எழுதி முடித்த கடிதம் அது. பல காகிதங்களில் பென்சிலால் கிறுக்கலாக எழுதப்பட்டிருந்தது. குஞ்சுநாயர் நித்தியக் கடன்களை முடித்துவிட்டுப் பகல் முழுவதும் ஓலை முடைவார். அந்த வேலை முடங்கிவிட்டால் மாதந்தோறும் மகனுக்குப் பணம் அனுப்ப முடியாமல் போய்விடும். அந்தி நேரத்தில் நாமஜபமும் இரவுச் சாப்பாடும் முடிந்தால் பத்து நாழிகை இருட்டும் வரை ராமாயணம் வாசிப்பார். அது தடைப் படுவதே இல்லை. பிறகு தான் கடிதம் எழுதும் நேரம். அப்படி அங்கே இரவுகள் எழுதி முடித்த ஒரு கடிதம்தான் அது என்பது மணிகண்டனுக்குப் புரிந்தது. எண்பது ஆண்டுகள் வாழ்ந்து முடித்த ஒருவர் தன்னுடைய பெயருக்கு எழுதிய உயிலாக இருந்தது அது. வாழ்க்கை முழுவதும் ஒவ்வொரு இலட்சியத்தை முன்வைத்து முயன்று வாழ்ந்த ஒருவருக்கு, எழுதித் தீராத அனுபவங்கள் நிகழ்வது இயல்பு. தன்னுடைய பால்யகாலம், அன்று இந்த நாடு எப்படி இருந்தது, பின்னர் அடிக்கடி நிகழ்ந்த மாற்றங்கள் ஆகிய வற்றைப் பற்றி விளக்கமாக எழுதியிருந்தார். குஞ்சுநாயர் தனது சொந்த முயற்சியினால் மட்டுமே தனக்கான வாழ்க்கையை உருவாக்கிக் கொண்டவர். நசிந்துபோன குடும்பத்தைக் கரை யேற்றிக் கொண்டு வந்தார். ஒரு மருமக்கத்தாயக் குடும்பத்தைக் காப்பாற்றி நிலைநிறுத்தினார். தனிநபர் சொத்துரிமை வந்தபோது அதெல்லாம் தகர்ந்து போயிற்று. சொந்தக் குடும்பத்திலிருந்து அவர் தூக்கி எறியப்பட்டார். மனைவியை நேசித்தார். மனைவியின் குடும்பத்தாருக்கும் அவர் ஒரு சுமைதாங்கியாக இருந்தார். மகனைப் படிக்க வைத்தார். இன்று மகனின் உயர்வு மட்டுமே அவருடைய வாழ்க்கையின் ஒரேயொரு லட்சியம். அந்தக் கடிதத்தின் ஒவ்வொரு வார்த்தையையும் மணிகண்டனின் மனம் உள்வாங்கிக் கொண்டது. அப்பா சொல்ல வேண்டியிருந்ததை யெல்லாம் அந்த நீண்ட கடிதத்தில் சொல்லி முடித்துவிட்டார் என்பதாக மகனுக்குத் தோன்றியது. அப்பாவின் காலத்திற்குப் பிறகு? வாழ்க்கை ஒரு முடிவுக்கு வரும்போதுதான் இப்படி எழுதத் தோன்றுமோ? அப்பாவின் மரணத்தை அவனால் நினைத்துக்

கூடப் பார்க்க முடியவில்லை. மணிகண்டனுக்கு உரக்கக் கத்த வேண்டும்போல் இருந்தது. இரவு நேரம். ஊருக்குப்புறப்பட வேண்டும். ஊருக்குக் கிளம்பி வரக்கூடாது என்றல்லவா அப்பா எழுதியிருக்கிறார். அங்கே திவான்ஜியின் அறுபதாண்டு விழா கொண்டாடுவது சம்பந்தமாக முதியவர்களும் இளைஞர்களும் இரண்டு கட்சிகளாகப் பிரிந்து நிற்கிறார்கள். பேச்சு கிடையாது. வம்புவழக்கு கிடையாது; ஆனால் எதுவும் எந்த நேரத்திலும் நடக்கலாம். மகன் இதில் எதிலும் அகப்பட்டுக் கொள்ளக்கூடாது என்பதுதான் அப்பாவின் ஆசை. திருவனந்தபுரத்திலும் இந்த அறுபதாம் ஆண்டுவிழாக் கொண்டாட்டம் தொடர்பான சச்சரவு தீவிரமாகிக் கொண்டிருப்பதை அப்பா அறிந்திருப்பார். ஒரு சலசலப்பு திருவனந்தபுரத்திலும் உண்டாகலாம். மகனைப் போலீஸ்பிடித்துச் செல்வதை அப்பாவால் நினைத்துப் பார்க்கக் கூட முடியாது. மகன் படித்து ஒரு வேலை தேடிக்கொள்ள வேண்டும்—அதுதான் அப்பா அம்மா இருவரின் ஆசை. இருளடர்ந்த எதிர்காலம்தான் அப்பாவுக்கு இப்போது எதிரில் தென்படுகிறது. ஒரு வாழ்க்கைக் காலம் முழுவதும் புராணங்கள் படித்தன் பலன் அந்தக் கடிதத்தின் நெடுகிலும் இருந்தது. மனதில் பதியுமாறு குஞ்சுநாயருக்கு எழுத முடிந்ததற்குக் காரணம் அதுதான். புராணங்களில் விவரிக்கப்பட்டுள்ள தர்ம அடிப்படை களும் வேரூன்றிய நம்பிக்கைகளும் ஆட்டிப்படைக்கின்றன. முன் பெல்லாம் சரியும் தவறும் பிரித்தறிய அவரால் முடிந்தது. இப்போது அதெல்லாம் தெளிவில்லை. மகனைப் பற்றிய எதிர் பார்ப்பு அந்தத் தந்தையின் மனதில் ஒரு காரிருளை உருவாக்கியிருந்தது.

மறுநாள் மணிகண்டன் பெரிதும் நிலைகுலைந்தான். மாணவர் சங்கக் கூட்டத்திற்கு விஸ்வநாதன் கூப்பிட்டும் போக வில்லை. நள்ளிரவு வரை அவன் நகரத்தின் பல இடங்களில் சுற்றி அலைந்து திரிந்தான். இரவு திரும்பி வந்து அறையில் படுத்தாலும் உறக்கம் வரவில்லை. மனம் நிறைய அப்பா எழுதி யிருந்த கடிதத்தின் வாசகங்கள். மறுநாள் காலையில், அந்த வாடகை வீட்டின் சொந்தக்காரர் அவன் மிகவும் சோர்ந்திருக்கக் கண்டு விவரம் விசாரித்தார். அவன் எதுவும் பேசவில்லை. பரிவுடன் இருந்த அந்த வீட்டுக்காரர் அவனுக்கு சூடான கஞ்சி கொடுத்தார். அன்றும் மணிகண்டன் கல்லூரிக்குச் செல்லவில்லை. சாயங்காலம் விஸ்வநாதன் அவனைப் பார்க்க ஓடிவந்தான். மணி கண்டன் அப்பா எழுதியிருந்த கடிதத்தை எடுத்து விஸ்வநாதனின்

கையில் கொடுத்தான். விஸ்வநாதனுக்கு அது முழுவதையும் படிக்க நேரமில்லை. நெருக்கடியான வாழ்க்கை அவனுடையது. மாணவர் போராட்டங்களில் அவன் ஈடுபட்டிருந்தான். மணிகண்டன் வற்புறுத்தியதனால் விஸ்வநாதன் அந்தக் கடிதத்தை அவசர அவசரமாகப் படித்தான். படித்ததை அவன் மனதில் வாங்கிக் கொள்ளவில்லை. அவனுக்கு அதில் கருத்தைச் செலுத்தும் நேர மல்ல அது. ஆனாலும் சில வாக்கியங்களை விஸ்வநாதன் பார்க்கத் தவறவில்லை. மகன் போலீசில் மாட்டிக்கொள்ளக் கூடாது என்று தந்தையின் உபதேசம்! காலத்தால் வருகின்ற மாற்றங்களை அறியாமல், அவற்றைச் சார்ந்து தன்னை ஆயத்தப்படுத்திக் கொள்ளாத ஒரு மனிதர்தான் அந்தக் கடிதத்தை எழுதியிருக்கிறார் என்பதை விஸ்வநாதன் தெரிந்துகொண்டான். அந்தக் கடிதம் மணிகண்டனைப் புரட்சிப் பாதைகளிலிருந்து பின்னடையச் செய்கிறது என்பதாக அவனுடைய மனம் கூறிற்று. அதைப் படித்து, மனமும் சரீரமும் தளர்ந்த மணிகண்டனின் முகத்தைப் பார்த்து விஸ்வநாதன் சொன்னான்; நீ ஒரு கோழை.

விஸ்வநாதன் மணிகண்டனுக்கு ஒரு பெயர் சூட்டியிருக் கிறான்—கோழை! சர்வ சராசரங்களும் அந்தப் பெயரைச் சொல்லிக் கூப்பிடுவதுபோல மணிகண்டனுக்குத் தோன்றியது. அவன் தன்னைத்தானே வெறுத்தான். அவன் தன்னையே ஒருமுறை கூப்பிட்டுக் கொண்டான்—கோழை!

கல்லூரியில் ரகளை. திவான்ஜியின் சிலையை யாரோ உடைத்து நொறுக்கிவிட்டார்கள். நாடெல்லாம் நடுங்கியது. கல்லூரிக்கு உள்ளே போலீஸ் புகுந்து லத்தி சார்ஜ் செய்தது. தெருக் களில் ஆள்நடமாட்டம் இல்லை. எல்லா இடங்களிலும் போலீஸ். விஸ்வநாதன் உள்பட தன்னுடைய எல்லா நண்பர்களும் பயங்கர நடவடிக்கைகளில் ஈடுபட்டிருக்கிறார்கள். தான் மட்டும் எல்லா வற்றிலிருந்தும் விலகி நிற்பது மணிகண்டனுக்கு அசிங்கமாகத் தோன்றியது. நான் கோழையல்லாமல் வேறென்ன? கட்சியின் பயிற்சி வகுப்புகளிலிருந்து நான் ஏராளமாகப் படித்திருக்கிறேன். அப்போதெல்லாம் அறிவில் ஒரு கிளர்ச்சி ஏற்பட்டிருந்தது; விழிப் புணர்ச்சி ஏற்பட்டிருந்தது. வாழ்க்கையைப் பற்றிய எல்லாப் பிரச் சினைகளையும் விமர்சிக்கும் பிடிப்பு ஏற்பட்டிருந்தது. அன்று கவிதை எழுதினேன்; நல்ல காரசாரமான கவிதை. இனிமேல் எனக்குக் கவிதை எழுத வராது. முடியாது. கோழை!

திவானின் சிலையை உடைத்தது விஸ்வநாதனாக இருக்கும். அவனைப் போலீஸ் தேடுகிறது. ஒருநாள் மணிகண்டன் குடியிருந்த

வீட்டுக்கும் போலீஸ் வந்தது. அவன் விஸ்வநாதனுக்கு நெருங்கிய நண்பன் என்பதைத் தெரிந்துதான் போலீஸ் வந்தது. இன்ஸ் பெக்டரின் கூர்மையான பார்வைக்கு எதிரில் நின்ற மணிகண்டன் ஆலிலைபோல நடுங்கினான். விஸ்வநாதனுடனான தொடர்பு களைப் பற்றியெல்லாம் அவன் சொல்ல நேர்ந்தது. தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காகக் கொஞ்சம் பொய்யும் சொன்னான். போலீஸ் அந்த அறை முழுவதையும் அலசியது. நல்ல வேளை யாகக் கட்சி சம்பந்தப்பட்ட புத்தகங்கள் எதுவும் அப்போது அங்கு இல்லை. பாலிட்டிக்ஸ் பாடப்புத்தகங்களைப் பார்த்தபோது நீ அரசியல்வாதியா என்று போலீஸ் கேள்வி கேட்டது. அவர் மார்க்சிம் கார்க்கியின் மதர் புத்தகத்தைக் கையில் எடுத்தபோது மணிகண்டனின் மனம் படபடத்தது. விஸ்வநாதன் அங்கே வந்தால் உடனே போலீசுக்குத் தெரிவிக்க வேண்டுமென்று கடுமையான உத்தரவு போட்டுவிட்டு இன்ஸ்பெக்டர் போய் விட்டார். அங்கிருந்த வீட்டுச் சொந்தக்காரரிடமும் அவர் சொன்னார்—விஸ்வநாதன் அங்கே வந்தாலோ அப்படி வருவதைப் போலீசுக்குத் தெரியப்படுத்தாமல் இருந்தாலோ அந்த வீடு களத்து மேடாகிவிடும். பின்னரும் பல தடவை போலீசார் அந்த வீட்டைச் சுற்றி ரோந்து வந்தார்கள். அந்த வீட்டுக்காரருக்கும் பயமாகி விட்டது. அவருக்கு மணிகண்டனை அங்கிருந்து போகச்சொல்ல மனமில்லை. ஆனால் அவருக்கு அப்படிச் செய்ய நேர்ந்தது. மணி கண்டன் பெட்டியை எடுத்துக்கொண்டு அந்த வாடகை வீட்டிலிருந்து படியிறங்கினான்.

இரண்டாவது உலக மகாயுத்தம். ஜெர்மனி போலந்தை ஆக்கிரமித்தது. ஒரு நாட்டைத் தாக்கிக் கைப்பற்ற இப்போது ஒரு நாள்கூட வேண்டாம். ஜெர்மனிக்கு எதிராக இங்கிலாந்து யுத்தத்தைப் பிரகடனப்படுத்தியது. லண்டனில் ஜெர்மனி குண்டு வீசியது. யுத்தம் நடப்பது ஐரோப்பாவில்தான் என்றாலும், இதனால் தனக்கு நல்லதோ கெட்டதோ என்ன ஆகப்போகிறதென்ற எண்ணம் க்ரிகரிக்கு. நெல்லுக்கு ஒவ்வொரு நாளும்விலை கூடிக் கொண்டிருந்தது. மேலும் எவ்வளவு ஏறுமென்று எதிர்பார்த்து விற்பதற்காக சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் அவர். ஆனால் அரசாங்கத்திடமிருந்து ஒரு வேண்டுகோள் வந்தது. விவசாயிகள் தங்களிடமுள்ள நெல் எவ்வளவு என்று அதிகாரி களுக்குத் தெரியப்படுத்த வேண்டும். ஒரு குடும்பத்தின் ஆட்களை எண்ணி அவர்களுக்காகச் செலவிட வேண்டியதையும், விவசாய வேலைகளுக்காகச் செலவிட வேண்டியதையும் கழித்துவிட்டு

மீதமுள்ள நெல்லை அரசாங்கம் எடுத்துக்கொள்ளும். மிகக் குறைந்த விலைதான் அதற்குக் கிடைக்கும். அரிசிக்கு ரேஷனிங் ஏற்பாடு செய்யப் போகிறார்கள். இதெல்லாம் க்ரிகரியின் மனக் கோட்டையைத் தகர்த்த சட்டங்கள். நெல்லை அனுமதியில்லாமல் கடத்தக்கூடாது. சட்டத்தை மீறுபவர்களின் நெல் களஞ்சியங் களைப் போலீசார் வந்து பூட்டி முத்திரையிட்டு விடுவார்கள். நாலாயிரம் மரக்கால் நெல் க்ரிகரியின் கைவசம் இருந்தது. இப்போதுள்ள அதிகவிலைக்குத் தன்னுடைய நெல்லை விற்றார். பருத்திக்காட்டு கொச்சௌதையும் அதைத்தான் செய்தார். யாருக்கும் தேவைப்படாமல் கட்டிக்கிடந்த ரப்பரையும் அவர் நல்ல விலைக்கு விற்றார். யுத்தம் நல்லதுதான் என்பது அவருடைய அபிப்பிராயம். மாதாகோயில் பாதிரியாருக்கும் இதே அபிப் பிராயம்தான் இருந்தது. அந்த வட்டாரத்தில் சத்திய விசுவாசி களுக்கெல்லாம் யுத்தத்தினால் லாபம்தான் உண்டாயிற்று. ஞாயிற்றுக்கிழமையில் மகாபலி முடிந்து நடந்த பிரசங்கத்தில் பாதிரியார் கூறினார். சத்திய விசுவாசிகளின்மீது கர்த்தர் இரக்கப் பட்டுத்தான் ஹிட்லர் என்ற தேவ தூதரை அனுப்பியிருக்கிறார்; யுத்தம் நடக்கச் செய்திருக்கிறார். பாதிரியாரின் அறியாமையைச சில கிறிஸ்தவ இளைஞர்களால் சகித்துக்கொள்ள முடியவில்லை. பருத்திக்காட்டு தாமசும் துன்பேக்களத்தில் கௌரியாரும் மற்றவர்களும் மிகவும் சினந்து பாதிரியாரிடம் இதைப்பற்றிப் பேசினார்கள். மக்கள் துரோகியும் பாசிஸ்ட்டுமான பாதிரியாரைச் சிறையில் அடைக்க வேண்டுமென்று கௌரியார் கூப்பாடு போட்டான். பாதிரியாருக்கு அதனுடைய அர்த்தம் எதுவும் விளங்கவில்லை. ஆனால் தான் சொன்னது பிரிட்டிஷ் அரசாங்கத் திற்கு எதிரானது என்றும், சொன்னதெல்லாம் முட்டாள் தன மானது என்றும் பின்னர்தான் அவருக்குப் புரிந்தது. சத்திய விசுவாசிகளுக்கு ஐந்தாறு காசு கிடைப்பதைப் பார்த்த மகிழ்ச்சியில் ஹிட்லரைப் போற்றிப் புகழ்ந்துவிட்டதாக, மறைமாவட்டத்தில் வயது முதிர்ந்த கிறிஸ்தவர்களைக் கூப்பிட்டனுப்பி, வெளிப் படையாக அழுதபடி பாதிரியார் மன்னிப்புக் கேட்டார். அவர்கள் பாதிரியாரைத் தேற்றினார்கள். இளைஞர்கள் ஒரு பாதிரியாரை நிந்தித்தது பெரியதொரு பாவமாக அவர்களுக்குத் தோன்றியது.

அந்தப் பிரச்சினை அத்துடன் முடிவடையவில்லை. சுரேந் திரனும் கௌரியாரும் தாமசும் ஒன்றாகச் சேர்ந்து ஒரு பொதுக் கூட்டத்துக்கான நோட்டீஸ் அடித்தார்கள்— பாசிஸ்ட் எதிர்ப்புப் பொதுக்கூட்டம். அதைத் தடுக்கப் போலீசின் உதவியை நாடி

க்ரிகரி தன்னுடைய உறவுக்காரர்களில் ஒருவரான கலெக்டரை அணுகினார். அன்பளிப்புடன் சென்ற க்ரிகரி பயந்துபோய்த் திரும்பி வந்தார். அந்தக் கூட்டத்தைத் தடுப்பதற்கு மனதால் நினைப்பதுகூட ராஜதுரோகம்; பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு எதிரான நடவடிக்கை அது; ஏதாவது செய்தால் சிறை செல்ல வேண்டியிருக்கும்—கலெக்டர் எச்சரிக்கை செய்து அனுப்பி வைத்தார்.

ஊரில் பல வீடுகளிலிருந்து இளைஞர்கள் பட்டாளத்தில் சேர்ந்தார்கள். பிரிட்டிஷ் அரசாங்கம் பட்டாளத்திற்கு ஆள் எடுத்து அழைத்துச் சென்றது. அவர்கள் எந்த நாட்டுக்குப் போகிறார்கள் என்பதுகூட வீட்டிலுள்ளவர்களுக்குத் தெரியாது. மாதாமாதம் அவர்களுடைய கடிதமும் மணியார்டரும் வரும். அந்த ஊரில் அறுநூறு குடும்பங்களாவது இருக்கும்—தபால்காரரின் வருகைக்காக அவர்கள் காத்திருப்பார்கள். ஆனால் அப்படிக் காத்திருக்கும்போது சிலசமயங்களில் தந்திதான் வரும்—அவர்களில் ஒருவன் இறந்த செய்தியைத் தாங்கிக்கொண்டு. ஒரு வீட்டில் மரணச் செய்தி வந்து அதன் அழுகை உச்சத்தில் எழும்போது அடுத்த வீட்டில் ஓர் இளைஞன் பட்டாளத்தில் சேரப் போவ தற்கான அவசரமாக இருக்கும். உலகத்தின் பல பகுதிகளில் யுத்தம் நடந்துகொண்டிருந்தது. மணியார்டரில் கையொப்பம் இடும்போது தாய்மார்களின் கை நடுங்கும். கடிதம் வந்திருந்தால் அதை வாசித்துக் காண்பிக்கும் வேலையையும் தபால்காரர்தான் செய்ய வேண்டும். தந்தியாக இருந்தால் தபால்காரர் அதை அங்கே கொடுத்துவிட்டு சட்டென்று மாயமாகிவிடுவார். தந்தியிலிருக்கும் மரணச் செய்தி தெரியும்போது அந்த வீட்டில் உருவாகும் காட்சி களுக்குச் சாட்சியாக இருக்கும் மனவலிமை அவருக்குக் கிடையாது.

தனிநபர் சொத்துரிமைச் சட்டத்தினால் துண்டு துண்டான கோன்னோத்து வளாகத்தில் ஆறு ஓலைக் குடிசைகள் இருக் கின்றன. அவற்றில் ஒன்றில் கௌரிக் குஞ்ஞும்மை குடியிருக்கிறாள். அவளுடைய பிள்ளைகள் வாசுதேவனும் கிருஷ்ணனும் பட்டா ளத்தில் இருக்கிறார்கள். எல்லா மாதமும் இருவருடைய அலாட் மென்ட்டுகளும் வந்து கொண்டிருக்கின்றன. வாரத்தில் திங்களும் வியாழனும் தபால்காரர் அந்த வழியே வருவார். அந்த நாட்களில் அவருடைய மதியச் சாப்பாடும் ஓய்வும் கௌரிக் குஞ்ஞும்மையின் வீட்டில். தபால்காரருக்கு மனைவி இல்லை; பிள்ளைகளும் இல்லை. கௌரிக் குஞ்ஞும்மை அவரை ஒரு கணவரைப்போல

உபசரிப்பாள். ஊரில் எங்கேயும் அரிசி இல்லையென்றாலும் எங்கிருந்தாவது என்னவிலை கொடுத்தாவது அரிசி வாங்கித் தபால் காரருக்கு அவள் சாப்பாடு போடுவாள். விருப்பமான கறிகளும் செய்து அவருடைய வருகையை எதிர்பார்த்துக் காத்திருப்பாள். குளிப்பதற்குத் தண்ணீர் விளாவிக் கொடுப்பாள். பயபக்தியுடன் கௌரிக்குஞ்ஞம்மை தபால்காரரை உபசரிப்பாள். தபால்காரர் நல்லவர். இருதயம் உள்ளவர். கௌரிக்குஞ்ஞம்மை மட்டுமல்ல, பட்டாளத்திற்குப் போயிருக்கும் மகனின், சகோதரரின், கணவனின் கடிதமும் மணியார்டரும் கொண்டுவரும் தபால்காரரை எல்லோரும் விரும்பினார்கள். ஆனால் தந்தி கொண்டுவரும் தபால் காரரின் உருவத்தை எந்தத் தாயும் எந்த மனைவியும் மறப்பதில்லை. அந்தக் கறுத்த நிமிடத்துடன் பங்கெடுப்பது என்பது தபால் காரருக்கும் கஷ்டம்தான்.

யுத்தம் படர்ந்து பரவியது. காட்டுத்தீ போன்று அது உலகம் முழுவதும் படர்ந்து பற்றியது. அந்த அக்னிகுண்டத்தில் ஆட்கள் ஈசல்களைப் போலப் பறந்து வந்து விழுந்தார்கள். ஒவ்வொரு நாளும் வருகிற கடிதங்களையும் மணியார்டர்களையும் தபால் காரர் முறைப்படி கொடுத்துவிடுவார். தந்தியும் கொண்டு வந்த நாட்களுக்குக் குறைவில்லை. எங்கோ நடந்தகொண்டிருந்த யுத்தத்தின் பயமுறுத்தல் அவருடைய பையில் தேங்கிக் கிடந்தது. யுத்தத்தினால் விளைந்த சம்பாத்தியங்களும் அப்படித்தான். ஒருநாள் கோன்னோத்து கௌரிக்குஞ்ஞம்மை பரிமாறிய சாப்பாட்டில் அவருக்கு ருசி தெரியவில்லை. அவளுடைய நட்பு நிறைந்த கேள்விகள் எதற்கும் அவர் பதில் சொல்லவில்லை. அன்று இரவிலும் தபால்காரர் மிகவும் துக்கத்தில் ஆழ்ந்திருந்தார். கௌரிக் குஞ்ஞம்மையின் மனம் எரிச்சலில் எரியத் தொடங்கியது. தபால்காரர் எதுவும் பேசவில்லை.

கௌரிக்குஞ்ஞம்மையின் மகன் வாசுதேவனும் சீரட்ட கோபாலனும் ஒன்றாகத்தான் முன்பு பட்டாளத்தில் சேரப் போனார்கள். அன்று வாசுதேவனை மட்டுமே எடுத்துக் கொண் டார்கள். கோபாலன் திரும்பி வந்துவிட்டான். ஆனால் இன்றைக்கு அவன் பணக்காரனாகிவிட்டான். அவனுக்கு நெல்லை அவித்து அரிசியாக்கிவிற்கும் வியாபாரம். யுத்தகாலம் என்றதால் நெல்லையும் அரிசியையும் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு எடுத்துச் செல்லத் தடையுத்தரவு இருந்தது. ஆனால் கோபாலன் ரகசியமாகப் பெரிய அளவில் நெல் வாங்குவதும், அரிசியாக்கி விற்பனை செய்வதும் நிகழ்ந்தன. அதற்காகப் போலீஸ்காரர்களுக்கு

ஒவ்வொரு மாதமும் அவன் ஒரு தொகையைக் கொடுக்கவும் செய்தான். என்னவானாலும் சீரட்ட கோபாலக்கைமள் இன் றைக்குப் பணக்காரன். இனி சீரட்டக் குடும்பம் மேன்மையடையும். நெடுங்காலத்திற்கு முன்பு புறக்களத்தில் பீருகண்ணு முதலாளி நாட்டாண்மை செய்த சீரட்டப்பண்ணை வீட்டை மீட்டெடுக்கத் தயாராகும் முயற்சியில்தான் இப்போது அவன் இருந்தான். இப்போது அது பீருகண்ணின் சந்ததியான அப்துல் ரசாக்கின் கைவசத்தில் இருந்தது. பழைய மரபின் அமைப்பில் கருங்கல்படி மேவிய அடித்தளமும் நாகபூஜைத் தளங்களும் இப்போதும் உண்டு. அந்தப் பண்ணை வீட்டிற்கு வந்து தேங்காய் பறித்துக்கொண்டு செல்வதன்றி, பீருகண்ணின் சந்ததிகளில் எவரும் அந்த வளா கத்தில் எதையும் நாசம் செய்யவில்லை. அதைத் திருப்பி வாங்கு வதற்கான பணபலம் இன்று கோபாலக்கைமளிடத்தில் உண்டு. ரசாக் அதைத் திருப்பிக் கொடுக்கவும் தயார்தான். ஆனால் கோபாலக்கைமள் எவ்வளவுதான் விலைகொடுத்து சீரட்டக் குடும்பமனையைத் திருப்பி வாங்கினாலும் பழைய சீரட்டக் குடும்பம் ஆகுமா? காரணம், அங்கே இனி குடியிருக்கப்போவது அவனும் அவனுடைய மனைவியும் பிள்ளைகளும் மட்டும்தான். சீரட்ட குஞ்ஞும்மைகள் இல்லாமல் எப்படி சீரட்ட குடும்பமாகும்? என்னவானாலும், யுத்தம் வந்ததனால் கோபாலன் பணக்காரனாகி விட்டான். இதைப்போன்று வேறு பலரும் உண்டு.

கோட்டயத்தில் ஒரு ஹோட்டலில் எச்சில் இலை எடுக்கும் வேலையிலிருந்தான் பறயத்ற பாச்சு. அவனும் இப்போது நல்ல பணக்காரனாகிவிட்டான். பணக்காரன் ஆவதற்கு அதிக காலம் ஆகவில்லை. யுத்தத்திற்குத் தேவையான மரச்சாமான்கள் செய்து கொடுத்துதான் அவன் திடீரென்று பணக்காரன் ஆனான். சீரட்ட கோபாலக்கைமளும் பறயத்தற பாச்சுவும் அவர்களுடைய குடும் பத்தவர்கள் எல்லோருமே யுத்தம் தொடர்ந்து நடந்துகொண்டே இருக்க வேண்டுமென்றுதான் தெய்வத்திடம் பிரார்த்தித்துக் கொண்டார்கள். பட்டாளத்தில் சேர்ந்த பிள்ளைகளின் அம்மாக் களோ யுத்தம் முடிந்துவிட வேண்டுமென்று இரவு பகலாக தெய்வத்தை அழைத்துப் பிரார்த்தித்துக் கொண்டார்கள். வாசுதேவன் அம்மாவிடம் கேட்டுக்கொண்டுதான் பட்டாளத்தில் சேர்ந்தான். இளைய மகன் கிருஷ்ணனோ அம்மாவிடம் சொல்லா மல் கொள்ளாமல்தான் போனான். இருவருடைய மணியார்டர் களும் தவறாமல் வருகின்றன. ஆனால் சில மாதங்களாகத் தபால்காரரிடம் ஒருமாற்றத்தை கௌரிக்குஞ்ஞும்மை காண்கிறாள்.

அவர் திருப்தியாகச் சாப்பிடுவதுகூட இல்லை. இந்த இயலாமைக்கு என்ன காரணம் என்று கேட்டபோது, ஒன்றுமில்லை என்று மட்டுமே பதில். பிள்ளைகளைப் பற்றிய அந்தத் தாயின் விசாரிப்பு களுக்கும் அவரிடமிருந்து பதில் கிடையாது. ஒருநாள் தோல் பையைத் தோளில் தொங்கவிட்டுக்கொண்டு, பெரிய குடையையும் எடுத்துக்கொண்டு, காலை வெளுக்கும் முன்பாகவே தபால்காரர் படியிறங்கினார். அப்படிப் போகிறபோக்கில் அவர் அந்த வீட்டை ஒருமுறை திரும்பிப் பார்த்தார். அது வழக்கம்போன்றதல்ல. கௌரிக்குஞ்ஞும்மையின் மனம் புழுவைப்போலத் துடித்தது. அடுத்த வியாழக்கிழமைதான் இனி அவர் வரும் நாள். அன்று அவருக்கு விருப்பமான சாப்பாடு தயாரித்து அவள் அவருக்காகக் காத்திருந்தாள். அவர் வரவில்லை. அடுத்த திங்கட்கிழமையும் வரவில்லை. தபால்காரர் வேலையை ராஜினாமா செய்துவிட்டு ஊரைவிட்டுப் போய்விட்டார் என்பதை அவள் பின்னர்தான் தெரிந்துகொண்டாள். எங்கே போனார் என்று யாருக்கும் தெரிய வில்லை. ஒன்றரை வருடத்திற்கு முன்பு வாசுதேவனும், ஒரு வருடத்திற்கு முன்பு கிருஷ்ணனும் இறந்த விவரம் தெரிவித்து கௌரிக்குஞ்ஞும்மைக்கு ஒரு கடிதம் கிடைத்தது. தபால்காரர் அனுப்பிவைத்த கடிதம் அது.

***

ஊரில் நெல்லும் அரிசியும் கிடைக்கவே இல்லை. பெரிய விவசாயி களின் கிட்டங்கிகளில் நெல் இருந்தது. அதை அதிக விலைக்கு இரவு நேரங்களில் விற்றார்கள். நெல் விளைவிக்க வயல்களில் வேலை செய்யும் பறையருக்கும் புலையருக்கும் கூலியைப் பண மாகக் கொடுத்தார்கள். நூற்றாண்டுகளாக நெல்லைக் கூலியாகக் கொடுத்துக் கொண்டிருந்த வழக்கம் நின்றது. விவசாயத் தொழிலாளர் யூனியன் சில போராட்ட வழிகளை மேற்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. கூலியில் பாதியாவது நெல்லாகக் கிடைக்க வேண்டும். தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்யாமல் இது நடக்காது என்று கட்சி சொன்னது. பாசிஸ்ட்டை எதிர்க்கும் யுத்தத்திற்கு உதவி செய்யத் தொழிலாளர்கள் ஒன்று சேரவேண்டும். அப்படியானால் எப்படி வாரத்திற்கு ஒரு நாளாவது தொழிலாளர்கள் அரிசி பொங்கிச் சோறு சாப்பிடுவது என்பது சுரேந்திரனின் கேள்வி விவசாய முதலாளிகளின் கிட்டங்கி

களைத் திறக்க வேண்டுமானால் போராட்டம்தான் ஒரே வழி. போராட்டம் நடத்த முடியாது என்ற கட்சியின் தீர்மானம் சுரேந்திரனுக்குப் புரியவில்லை. யூனியனைக் கலக்காமல் வேலை நிறுத்தம் செய்வதென்று தொழிலாளர்கள் முனைந்துவிட்டார்கள். தர்மசங்கடமாகிவிட்டது. ஒருவேளை கட்சியை ஒதுக்கி வைக்க நேரும், அல்லது யூனியன் பலவீனமாகும். தங்களைப் பட்டினி போட்டுவிட்டு முதலாளிமார்கள் யுத்தத்தின் பெயரால் கொள்ளை லாபம் அடிப்பதைப் புரிந்துகொள்ளாத நிலைமை தொழிலாளர்களுக்கு ஏற்பட்டது. முதலாளிகளைச் சார்ந்து இருப்பதா, அல்லது கட்சி சொல்வதை அனுசரித்து நடப்பதா? தான் போராட்டத்திற்குத் தலைமை வகித்தால் கட்சியிலிருந்து வெளியேற்றப்படுவேன் என்பதாக சுரேந்திரன் ஒரு தொழிலாளர் கூட்டத்தில் கூறினான். அப்போது சோதருடைய மகள் பாப்பாவின் குரல் உயர்ந்தது; தோழர் எங்கே இருக்கிறாரோ அங்கே நாங்களும் இருப்போம்.

சுரேந்திரனிடமிருந்து கட்சி விளக்கம் கேட்டது. குற்றச்சாட்டுகள் சில இருந்தன. ஒழுக்கச் சார்பான பழக்கவழக்கங்களுக்கு எதிரான நடவடிக்கைகளே அவற்றுள் முக்கியமானவை. தெளிவுபடத் தெரிந்த மூன்று நான்கு குற்றச்சாட்டுகள் உண்டு. ஒன்று, பாப்பாவின் கணவன் குட்டப்பன் கொடுத்த புகாரின் அடிப்படையிலானது. பாப்பாவை சுரேந்திரன் மனைவியாக வைத்திருந்தான்; குட்டப்பன் கூப்பிட்டும் அவனுடன் வரவில்லை. சின்ன வயது முதலே பாப்பாவுடன் சுரேந்திரனுக்கு நெருக்கம் உண்டு என்பது உண்மைதான். ஆனால், பாப்பா சொன்னாள், கட்சி ஆட்கள் கேட்டால், அந்தக் குற்றச்சாட்டைப் பொருட்படுத்த மாட்டாளாம். குட்டப்பனைப் பிடிக்காததால்தான் அவனுடன் போகவில்லை என்பதாக அவள் திட்டவட்டமாகக் கூறிவிட்டாள். அடுத்து, கண்ணனின் மகள் நீலியின் குழந்தை சுரேந்திரனின் குழந்தை என்ற விஷயத்தை எவராலும் புறக்கணிக்க முடியவில்லை. இப்படி ஊரிலுள்ள இளவயதுப் பெண்களுடனெல்லாம் சுரேந்திரன் தவறான தொடர்பு வைத்திருக்கிறான் என்பதுதான் முதல் குற்றச்சாட்டு. அந்தக் குற்றத்தை ஒப்புக் கொள்ள அவன் தயார்தான். வர்க்கமற்றுப்போகச் செய்தவன் ஒரு பகுதியாக அதுவும் சேருமென்று அவனுக்குத் தோன்றிவிட்டது. இரண்டாவது, கட்சியின் கொள்கைக்கு விரோதமாக வேலைநிறுத்தப் போராட்டம் நடத்தினான். அந்தப் போராட்டத்தின்மூலம் தொழிலாளர்களுக்குப் பாதிக்கூலி நெல்லாகக் கிடைத்தது என்ற போதிலும், வேலை நிறுத்தத்திற்கு ஏற்பாடு செய்தது கொள்கை

அடிப்படையில் சரியில்லை என்பது கட்சியின் நிலைப்பாடு. மூன்றாவது குற்றச்சாட்டு மிகவும் முக்கியமானது. தொழிலாளர்களிடையே கட்சியுடனான பிடிப்பை வளர்க்கவில்லை. அவர்களிடையே சுரேந்திரன் என்ற தனிநபர் ஆதிக்கத்தை ஏற்படுத்திக் கொண்டான். சுரேந்திரனால் இந்தக் குற்றச்சாட்டைச் சிறிதளவும் புரிந்துகொள்ள முடியவில்லை. தான் அறிய கட்சிக்கு எதிராக எதுவும் செய்யவில்லை என்று அவன் நம்பினான். கட்சியின் மாவட்டச் செயலாளர் இந்தக் குற்றச்சாட்டுகளை விளக்கியும் எந்தக் குற்றமும்தான் செய்ததாக சுரேந்திரனுக்குத் தோன்றவில்லை. பாப்பாவும் அதைத்தான் சொன்னாள். கட்சியை விடத் தொழிலாளர்களுக்கு அதிக உதவியாக இருந்தது சுரேந்திரன் தான். அவன் எப்போதும் அவர்களுடன் இருந்தான். அவர்களில் ஒருத்தியின் பிரசவத்திற்கு மருத்துவச்சியைக் கூட்டிக்கொண்டு வர வேண்டுமானாலும், நோய்நொடி வந்தால் டாக்டரைக் கூட்டிக் கொண்டு வர வேண்டுமானாலும் ஒரு சச்சரவு ஏற்பட்டால் மத்தியஸ்தம் செய்ய வேண்டியிருந்தாலும், எல்லா இடத்திலும் எல்லாவற்றுக்கும் அவர்களுக்கு ஒரு துணையாக அவன் இருந்தான். அது எப்படிக் குற்றமாகும்? ஆனால் சுரேந்திரன் இல்லையென்றால் கட்சி இல்லை என்ற நிலையை உண்டாக்கியதைக் கட்சியினால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை.

'வெள்ளையனே வெளியேறு' சுதந்திரப் போராட்டத்தில் இவ்வளவு தீவிரமான எழுச்சியை அதற்கு முன் கேள்விப்பட்டதில்லை. பிரிட்டிஷாரை வெளியேறச் சொல்லிப் போராட்டம். அப்படி அவர்களை வெளியேற்ற இந்தியாவுக்கு எண்ணம் பிறந்து விட்டது. காந்திஜிதான் அதைச் சொன்னார்; அல்ல, இந்தியாவின் ஆத்மா. பாரத நாடு பிடரி சிலிர்த்தெழுந்தது. முன்பு நிகழ்ந்திராத வகையில் சுதந்திரப்போராட்டம் எழுச்சி பெற்றது. இது தீர்மானிக்கப்பட்ட இலக்கை நோக்கியதான கடைசி யுத்தமென்று சுரேந்திரனுக்குத் தோன்றியது. இந்தப் பெரிய போராட்டத்தில் பங்கெடுத்தல் கூடாதென்று கட்சி கூறுகிறது. எது சரியென்று நிர்ணயிக்க முடியவில்லை. நாட்டின் பல பகுதிகளில் போராட்டம் வன்முறையாக மாறியது. கௌரியாரும் தாமசும் கைதானார்கள். தன்னால் மட்டும் எதுவும் செய்ய முடியவில்லை. வெள்ளையனே வெளியேறு இயக்கத்திலிருந்து கட்சி விலகி நிற்பதில் சுரேந்திரன் நிலைகுலைந்தான். ஏதாவது செய்ய வேண்டும். ஆனால் அதேசமயம் கட்சியை மீறவும் கூடாது. வயல் வரப்புகளினூடே அவன் அலைந்து திரிந்தான். ஒரு வெறிபிடித்த நாயைப்போல.

பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு எதிராக நாடெங்கிலும் நடக்கும் வன்முறை நடவடிக்கைகளில் தானும் பங்குபெற வேண்டும்.

பதினைந்தாயிரம் மரக்கால் விவசாயம் நடக்கும் ஒரு வயல் வெளியில் மடைநீர் உடைப்பெடுத்துப் பாய்ந்தது. நெற்கதிர்கள் காற்றிலாடும் பருவத்தில் இருந்தன. பருத்திக்காடனும் வட்டத்ரவும் ஒன்றுசேர்ந்து பங்கு விவசாயம் செய்யும் வயல்வெளி அது. அங்கே விளையும் நெல் முழுவதும் போர்க்களத் தேவைக்காக என்று சொல்லிக் கறுப்புச் சந்தையில் விற்பவர்கள் அதன் உடைமை யாளர்கள். அதில் விளைந்ததில் ஒருபடி நெல்கூட அங்கே வேலை பார்க்கும் தொழிலாளர்களுக்குக் கூலியாக கிடைக்கவில்லை. அதனால் வாய்ப்பு கிடைத்தால் மடையை உடைத்து வெள்ளம் புகச் செய்தாவது அந்த விவசாயத்தை அழித்தொழிக்கும் ஆவேசம் பாப்பாவுக்கு இருந்தது. சுரேந்திரன் அதைச் செய்தான். ஒரு ராத்திரி முழுதும் இடுப்பொடிய வேலை செய்து அந்தக் குளத்துமேட்டில் ஒரு விரிசல் உண்டாக்க முனைந்தான். அவ்வளவு வலுவான கரைப்பகுதி அது. அந்த வேலையில் ஆவேசத்துடன் இறங்கினான். அன்று அதை முடித்துவிட்டான் என்றால் போராட்டத்தில் அவனுடைய பங்கு முடிந்துவிடும். கடப்பாரை வேகவேகமாக விழுந்தது. முதலில் ஒரு மெல்லிய கீற்றுப்போலத் தண்ணீர் பாயத் தொடங்கியது. விரிசல் படிப்படியாகப் பெரிதாயிற்று. அவன் அங்கிருந்து ஓடினான். கொஞ்ச தூரம் ஓடிய பிறகு பின்னால் வெள்ளப் பாய்ச்சலின் இரைச்சல் கேட்டது. குளக்கரை தகர்ந்து வயல்வெளி வெள்ளத்தில் மூழ்கியது. அவனுக்கு நிம்மதி ஏற்பட்டது. ஏதோசெய்து முடித்த ஆவேசம். சிறை சென்றாலும் பரவாயில்லை. அவன் சோதருடைய குடிசைக்கு வந்து பாப்பா வைக் குரல் கொடுத்து எழுப்பிப் பாப்பாவிடம் மட்டும் இந்த விவரத்தைச் சொன்னான். சட்டென்று வந்தது பாப்பாவின் பதில்! நல்லதாச்சி அந்தப் போக்கிரிங்களோட சொத்து அப்படித்தான் நாசமாகப் போகணும். அடுத்து வந்த நாட்களில் போலீஸ் பலரைக் கைது செய்தது. சுரேந்திரனைப்போலீஸ் சந்தேகப்படவே இல்லை.

***

சேன்னாட்டு குஞ்சுநாயர் கிட்டத்தட்ட ஒரு நூற்றாண்டுக்காலம் வாழ்ந்தார். அது ஒரு சாதாரண காலகட்டமாக இருக்கவில்லை. ஏராளமான மாற்றங்களை அவர் கண்டார். தீண்டத்தகாதவர்

களுக்கு ஆலயப்பிரவேசம் நடந்தது; அவர்களுக்கு மற்றவர்களோடு சேர்ந்து படிக்கக் கல்விக்கூடங்களில் இடம் கிடைத்தது; ஜாதி வேற்றுமைகள் தகர்ந்தன. பிராமணபக்தி இல்லாமற் போயிற்று. பிராமணத்துவமே நசித்துப் போயிற்று. குஞ்சுநாயர் எந்தக் கோயிலுக்கும் போவதில்லை. இளமைக்காலத்தில் செல்வச் செருக்கான குடும்பங்களைப் பார்த்திருக்கிறார். அவை தகர்ந்து கொண்டிருப்பதையும் பார்க்கிறார். பிறந்து வளர்ந்த சமூகச் சூழல் தலைகீழாகப் புரண்டுவிட்டது. விவசாய முறைகளில் மாற்றம் வந்து விட்டது. சொத்துக்களை கைமாற்றிக்கொள்ளும் முறைகளிலும் மாற்றங்கள் வந்துவிட்டன. புராணங்களைப் படித்து இதுவரைதான் புரிந்து கொண்டிருந்த தர்ம நீதிகளும் வாழ்க்கை அடிப்படைகளும் ஆக எல்லாமே மாறிவிட்டன. முடியாட்சிக்கு எதிரான போராட்டம் பயங்கரச் சூழ்நிலை கொண்டிருக்கிறது. இனியுள்ள காலம் எப்படி எப்படி இருக்கும் என்பதைப் பற்றிக் குஞ்சுநாயருக்கு எந்தவித எண்ணமும் தோன்றவில்லை. ஆனாலும் மகனுடைய தலைமுறை எப்படி வாழவேண்டும் என்பதைப் பற்றித்தான் அப்பா அந்த நீண்ட கடிதத்தில் பிரதிபலித்திருந்தார். அதை எழுதி மகனுக்கு அனுப்பி வைத்தபோது செய்ய வேண்டியதெல்லாம் செய்து முடித்தாயிற்று என்று தோன்றியது. உடம்பு தளர்ந்து விட்டது. குஞ்சுநாயர் படுக்கையில் விழுந்தார். மரணப் படுக்கை யின் அருகிலிருந்து அடுத்த வீட்டு கோபாலன்நாயர் பாகவதம் வாசித்தார். வாசிக்கப்பட்ட பகுதியெல்லாம் குஞ்சுநாயருக்கு மனப் பாடம். ஏகாதசிஸ்கந்தம் வரைதான் வாசிக்க வேண்டியிருக்கும் என்று அவரே தன்னுடைய மரண சமயத்தில் சுட்டிக்காட்டவும் செய்தார். ஐந்து நாட்கள் படுத்த படுக்கையாய்க் கிடந்த குஞ்சு நாயரின் கட்டிலின் அருகில் கண்ணீர் வடித்துக்கொண்டு குஞ்ஞுமாளுஅம்மை அப்படியே உட்கார்ந்துவிட்டாள். அந்தப் பதிவிரதை ஒன்றை நிச்சயித்து உறுதியாக இருந்தாள். கணவன் இல்லாமல் அவளுக்கு ஒன்றுடன் ஒன்று ஒன்றியவை. யாரெல்லாம் பகவானுக்கு நெருக்கம்என்று கணக்கிட்டுக் கூறும் பகுதி வாசிக்கப் பட்டுக் கொண்டிருக்க, அதைக்கேட்டுக் கொண்டிருந்த குஞ்சு நாயரின் சுவாசம் நின்றது. குஞ்சுநாயர் இறந்துவிட்டார்; ஆனாலும் குஞ்ஞுமாளு அம்மை உயிருடன் இருக்கிறாள். அப்படி நடக்கக் கூடாது. கீழே விபூதியும் தர்ப்பையும் விரித்து குஞ்சுநாயரை எடுத்துப் படுக்க வைக்க எண்ணியபோது குஞ்ஞுமாளுஅம்மை தடுத்தாள். முடியாது; தான் வாழ்ந்துகொண்டிருக்கும்போது அவர் இறந்திருக்கமாட்டார் என்று அவள் சொன்னாள். சிறிது நேரத்தில்

அவள் உட்கார்ந்திருந்த நிலையிலிருந்து சரிந்து விழுந்தாள்; சுவாசம் நின்றது. குஞ்நாயர் தனியே போய்விட்டு, கொஞ்சம் கழித்துத் திரும்பி வந்து மனைவியையும் அழைத்துக்கொண்டுபோனதுபோல இருந்தது அவளுடைய மரணம்.

கோயிற்புரத்து மனையிடத்தின் தென்கிழக்கு மூலையில் அடுத்தடுத்து இரண்டு சிதைகள் எரிந்தன. மணிகண்டன் இருவருடைய ஈமக்கிரியைகளையும் செய்து முடித்தான். அப்பா இறப்பார் என்பது அவனுக்குத் தெரிந்திருந்தது. அந்தக் கடிதத்தில் அது வெளிப்பட்டது. ஆனால் அம்மா இறப்பாள் என்று சிறிதும் எதிர்பார்க்கவில்லை. அவள் தன் விருப்பப்படி இறந்திருக்கிறாள். கணவனைப் பிரிந்திருக்க முடியாது என்பதால் அந்தத் தாய் மகனை விட்டுவிட்டுப் போய்விட்டாள். அப்படி நினைத்த மாத்தி ரத்தில் யாருக்காவது சாக முடியுமா? பதில் கிடையாது. குஞ்ஞுமாளுஅம்மை விஷயத்துடன் குஞ்சுநாயரின் கட்டில் அருகில் காத்திருந்தாள் என்பதாக ஊரில் பேச்சு பரவியது. விஷம் குடித்ததைப் பார்த்தவர் இல்லை. என்னவானாலும் அவள் மரணத்திலும் கணவனைப் பின்தொடர்ந்தாள்.

மணிகண்டன் அடிக்கடி அப்பாவின் கடிதத்தை எடுத்துப் படிப்பான். அது அவனுக்கு மனப்பாடம் ஆகிவிட்டது. அவ னுடைய மனதை அடிக்கடி அது தளரச் செய்து கொண்டிருந்தது.

திவான்ஜியின் சிலையை உடைத்த வழக்கில் அகப்பட்டுச் சிறையிலிருந்த விஸ்வநாதன் தண்டனை முடிந்து வெளிவந்த பின்னர் மணிகண்டனை வந்து பார்த்தான். ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டபோது இருவருடைய கண்களும் பனித்தன. அப்பாவும் அம்மாவும் ஒன்றாக இறந்த அந்தக் காட்சியை மணிகண்டன் விவரித்தான். விஸ்வநாதனுக்கு அதை நம்ப முடிய வில்லை. திரும்பி மணிகண்டன் கல்லூரிக்குப் போகத் தயாராக இல்லை என்றிருந்தபோது, வாழ்க்கையை நாசமாக்கிக் கொள்ளக் கூடாது என்று விஸ்வநாதன் அவனுக்கு உபதேசித்தான். குஞ்சுநாயர் அனுப்பிய கடிதம் மணிகண்டனைக் கோழையாக்கி விட்டது. பெற்றோர்கள் மீதிருந்த பாசம் ஒரு மயக்க மருந்து போன்று அந்த இளைஞனை பாதித்திருப்பதைக் கண்டு விஸ்வநாதன் கோபித்துவிட்டுத் திரும்பினான்.

சுதந்திரப் போராட்டத்திற்காக விஸ்வநாதன் தன்னுடைய வாழ்க்கையை ஒதுக்கி வைத்திருக்கிறான். சுதந்திரத்திற்குப் பிறகும் போராட்டம் இருக்கும். இந்த நாடு எப்படி இருக்க வேண்டுமென்று அவன் நிச்சயித்திருக்கிறான். ஒரு புது யுகத்தை உருவாக்குவதற்காக

அந்தப் போராட்டத்தில் பங்கெடுத்துக் கொள்ளும் ஆர்வம் மணிகண்டனுக்கும் உண்டு. ஆனால் அவனை யாரோ தடுக் கிறார்கள். கோடானு கோடிப்பேர் அடங்கிய ஒரு பெரும்படை போர்க்களத்தை நோக்கிச் செல்வதாக அவன் கனவு காண்பான் அந்த மாபெரும் படையின் தலைவனாக விஸ்வநாதன். அவனை அடுத்துப் பின்தொடரும் மணிகண்டன். துப்பாக்கிக் குண்டு தாக்கும்போது கை பதறி, கொடியைக் கீழே போட்டுவிடக்கூடாது. அவ்வாறாக மணிகண்டனும் சுதந்திரப் போராட்டத்தில் துடிப்புடன் பங்கெடுத்துக் கொள்கிறான். அவனுடைய கனவு இது.

மணிகண்டன் அதற்குப் பிறகு திருவனந்தபுரம் போகவே இல்லை. புத்தகங்களெல்லாம் அங்கேயேதான் இருக்கின்றன; கவிதை எழுதிய நோட்டுகளும்கூட. அதற்குப் பிறகு வாசிப்பு மில்லை, படிப்புமில்லை. வெள்ளையனே வெளியேறு போராட்டம் பற்றி எரிந்து கொண்டிருந்தது. மாணவர் பிரிவின் தலைமைப் பொறுப்பு விஸ்வநாதன். விஸ்வநாதனை ஒருமுறையாவது பார்க்க அவனுடைய கண்கள் துடித்தன. போலீசுக்குப் பிடிகொடுக்காமல் போராட்டத்தை நடத்தும் விஸ்வநாதனின் கதைகளைக் கேட்க அவனுடைய காதுகள் துடித்தன. மணிகண்டனுக்கு இரவிலும் தூக்கம் பிடிக்கவில்லை. வீட்டின் கதவுகள் எப்போதும் திறந் திருக்கும். விஸ்வநாதனைப் பார்க்கத் தவமிருப்பதாக எண்ணம் மணிகண்டனுக்கு. ஒரு விடிகாலையில் வாசல்விட்டிறங்கியபோது ஒரு பெரிய இரைச்சல் கேட்டது. கரைகடந்து கடல்பொங்கி ஆர்ப்பரித்து வருவது போன்றதான இரைச்சல். பதினைந்தாயிரம் மாக்கால் விதைப்பாட்டு வயல்வெளிகளில் மடை திறந்த வெள்ளம் பாய்வது போன்ற சத்தமாக இருப்பதைப் பின்னர் உணர்ந்தான். கண்ணில் தட்டுப்பட்டவர்களையெல்லாம் விசாரிப்பதற்காகப் போலீசார் பிடித்துக்கொண்டு போனார்கள். யார் அதைச் செய்தது? தானேதான் என்பதாக மணிகண்டனுக்குத் தோன்றியது. போலீசார் தன்னைப் பிடித்துக் கொண்டுபோவதாக அவன் கற்பனை செய்தான். அவன் கதவை அடைத்துக்கொண்டு அறைக் குள்ளேயே இருந்தான். ஒருநாள், விளக்கு பற்றவைத்து அதன் எதிரில் உட்கார்ந்து, மணிகண்டன் சபதம் செய்தான்? இந்தியா வுக்கு சுதந்திரம் கிடைக்கும்வரை நான் என்னுடைய தாடியை எடுக்கப்போவதில்லை. அந்த சபதம் நாடு முழுவதும எதிரொலித்த தாக அவனுக்குத் தோன்றியது.

***

அந்தத் துக்ககரமான செய்தியைக் கேட்க மலஞ்சேரி பாப்பியம்மை உயிருடனில்லை. மலேயாவிலிருந்த கோபாலகிருஷ்ணனை ஜப்பானியர்கள் கொன்றுவிட்டார்கள். யுத்தம் முடிந்து நாடு திரும்பியவர்கள் சொன்னது இது. ஆனால் அந்தக் கதையைத் தெரிந்துகொள்வதற்கு முன்பாகவே பாப்பியம்மையின் உயிர் போய்விட்டது. கோபால கிருஷ்ணனுடன் மலேயா போனவர் களெல்லாம் ஐ.என்.ஏயில் சேர்ந்தார்கள். பர்மாவின் எல்லை யிலுள்ள ஏதோ ஒரு போர்க்களத்தில் அவர்கள் எல்லோரும் இறந்து போனார்கள். அது தன்னுடைய கிராமத்திற்குப் பெருமை சேர்க்கும் விஷயமாக சுரேந்திரனுக்குத் தோன்றியது. ஆனால் தன்னால் மட்டும் எதுவும் செய்ய முடியவில்லை. இனிமேல் அதற்கு வாய்ப்பு கிடைக்கும் என்று அவன் எதிர்பார்த்தான். இப்போது கிடைக்க இருப்பது சுதந்திரமே அல்ல. அதிகாரம், முதலாளிகளின் கைகளுக்கு இடம் மாறுகிறது. கோடானுகோடி இந்தியர்கள் இன்னமும் அடிமைத்தனத்தின் சங்கிலியில்தான். அவர்கள் விடுதலை பெறும்வரை போராட்டம் உண்டு. அதுதான் உண்மையான போராட்டம் என்பதாக சுரேந்திரன் தேற்றிக் கொண்டான்.

இந்தியாவை இரண்டாகப் பிரிப்பதாகத் தீர்மானமாயிற்று. இரத்த ஆறு ஓடியது. பிரிவினையின் தீவிரம் லட்சம் பேரைக் கொன்று முடிப்பதில் போய்நின்றது. சுதந்திரத்திற்குப் பின்னர் அந்தக் கிராமத்தில் ஒரு பத்திரப்பதிவு நடந்தது. புறக்களத்தில் அப்துல் ரசாக் சீரட்ட கோபாலக்கைமளின் பெயருக்கு சீரட்ட மனையிடத்தை எழுதிக்கொடுத்த விற்பனைப் பத்திரம் அது. வட இந்தியாவின் தெருக்களில் நடந்த மதக் கலவரங்களின் பலனாக இரத்த ஆறுகள் ஓடிய சமயத்தில் அப்துல் ரசாக், தலைமுறை தலைமுறையாகக் கைவசம் வைத்திருந்த நிலத்தை, அதனுடைய பூர்வீக உடைமையாளரான ஒரு ஹிந்துவுக்கே திருப்பிக் கொடுத்தான். ரசாக்கின் தம்பி சுலைமான் அண்ணனின் இந்த நடவடிக்கையை எதிர்த்தபோதிலும் அதற்குப் பலன் ஏற்பட வில்லை. சுலைமான் பாகிஸ்தானுக்குப் போகத் தீர்மானித்திருந் தவன். வடக்கே நடந்த கலவரங்களினால் அது நடக்காமல் போயிற்று. பழைய தலைமுறைகளைப்போல் இருக்க வேண்டு மென்று ரசாக்கிற்குத் தோன்றியது. முன்பு ஹிந்துவும் முஸ்லீமும் கிறிஸ்தவனும் ஒற்றுமையாக இருந்தார்கள். படித்த இளைஞர்களின் மனதில் வளர்ந்த மதவெறி ரசாக்கை நிலைகுலையச் செய்தது.

ஆகஸ்ட் பதினான்காம் தேதி நள்ளிரவு யாரெல்லாம் தூங்கிக்

கொண்டிருந்தார்கள்? இந்தியாவுக்குத் தூக்கம் வராமலிருக்க வேண்டிய இரவு அது. ஆனாலும் இந்தியா முழுவதுமே விழித் திருந்தது என்று தோன்றவில்லை. கிராமங்களில் சுதந்திரம் என்பது என்னவென்று அறிந்திராத கிராமத்தார் தூங்கிக் கொண்டிருந்திருப் பார்கள். ஆனால் அவர்களும் சுதந்திரம் பெறுவதற்கான போராட் டத்தில் பங்கு கொண்டவர்கள்தான். இரவு பன்னிரண்டு மணிக்கு பிரிட்டிஷ் சிம்மாசனத்தின் கொடி இறங்கியது. தர்மசக்கரம் இணைந்த மூவர்ணக்கொடி ஏறியது. அதை நேரில் பார்ப்பதற்கு மகாத்மாஜி தலைநகரில் இருக்கவில்லை. ஒருவேளை பிரிவினை யின் அல்லல் கண்டு துக்கப்பட்டது காரணமாக இருக்குமோ அவர் வராததற்கு?

நாட்டில் கோயில்களிலும் பிற வழிப்பாட்டுத் தலங்களிலும் அன்று சிறப்பு பூஜைகள் நடந்தன. மணிகண்டன் அன்று வெளியில் வந்தான். சுரேந்திரனும் கிராமத்தில் அங்குமிங்குமாக அலைந்து திரிந்தான். இந்த நாள் ஒரு தனிச்சிறப்பு கொண்டது. நாளைய விடியல் வேறுபட்டதாக இருக்கும். கடைசியில் பிரிட்டிஷ்காரனும் அந்த நள்ளிரவு தன்னுடைய நாட்டுக்குக் கப்பல் ஏறினான். சரியாக பன்னிரண்டு அடித்தபோது சங்கு முழங்கியது. மாதா கோயிலில் கூட்டமணி அடித்தது. வெடிச்சத்தமும் இருந்தது. ஆள் நடமாற்றமற்ற ஒரு வயலின் ஒரு மூலையில் நின்றபடி மணி கண்டன் தொண்டை கிழியக் கத்தினான். பாரத் மாதா கீ ஜே. அந்தக் கூப்பாடு தொடுவானத்தில் எதிரொலித்தது. போலீஸ் ஸ்டேஷனில் பெருத்த ஆரவாரங்கள். யூனிஃபார்ம் அணிந்து துப்பாக்கி ஏந்திய போலீசார் மூவர்ணக் கொடியை வணங்கியதை சுரேந்திரன் பார்த்தான். முனபு அவர்களே ஒரு மூவர்ணக் கொடியை வெடி வைத்துக் கிழித்தெறிந்ததை அவன் பார்த் திருக்கிறான். அந்தக் கொடியிலிருந்துதான் இந்தக் கொடி உயிர்த்தெழுந்திருக்கிறது.

## 5

சுதந்திரம் கிடைத்ததற்குப் பிறகான முதல் தேர்தல் வந்தது. பருத்திக் காட்டு தாமஸ் காங்கிரஸ் வேட்பாளன். தலைவர்களுக்குத் தாமஸை ரொம்பப் பிடிக்கும். நல்ல மரியாதை உள்ளவன். தேவையானதைத் தேவையானபோது எப்படிச் செய்ய வேண்டுமென்று அவனுக்குத்

தெரியும். ஆனால் சுதந்திரத்திற்காக அவனைவிட அதிகமாகப் பாடுபட்டவர்கள் உண்டு. அதில் ஒருவர்தாம் பேக்களத்தில் கௌரியார். அவர் இப்போது எல்லாவற்றினின்றும் விலகி நிற்கிறார். வேட்பாளருக்கான இடம் கிடைக்காததால் வெகுண் டெழுவார் என்று சிலர் பேசிக் கொண்டார்கள். அதல்ல, கம்யூனிஸ்ட் சார்பு உள்ளதனால் அவர் அப்படி இருக்கிறார் என்பதாக வேறு சிலருக்குத் தோன்றியது. ஏதானாலும் கௌரியார் செயலற்றுப் போனார். பல தலைவர்கள் அவரைக் களத்தில் இறக்க முயன்றார்கள். பலனில்லை. சுதந்திரம் கிடைத்ததுடன் தான் செய்ய வேண்டியதெல்லாம் செய்து முடித்தாயிற்று என்பதுதான் கௌரியாரின் நிலைப்பாடு. ஆனாலும் வெள்ளையனே வெளியேறு போராட்டத்தில் சிறைக்குச் சென்ற ஒருவர் எப்படி இவ்வளவு திடீரென்று செயலற்றுப் போனார்? பதில் கிடைக்காத கேள்வியாக இருந்தது அது.

இடது சாரிகளின் வேட்பாளர் சதானந்தம் என்ற ஒருவர். புன்னப்ர வயலாரில் வெட்டரிவாளைக் கையில் எடுத்துக்கொண்டு முன்வரிசையில் நின்றிருந்தவர் சதானந்தன். வயலாரில் இப்போது ஒரு குன்று இருக்கிறதல்லவா. சடலங்களை ஒன்றுகூட்டிக் குவித்து மூடிப் புதைத்து உண்டாக்கிய குன்று அது. அதன் உள்ளே முழு வதுமாக எலும்புத் துணுக்குகள் தான். அங்கிருந்து ஏற்றி வைத்த தீபத்தை ஏந்திக்கொண்டு ஊர்வலம் ஒன்று அந்த வாக்காளர் வட்டாரத்தில் வலம் வந்தது. கறுத்தவர்களின் ஊர்வலம் அது. இரத்தச் சிவப்பிலான கொடிகளின் பிரளயம்.

அவர்கள் குரலிட்ட கோஷங்கள் தொழிலாளர்களைத் தட்டி எழுப்பின. உழுபவர்களுக்கே நிலம் சொந்தம், நிலத்தைவிட்டு வெளியேற்ற எண்ணாதே. புதிய கோஷங்களாக அவை இருந்தன. தேர்தல் களம் தினந்தோறும் சூடு பிடித்தது. வாக்காளர்களின் பட்டியலை எடுத்துப் பார்க்கும்போது இரு கட்சியினருக்கும் பயம் உண்டாகும். இடதுசாரிகளின் பேச்சுக்கள் தொழிலாளர்களை வீறுகொள்ளச் செய்தன. வெளியேற்றுவதைத் தடை செய். தொழி லாளர்களின் கூலியை உயர்த்திக்கொடு. வட்டத்ர க்ரிகரியும் பருத்திக்காட்டு கொச்சௌசேப்பும் பொறுமை இழந்தார்கள். அவர்கள் தங்களுடைய வயல்களில் விவசாயத் தொழிலாளர்களை பயமுறுத்தினார்கள். அவர்களுடைய பதிவேட்டில் எழுதப்பட் டிருந்த சில குடியானவர்களுக்கு காங்கிரசுக்கு வோட்டுப் போடமாட்டோம் என்று முகத்துக்கு நேராகச் சொல்ல தைரியம் வரவில்லை. பலர் அவர்களுடைய வயல்வெளிகளிலிருந்து

மாயமாய் மறைந்து போனார்கள். தேர்தல் நாளன்று புத்தாடை உடுக்க வைத்து, நிறைய சாப்பாடும் கொடுத்த எஜமானர்கள் அவர் களை வாக்குச்சாவடிகளுக்கு அழைத்துச் சென்றார்கள். எட்டு அடித்தபோது வாக்குச் சாவடியில் நீண்ட க்யூ தென்பட்டது. எல்லாம் ஒப்பன்வோட். எவருக்கும் எழுதப்படிக்கத் தெரியாது; கண்ணும் சரியாகத் தெரியாது. யாருக்கு வோட்டுப்போட வேண்டும் என்ற கேள்விக்கு தாமசுக்கு என்றிருந்தது பதில். அவர் களுடைய எஜமானர்களும் அங்கேயே உட்கார்ந்திருந்தார்கள். அதனால் பலருக்குத் தங்களுடைய மனதில் இருந்ததை வெளியே சொல்ல முடியவில்லை. சதானந்தனின் ஏஜெண்ட்டாக வாக்குச் சாவடியில் உட்கார்ந்திருந்த சுரேந்திரனை அசட்டை உணர்வு அடங்கியிருக்கச் செய்தது. பாப்பா வோட்டுபோடப் போனாள். சுரேந்திரனின் மனம் கலங்கியது. அந்த உதட்டிலிருந்து தாமஸ் என்ற குரல் வெளிப்படுமோ என்று அவன் பயந்தான். ஓட்டு யாருக்கு போடப்போறே? வெடி வெடித்தது போலிருந்தது பதில்! சதானந்தன். அந்தக் கட்டிடமே அதிர்ந்தது. பாப்பா மீண்டும் ஒருமுறை அந்தப் பெயரைச் சொன்னாள். அதற்குப் பின்னால் வந்தவர்களும் சதானந்தனின் பெயரை உரத்துச் சொன்னார்கள். தலைமயிர் அளவிலான ஒரு சின்ன விரிசல் துவாரம் ஒரு பெரிய அணைக்கட்டையே தகர்த்தெறிந்தது. ஆனாலும் அந்தத் தேர்தலில் வென்றது தாமஸ்தான்.

விவசாயத் தொழிற்சங்கப் போராட்டம் புகழ்பெற்றுவிட்டது. கூலி உயர்வு கேட்டுப் போராட்டம். தொழிலாளர்கள் ஒரே அணியாக நிற்பார்களா என்று சுரேந்திரனுக்கு சந்தேகமாக இருந்தது. கம்யூனிஸ்ட் கட்சிக்கும் முழு நம்பிக்கை இல்லாதிருந்தது. ஆனால் எல்லோரும் வியப்படைந்தார்கள். ஒரேயொரு தொழிலாளிகூட வேலைக்குப் போகவில்லை. வட்டத்ரக்காரர், பருத்திக் காட்டுக்காரர் ஆகியோரின் வயல்களிலும் மற்றவர்களின் வயல்களிலும் விவசாய வேலை தொடங்க வேண்டிய காலம் கடந்துவிட்டது. சுரேந்திரனை நேரில் பார்த்துப் பேசுவதற்காக வட்டத்ர க்ரிகரி அவனுடைய வீட்டிற்குச் சென்றார். அந்த வீடு வேயப்பட்டிருக்கவில்லை. இடிந்து சிதைந்த வீடு. அங்கேதான் சுரேந்திரன் குடியிருக்கிறான். அவனுடைய மனைவி பொன் னம்மையும் குழந்தைகளும் நித்திய பட்டினியில். அங்கே அசைவோ அரவமோ எதுவுமே இல்லை. அந்தக் குழந்தைகளிடம் உயிரோட்டமான சலனம் இல்லை. சுரேந்திரன் தரித்திரத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறான் என்று க்ரிகரி கேள்விப்பட்டதுண்டு.

ஆனால் இந்த அளவுக்கு என்று நினைக்கவில்லை. அவருக்கு ஓர் எண்ணம் தோன்றியது. சுரேந்திரனுக்குக் கொஞ்சம் உதவினால் அவனை வசப்படுத்திவிடலாம். எப்படி உதவுவது? இந்த வீட்டைக் கொஞ்சம் மராமத்து செய்துகொடுத்தால்? ஆனால் அதைக் கேட்க சுரேந்திரன் இல்லை. அவனுடைய மனைவி பொன்னம்மையிடம் பலவிதமாகக் கேட்டும்கூட அந்தக் குடும்பம் அனுபவிக்கும் கஷ்டங்களைப் பற்றி அவள் எதுவும் சொல்லவில்லை. கடைசியில் வீடு மராமத்து செய்யும் விஷயத்தைக்கேட்ட போது படீரென்று வந்தது அவளுடைய பதில்! வேண்டாம். அது ஒரு வெடிகுண்டு போன்று க்ரிகரியின் காதுகளில் விழுந்தது. க்ரிகரியின் வித்தை பலிக்கவில்லை. போராட்டத்திலிருந்து தொழிலாளர்களைப் பின்வாங்கச் செய்ய க்ரிகரியும் கூட்டாளிகளும் பல தந்திரங்களை ஆலோசித்தார்கள். எதுவும் பலன் தருவதாக இல்லை. எந்த வயலிலும் வேலை நடக்கவில்லை. தொழிலாளர்கள் பட்டினி கிடந்தார்கள். போராட்டம் நீண்டபோது சுரேந்திரன் கவலைப் பட்டான். கலெக்டருடைய தலைமையில் சமாதானப் பேச்சு நடந்தது. அதனால் பலன் எதுவும் ஏற்படவில்லை. கடைசியில் யூனியனுடனான உடன்படிக்கைப் பேச்சின் ஒரு பகுதி என்ற நிலை அல்லாமல் கூலியைக் கூட்டிக்கொடுக்க க்ரிகரியும் கூட்டாளிகளும் தம் போக்கில் நிச்சயித்தார்கள். மறுநாள் காலை தொழிலாளர்கள் வேலைக்குத் திரும்பினார்கள். தொழிலாளர் களுக்குக் கூலி கூடுதலாகக் கிடைத்தது. ஆனாலும் யூனியனுடன் எந்தவித உடன்படிக்கைப் பேச்சும் இல்லாமல் வேலைநிறுத்தம் முடிவடைந்தது சுரேந்திரனுக்கு ஒரு வெட்கக்கேடான விஷயமாகத் தோன்றியது.

பஞ்சாயத்துத் தேர்தல் வந்தது. கம்யூனிஸ்ட் வேட்பாளராக ஒரு வார்டில் சுரேந்திரன் வேட்புமனு செய்தான். சுரேந்திரனை எதிர்த்து நிற்பது வட்டத்ர பீலிப்போஸ். ஒவ்வொரு வோட்டையும் பணம்கொடுத்து வாங்க பீலிப்போஸ் தயாரானான். காங்கிரஸ் காரர்கள் அச்சடித்துக் கொண்டு வந்து இறக்கிய ஒரு துண்டறிக்கை யில் சுரேந்திரனுடைய அத்துமீறல் நடவடிக்கைகள் ஆதாரபூர்வ மாக விவரிக்கப்பட்டிருந்தன. சீரட்டையில் ஒரு குஞ்ஞும்மை கர்ப் பிணியானாள். அவளுக்கு யாரும் துணையில்லை. கடைத் திண்ணைகளில்தான் அவள் இரவு நேரங்களில் தூங்கினாள். ஓர் இரவுப் பொழுதில் கடைத்திண்ணையில் பிரசவ வேதனையினால் துடித்துக் கொண்டிருந்த அவளை சுரேந்திரன் ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்றான். பிரசவம் நடக்கவில்லை. எப்படியும்

வயிற்றைச் சீக்கிரமாகக் கீறியாக வேண்டும். டாக்டர் கேட்டபோது கணவன் என்ற நிலையில் சம்மதக்கடிதம் எழுதிக் கையெழுத் திட்டுக் கொடுத்தது சுரேந்திரன்தான். ஆபரேஷன் நடந்தது. குழந்தை இறந்தது. தாய் பிழைத்தாள். கையெழுத்துப்படி சுரேந் திரன் அவளுடைய கணவனானான். தெருப்பொறுக்கியாக அலைந்து கொண்டிருந்த அந்தப் பெண்ணைக் கர்ப்பிணியாக்கியது சுரேந்திரன்தான் என்றிருந்தது பிட் நோட்டீஸ் குற்றச்சாட்டு. இப்படி நூறு நூறு குற்றச்சாட்டுகள். ஆனால் தொழிலாளர்கள் அவனைக் கைவிடவில்லை. சுரேந்திரன் பஞ்சாயத்துத் தலைவர் ஆனான்.

ஊரில் முதன்முதலாக ரோடுபோட்டதும் மின்சாரம் வந்ததும் சுரேந்திரனின் முயற்சியினால்தான். அதற்காக வேண்டி அவன் திருவனந்தபுரத்திற்குச் சென்று மந்திரிகளைப் பார்த்தான். காங்கிரஸ் கூட்டு மந்திரி சபை ஆட்சி செலுத்திய போதிலும் அவர்களைச் சென்று பார்த்து அவர்களுக்கு வரவேற்பு விழாக்கள் நடத்த சுரேந்திரன் தயங்கவில்லை. ஊருக்கான தேவைகளை நிறைவேற்ற வேண்டும் என்பது மட்டும் அவனுடைய இலட்சிய மாக இருந்தது. வட்டத்ரா க்ரிகரி முதலான முதலாளிகளும் சுரேந்திரனின் செயற்பாடுகளுக்கு உதவியாக இருக்க நேர்ந்தது. கம்யூனிஸ்ட்காரன் என்றாலும் சுரேந்திரனை அவர்களுக்குப் பிடித்துப் போயிற்று. அவனால் இனிமேலும் ஊருக்குப் பல வற்றைச் செய்ய முடியும். ஒரு நல்ல மருத்துவமனை வேண்டும். ஒரு உயர்நிலைப்பள்ளி வரவேண்டும். ஓய்வு ஒழிவு இல்லாத வேலைகள்.

சுரேந்திரன் செய்யும் நல்ல காரியங்களைப் பற்றி கட்சிக்குக் கருத்து வேறுபாடு எதுவுமில்லை. ஆனால் அவன் நடைமுறையில் வர்க்கப் பகைவர்களுடன் நட்புறவுடன் பழகியதைக் கட்சி கௌரவப் பிரச்சினையாகப் பார்த்தது. பாப்பா போன்றவர்கள் அவனிடமிருந்து விலகினார்கள். அவன் வர்க்கப் பகைவர்களின் வலைக்குள் விழுந்துவிட்டதாக அவளும் குற்றம் சுமத்தினாள். சுரேந்திரன் பெரிதும் வேதனைப்பட்டான்.

***

இந்த ஊரில் எத்தனை வயல்கள் இருக்கின்றன! அங்கே விளைவதில் பாதிக்கும் மேலான நெல் எட்டுபத்து வீடுகளின்

அறைகளில் மட்டுமே குவிகிறது. அவர்களுடைய கைவசத்தில்தான் ஊரில் பாதிக்கு மேலான விளைநிலங்கள். விவசாய வழிமுறைகள் புதுப்பிக்கப்பட்டுவிட்டன. முன்பு இருந்ததைவிட எத்தனையோ மடங்கு விளைச்சல் இப்போது கிடைக்கிறது. இன்று பணத்தை முடக்கி விவசாயம் செய்கிறார்கள். விவசாயம் கிட்டத்தட்ட ஒரு தொழிலாகிவிட்டது. தனிச் சொத்து வாரிசு உரிமை சம்பந்தப்பட்ட மதிப்பீடுகளும் மாறிக் கொண்டிருக்கின்றன. ஒரு சிலருக்கு நில மிருக்கிறது; பலருக்கு நிலமில்லை என்ற நிலைமை என்றைக்கு ஏற்பட்டது? ஒருவன் வேலியிட்டு வளைத்த பூமி அவனுக்குச் சொந்தம்; அவன் இறந்தால் அவனுடைய வாரிசுக்கு அது சொந்தம் என்றெல்லாம் சட்டங்கள் உண்டாக்கியது யாராக இருக்கும்? ஏதானாலும் நிலத்திற்கு எல்லைக் கற்கள் நட்ட காலம்தான் தெய்வத்திற்கு வாலிபம் வந்திருக்க வேண்டும். சத்தியம் என்றைக்கு உண்டானது? அதை எத்தனை எத்தனைபேர் வியாக்கியானம் செய்திருக்கிறார்கள்! தெய்வமும் சத்தியமும் நீதியும் எல்லாமே ஒவ்வொரு காலத்திலும் மாறும். இனியும் மாறிக் கொண்டிருக்கும்.

முன்பு ஒரு க்லாசிப்பேர் கொச்சுபிள்ளை வந்து சொத்துக் களை எல்லையிட்டுத் தீர்வை நிச்சயித்துப் பதிவேட்டில் குறித்துக் கொண்டு பட்டா கொடுத்தார். அதற்கு முன்பும் சொத்துக் கைமாற்றங்கள் நடந்திருக்கின்றன. அப்போதெல்லாம் குத்து விளக்கை ஏற்றிவைத்து நுனி வாழை இலையில் மண்ணும் பூவும் வைத்து, தண்ணீரையும் சேர்த்துக் கொடுத்தால் நிலம் கைமாறியதாக அர்த்தமாகிவிடும். கொச்சுப்பிள்ளை வந்த பிறகு நிலம் கைமாறுவதாக இருந்தால் ரிஜிஸ்டர் செய்ய வேண்டும் என்றாயிற்று. கொடுக்கல் வாங்கல்களிலிருந்துதான் சத்தியம் பிறந்ததுஎன்று சொல்லலாம். கடன் இருக்க தனமில்லை என்பதான பழைய காரணவர்களின் முத்திரை வாசகம் சத்தியத்தின் ஓர் அவதாரமாக இருந்தது. அதன்மூலமாக நிலம் கைமாற்றம் செய்யப்பட்டுக் கொண்டிருந்தது.

இப்போது மற்றொரு முழக்கம் கேட்கிறது. உழுபவனுக்கு நிலம் சொந்தம். குத்தகை எதுவும் கொடுக்க வேண்டாம் என்ற சட்டம் சீக்கிரத்திலேயே வந்துவிடும் என்பதுதான் குத்தகைகாரர் களின் நம்பிக்கை. பாலத்தோள் இல்லத்து வாசுதேவர் எல்லாக் குத்தகைகாரர்களின் வீடுகளுக்கும் போவார். தனது அவசரத் தேவையை எடுத்துச் சொல்வார். சில சமயங்களில் நான்கைந்து மரக்கால் நெல் மட்டும் கிடைத்ததென்று வீடு திரும்புவார். பிராது கொடுக்கப் பணம் இல்லாததால் குடும்பத்திற்கு வந்து சேர

வேண்டிய அசல் தொகையெல்லாம் காலாவதியாகிப் போகிறது.

உழுபவனுக்கே நிலம் சொந்தம் என்ற முத்திரை வாக்கியம் நடைமுறைக்கு வந்துவிட்டது. இனி சட்டத்தின் ஒப்புதல் மட்டுமே எஞ்சியிருக்கிறது. குத்தகைச் சொத்துக்கள் இப்போது கைவசமுள்ள வர்களின் சொந்தம் என்பதுபோல அதைப் பிள்ளைகளுக்கு பாகம் பிரித்துக் கொடுக்கத் தொடங்கிவிட்டார்கள். இனிமேல் நிலத்தின் சொந்தக்காரனுக்குக் குத்தகைப் பங்கு கொடுக்க வேண்டாம். சொத்தைத் திருப்பிக் கொடுக்கவும் வேண்டாம்.

***

முதலில் கம்யூனிஸ்ட் மந்திரி சபை அதிகாரத்திற்கு வந்தது. தொழி லாளர்களுக்கு நன்மைகள் ஏற்பட்டன. தொழில் தர்க்கங்களில் போலீஸ் தலையிடவில்லை. பழைமைவாதிகள் பயந்ததைப்போல, கோயில்களையும் மாதாகோயில்களையும் இடித்துத் தகர்த்துத் தரைமட்டமாக்கி விடவில்லை. கோயில் நிர்வாகத்தில் ஊரில் சில கம்யூனிஸ்ட்டுகளும் பங்கேற்றனர். அந்த அரசாங்கம் அதிக காலம் நிலைத்திருக்கவில்லை. தேசியப் போராட்டத்தை வழிநடத்திய மரியாதைக்குரிய தலைவர்கள்தான் அதில் மந்திரிகளாக இருந் தார்கள். அவர்கள் கைக்கூலிகளாக இருக்கவில்லை. நடத்தையில் குற்றமுடையவர்களாகவும் இல்லை. ஆனாலும் அந்த மந்திரி சபைக்கு எதிராகவும் குழப்பம் ஏற்பட்டது. சமுதாயத்தை நோக்கியதான அரசாங்கம் அமையவேண்டும் என்பதான கருத்து அதற்குப் பின் உண்டாயிற்று. அத்தகைய பரிசோதனைகளும் தோல்வியடைந்தன. அடுத்து வந்த தேர்தலில் கம்யூனிஸ்ட் கட்சி தனித்து நின்று போட்டியிட்டது. கம்யூனிஸ்ட் கட்சி மீண்டும் அதிகாரத்திற்கு வந்தால் குத்தகைதாரர் வாரிசுமுறை சட்டமாகும் என்பது உறுதியாக இருந்தது. பருத்திக்காடு, வட்டத்ர முதலான எல்லா நிலச்சுவான்தாரர்களின் நிலங்களிலும் குத்தகைதாரர்கள் உண்டு. அதையெல்லாம் அவர்களுக்குப் பதிந்து கொடுக்க வேண்டிய நிலைமையை நினைத்துப் பார்க்கக்கூட முடியவில்லை.

ஊர் முழுக்க ஒரு பேச்சு. அந்த வாக்காளர் பகுதியிலிருந்து கம்யூனிஸ்ட் கட்சியின் வேட்பாளனாக சுரேந்திரனை நிறுத்து கிறார்கள் என்பதாகப் பேச்சு. க்ரிகரி மற்றும் அவருடைய கூட்டாளிகளின் உத்தேசம்தான் அது. சுரேந்திரன் வேட்பாளன் ஆகிவிட்டானென்றால் அதற்காகும் செலவை ஏற்றுக் கொள்ளவும்

அவர்கள் தயாரானார்கள். காரணம், சுரேந்திரன் வெற்றி பெற்று வந்துவிட்டால் எல்லாக் காரியங்களிலும் ஒரு குறைந்த பட்சத் தேவையாவது நிறைவேற்றிக் கொள்ளலாம் என்பது அவர்களுடைய எதிர்பார்ப்பு. சுரேந்திரன் இன்னும் ஓலைக் குடிசையில்தான் குடியிருந்தான். அன்றாட வயிற்றுப்பாட்டுக்கே சங்கடம் தான். பாவம், அவனும் கொஞ்சம் பசைபிடிக்கட்டும் என்றிருந்தது க்ரிகரியின் மனோபாவம். ஆனால் வர்க்கப் பகைவர்களுடன் இணக்கமாக இருக்கும் சுரேந்திரனை வேட்பாளனாக்கும் விஷயத்தைப் பற்றிக் கட்சி சிந்திக்கக்கூட இல்லை. ஸ்ரீதரன்தான் கம்யூனிஸ்ட் கட்சியின் வேட்பாளன் ஆனான். வேட்பாளன் யாரானாலும் கட்சியின் வோட்டு நஷ்டப்படவில்லை. தாங்கள் வெற்றி பெறுவோம் என்ற நம்பிக்கை ஒவ்வொரு தொழிலாளிக்கும் இருந்தது.

வலியகுஞ்ஞாதி என்ற மூத்த புலையனின் மகன் கறுத்தை க்ரிகரி முகத்தைப் பார்த்துச் சொன்னான். ஆமாம் முதலாளி, நாங்க ஆளத்தான் போறோம். க்ரிகரி நடுங்கினார். காலம் மாறி விட்டது; தம்புரான் என்று கூப்பிடுவது போய்விட்டது. முதலாளி என்று கூப்பிட்டதை க்ரிகரியால் பொறுத்துக்கொள்ள முடிய வில்லை. இனிமேல் ஒரு வேளை புலையர்கள் தம்புரான்களைப் பெயர் சொல்லிக்கூடக் கூப்பிடலாம். க்ரிகரியின் தன்மான உணர்வு தடுமாறிற்று. இந்த அகங்காரம் பிடித்தவனைக் கொல்ல எவ்வளவு ரூபாய் வேண்டும்? எவ்வளவு ரூபாய் ஆனாலும் பரவா யில்லை; கௌரவம் தான் முக்கியம். சில நாட்கள் கழித்து, கறுத்தையின் அழுகிப் பொதும்பிய சடலம் ஆற்றுடன் சேர்ந்து மிதந்து போயிற்று.

தேர்தலில பெரும் எண்ணிக்கை வித்தியாசத்துடன் ஸ்ரீதரன் வெற்றி பெற்றான். கம்யூனிஸ்ட்களுக்கு ஆட்சி செய்வதற்கான அறுதிப் பெரும்பான்மை கிடைத்தது.

***

திருவனந்தபுரத்திலுள்ள ஒரு சத்திரத்தில்தான் இப்போது மணி கண்டனின் வாசம். அங்கிருந்த காவலாளி கோயா படிப்பும் அறிவுமுள்ள அந்த இளைஞனுக்கு அடைக்கலம் கொடுத்தான் என்று கூறலாம். கல்லூரியில் படித்தவனும் கவிஞனுமான மணி கண்டனிடம கோயாவுக்கு மரியாதை உண்டு. மணிகண்டன்

சாப்பிடுவதற்கு அவன் கொடுப்பான். காலியாக இருக்கும் அறை ஒன்றையும் படுப்பதற்காக வசதி செய்து கொடுப்பான். ஒரு கனவு உலகில் மணிகண்டன் வாழ்ந்து கொண்டிருந்தான். கோயாவோடு மட்டும்தான் பேசுவான். நாட்டில் சோஷலிசம் வந்த பிறகுதான் தாடி எடுப்பேன் என்பது இப்போது அவன் எடுத்திருக்கும் சபதம். பகல் முழுதும அவன் திருவனந்தபுரம் நெடுகிலும் சுற்றித் திரிவான். வெளுத்த பவுர்ணமி நிலவில் கடற்கரைக் கழிமுகத்தில் ஜனசந்தடி இல்லாத சூழலில் மனம் ஒன்றிக் கவிதை எழுதுவான். இயற்கை யின் திவ்விய கானங்கள் அவனுக்குக் கேட்கும்.

தொழிலாளி வர்க்கத்தின் அரசாங்கம் ஒன்று அமைவதை அவன் கனவு கண்டான். நிலப் பிரபுத்துவம் முடிவடைய வேண்டும். புதிய கம்யூனிஸ்ட் மந்திரிசபை அதிகாரத்திற்கு வந்து நாட்டில் ஒரு புதிய வெளிச்சம் உருவானதாக மணிகண்டனுக்குத் தோன்றியது. அதனுடைய முகம் இப்போது தெளிவாக இருந்தது. அமாவாசை நாள் ஒன்றில் கடற்கரைக் கழிமுகத்தில் முன்பின் அறிமுகமில்லாத ஒருவனை அவன் சந்தித்தான். ஆனந்தமயமான ஒரு கவிதையில் மூழ்கிப்போயிருந்தபோது அந்த இளைஞன் மணி கண்டனின் பார்வையில் பட்டான் தனிமையைத் தேடிவந்த யாரோ ஒருவன். அவனும் ஒரு கவிஞனாக இருக்கலாம். நிராசை பிடித்த ஒரு காதலனாகவும் இருக்கலாம். அவனுக்குக் கடற்கரையை விட்டுக் கொடுத்துவிட்டு மணிகண்டன் அங்கிருந்து போனான். அடுத்தநாள் மாலைப் பத்திரிகையில் ஒரு செய்தி வந்தது— கடற்கரைக் கழிமுகத்தில் ஓர் இளைஞன் தற்கொலை செய்து கொண்டான்.

* * *

பழைய கோடாந்த்ரா மூத்தாசானும் கோன்னோத்து வல்யச்சனும் சீரட்டக்கைமஞும் இன்று இந்த ஊரைப் பார்க்க வருவதாக வைத்துக் கொள்வோம். அவர்கள் மேலுலகத்தில் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறார்கள் அல்லவா. மேலுலகத்தில் என்றால் எங்கே? சொர்க்கத்திலா, நரகத்திலா? நெடுங்காலம் நரகத்தில் இருக்கும் அளவுக்கு அவர்கள் பாவம் செய்யவில்லை. அற்ப சொற்பமாகத் தான் அவர்கள் தெய்வத்தின் சொத்தை அபகரித்திருக்கிறார்கள். எப்படியோ ஓர் இடைவேளையில் அவர்கள் இந்த ஊரைப் பார்க்க வருகிறார்கள் என்பதாக நினைத்துக் கொள்க இங்கிருக்கும்

மின்சார விளக்குகளின் வெளிச்சத்தில் அவர்களுக்குக் கண்ணால் பார்க்க முடியாமல் போகலாம். ஆகாயம் தொட்டுக் கொண்டிருந்த பழைய மாமரங்கள் எதுவும் இல்லை. எல்லாவற்றையும் வெட்டித் தள்ளியாயிற்று. புதிய ரக ஒட்டு மாமரங்கள்தான் இப்போது. ஊரின் தொன்மையைச் சொல்வதற்கு என்ன இருக்கிறது இங்கே? எதுவும் இல்லை. எல்லாம் புதிது. இன்றைக்குக் கோடாந்த்ர இல்லை, கோன்னோத்து இல்லை, சீரட்ட எட்டுக்கட்ட வீடும் பார்ப்பதற்கில்லை. முன்பு எல்லாக் குடும்பங்களிலும் கந்தர்வர்கள் இருந்தார்கள். அவர்களும் போய்விட்டார்கள். பெண்களின் நடை யுடை பாவனைகளும் மாறியிருக்கின்றன. ஆண்களுக்குக் குடுமி யில்லை. துணிக்கடைகளையும் அடகுக் கடைகளையும் பார்த்துப் பழைய சமூகத்தலைவர்களின் கண்கள் அயர்ந்துபோய் நிலைகுத்தி நின்றுவிட்டன. நெல்லைப் பார்க்க முடியவில்லை. எங்கேயும் பணம்தான். துணிக்கடைக்காரன் அன்று விற்பனை செய்து கிடைத்த பணத்தை மூட்டையாகக் கட்டி நெஞ்சோடு சேர்த்து அணைத்துக் கொண்டு வீட்டுக்குத் திரும்பினான். வழியில் யாரோ காத்திருந்து அந்தக் கடைக்காரனைக் காயங்களுக்கு உள்ளாக்கி விட்டு அந்தப் பணத்தைத் தட்டிப்பறித்துச் சென்ற காட்சியை அவர்கள் பார்த்தார்கள்.

சில நாட்களாக அந்தக் கிராமத்தில் அலைந்து திரிந்து கொண் டிருந்த ஒரு தாடிக்காரனின் சடலம் ஆற்றில் துள்ளித் தாவி மிதந்து சென்றதைக் காண முடிந்தது. கிழக்குத் தொடர்ச்சி மலையில் வட்டத்ரக்காரின் எஸ்டேட்டில் கூலி வேலைக்காரியாக இருந்த ஒரு தமிழச்சியை பிலிப்போஸ் காப்பாற்றினான். அவளுடைய காதலனின் பிணம்தான் ஆற்றில் மிதந்து சென்றது.

இந்த ஊரில் எங்கேயும் அனந்தரவர் என்பதான மருமகன் உறவுமுறைக்காரர்கள் இல்லை. அதற்குரிய சகோதரிமார்கள் இருக்கவில்லை. மனைவியும் மக்களும் மட்டுமே இருந்தார்கள். தறவாட்டுக் குடும்ப அமைப்பு இல்லாமல் போயிருந்தது. மனைவி கணவனின் அடிமை; அல்லது கணவன் மனைவியின் அடிமை. புதிய குடும்பங்கள், புதிய சம்பிரதாயங்கள்; வாழ்க்கை ஒட்டு மொத்தமாக மாறிவிட்டிருந்தது.

ஊரில் இன்று அரசாங்க வேலை பார்ப்பவர்கள் இருக் கிறார்கள். அயல்நாடுகளில் வேலை பார்ப்பவர்கள் இருக்கிறார்கள். எழுதப் படிக்கத் தெரியாதவர்களின் எண்ணிக்கை குறைவு. பள்ளிக் கல்வி என்பது சர்வசாதாரணமாகிவிட்டது. ஆங்கிலம் எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் ஏராளமாக இருந்தார்கள். முதலில்

இங்கே ஆரம்பிக்கப்பட்ட பள்ளிக்கூடம் ஓலைக்குடிசையாக இருந்தது. அந்த ஓலைக்குடிசை வரலாறு படைத்தது. சுப்பய்யனை யாருக்காவது நினைவிருக்கிறதா? சீலாந்திப்பிள்ளில் கல்யாணி யம்மையைக் கண்டு மோகம் கொண்ட சுப்பய்யன்சார். சார் என்ற குரலை அந்த ஊருக்கு முதன்முதலாகக் கொண்டு வந்தவர் சுப்பய்யன்தான். இன்று எல்லா மேலதிகாரிகளையும் சார் என்றுதான் கூப்பிடுகிறார்கள். ஊருக்கு சுப்பய்யன் கொடுத்த பரிசு.

நட்டாச்சேரி ராமசந்திரன் பிள்ளையின் மகன் மது, வேதியியலில் எம்.எஸ்.சி தேர்ச்சி பெற்றான். மேலும் படிக்க வேண்டுமென்ற ஆசை இருந்தது. ஆனால் ராமசந்திரன் பிள்ளைக்கு அதற்கான வசதி இல்லை. மதுவின் தங்கை நளினி பி.ஏ. தேர்ச்சி பெற்றாள். அவளுக்குத் திருமணம் செய்வித்து அனுப்பி வைக்கவேண்டும். மதுவுக்கு ஒரு வேலையும் கிடைத்து விட்டால் அந்தக் குடும்பம் கரையேறிவிடும். ராமசந்திரன் பிள்ளைக்கும் மனைவிக்கும் ஒன்றுதான் கனவு—மதுவுக்கு ஒரு வேலை, மகளுக்கு ஒரு கல்யாணம்! மது அவர்களுடைய கனவு களையெல்லாம் தகர்த்தெறிந்தான். ஆற்றுக்கடலில் என்ற கிறிஸ்தவக் குடும்பத்தைச் சேர்ந்த ஜானுக்கு ஒரு மகள் இருந்தாள்—ரோசாக்குட்டி. அவளும் காலேஜில் படித்தவள். அவளைப் பெண்பார்க்க மாப்பிள்ளை வீட்டார் வர இருந்த நாளன்று காலையில் ரோசாக்குட்டியைக் காணவில்லை. அவள் மதுவுடன் ஓடிப்போய்விட்டாள்.

சீரட்ட கோபாலக்கைமளும் தன் மகனைப் படிக்க வைத்தார். அவனுக்கு ஒரு வேலை கிடைக்கவில்லை. கிழவனான கோபலக் கைமள் நெல் அவித்து அரைத்து விற்றுத்தான் இப்போதும் அந்தக் குடும்பம் பிழைப்பை நடத்துகிறது. உலையில் உமித்தீயின் சூட்டைப் பொறுத்துக்கொள்ள முடிவதில்லை. சிறிது நேரம் சற்றே திரும்பி நின்றால் உடம்புச்சூடு கொஞ்சம் தணியும். மகன் தாமோதரன் எதையோ படித்துக் கொண்டிருந்தான். கோபாலக்கைமள் எந்த உதவிக்காகவும் அவனைக் கூப்பிட்டுத் தொந்திரவு செய்வதில்லை. அவன் நாலெழுத்துப் படித்தவன். வெறுமையிலிருந்து ஒரு வாழ்க்கையை உருவமைத்துக்கொண்ட அந்தக் கிழவன் உமித்தீயின் சூட்டில் வதங்கும்போது சில சமயங்களில் தன்னுடைய கஷ்ட நஷ்டங்களை அங்கலாய்த்துக் கொள்வான். ஒருநாள் தாமோதரன் எரிந்து விழுந்தான்? பிறந்ததுமே கழுத்தை நெரிச்சிக் கொன் னிருந்தா நல்லா இருந்திருக்கும்.

சீலாந்திப்பிள்ளியில் நிறைந்து நின்றிருந்த அஸ்திவாரங்

களெல்லாம் இடிந்தும் சிதைந்தும் போயிருந்தன. அங்கே இப்போது அந்தி நேரம் விளக்கு வைப்பதில்லை. பாமுபிள்ளைக்குக் கொச்சியில் ஒரு கம்பெனியில் வேலை. அவருடைய சகோதரி கௌரியம்மையும் அவளுடைய ஒரு மகளும் மட்டுமே அந்தக் குடும்பத்திலிருந்தார்கள். ஊரில் யாருக்கும் தனிநபர் சொத்துரிமை வந்தது எதுவும் தெரியவில்லை; பாகம் பிரிக்கச் சொத்து இல்லாத நிலைமை. பரமுபிள்ளை கல்யாணம் செய்துகொள்ளவில்லை. அவருடைய உதவியினால் கௌரியும் சீலாந்திப்பிள்ளியில் பழைய வீட்டில் ஒரு தாய்வழிப்பாட்டியுடன் மட்டும் இருந்து வருகிறாள். அங்கிருந்த அறைகளில் இட்டு நிரம்பியிருந்தது நெல் அல்ல; அங்கு பாதுகாக்கப்பட்டிருந்தவை ஓலைச்சுவடி கிரந்தக் கட்டுகளே. நூற்றாண்டுகள் பழைமையான அந்த வீடு இடிந்து விழும் நிலையில் இருந்தது. ஒரு சமயம் பாமுபிள்ளை வீட்டையெல்லாம் நன்கு பரிசோதித்துப் பார்த்தபோது கூரை நடுத்தூண்டைக்கரையான் தின்றிருப்பதைப் பார்த்தார். எப்போது வேண்டுமானாலும் வீடு சரிந்து கீழே விழலாம். தரையில் பாதுகாக்கப்பட்டிருந்த கிரந்தங்களிலிருந்துதான் கரையான் பிடிக்கத்தொடங்கியது. கடந்த சில தலைமுறைகளாக அந்த அறையைத் திறக்க ஆளே இல்லை. எத்தனை கிரந்தங்கள் கரையானுக்கு இரையாகியிருக்கின்றன! அன்றொரு நாள் சீலாந்திப்பிள்ளியில் தெற்குப் பக்கத்தில் மணிக் கணக்காக நெருப்பு பற்றி எரிந்தது. பல மூலைகளிலிருந்து மண்ணும் பனையோலைக் கசடுகளும் அந்த அக்னிகுண்டத்தில் விழுந்தன. நள்ளிரவில்தான் அந்தத் தீ அணைந்து அடங்கியது. அவ்வாறாகப் பழைமை எரிந்து சாம்பலாயிற்று.

***

நிலச் சீர்திருத்தச் சட்டம் நடப்புக்கு வந்துவிடும். அதற்கு இனி நான்கு நாட்களே இருக்கின்றன. அன்று முதல் தனியே எவருக்கும் நிலம் கிடையாது. நிலங்கள் எல்லாமே அரசாங்கத்திற்குச் சொந்தம். குத்தகைக்கு விடுபவன் கிடையாது; நிலச்சுவான்தார் கிடையாது; குத்தகைகாரர் கிடையாது. குத்தகைக்கு எடுத்த நிலத்திற்குச் சுற்றிலும் உள்ள பத்து சென்ட் நிலம் குத்தகைதாரருக்கே சொந்தம். பதினைந்து ஏக்கருக்கு அதிகமான நிலம் ஒரு குடும்பத்திற்குச் சொந்தமாக இருக்க முடியாது. நில உச்ச வரம்புச் சட்டம் அமலாக்கப்படுவதற்காக லேண்ட் ட்ரிப்யூனல் அலுவலகம் ஒன்று

ஊருக்கு வருகிறது. பஞ்சாயத்துத் தலைவர் டெண்ட் சுரேந்திரனின் முயற்சியினால்தான் அலுவலகம் இங்கேவர அனுமதி கிடைத் திருக்கிறது. ஆனால் அலுவலகத்திற்கு வேண்டிய இடமும் கட்டிடமும் இலவசமாக ஏற்பாடு செய்து தரவேண்டுமென்று கலெக்டர் தெரிவித்திருக்கிறார். சுரேந்திரன் சங்கடத்தில் ஆழ்ந்தான். வேறு வழியில்லை; பஞ்சாயத்து கூடும் ஹாலைத் தற்போதைக்கு லேண்ட் ட்ரிப்யூனலுக்குக் கொடுக்க வேண்டியது தான். பஞ்சாயத்து எங்கு வேண்டுமானாலும் கூடிக் கொள்ளலாம் என்பது பிரசிடென்ட்டின் அபிப்பிராயம்.

முன்பு எருமத்ர மடத்தை க்லாசிப்பேர்க்குக் கொடுப்பதை அறிந்து கோடாந்த்ரமூத்தாசன் வந்தது போலப் பஞ்சாயத்து உறுப்பினர் நாராயணப் பணிக்கர் இந்தச் செய்தியைக் கேட்டு ஓடோடி வந்தார். லேண்ட் ட்ரிப்யூனல் என்றால் என்னவென்று உறுப்பினருக்குத் தெரிந்திருக்கவில்லை. சுரேந்திரன் அதை விளக்கிச் சொன்னான். நிலச்சீர்திருத்தச் சட்டத்தை அமலுக்குக் கொண்டு வருவதான அலுவலகம். குத்தகை நிலத்திலிருந்து வெளியேற்றப் பட்டவர்களைப் பதிவு செய்து அவர்களுக்குப் பத்து செண்ட் நிலத்தை பதிந்து கொடுப்பது. குத்தகைதாரர்களுக்கு அவர்கள் விவசாயம் செய்யும் நிலத்தைப் பதிந்து பட்டா கொடுப்பது எஞ்சிய நிலங்களைக் கையகப்படுத்தி நிலம் இல்லாதவர்களுக்குப் பதிந்து கொடுப்பது—இதையெல்லாம் செய்வதற்கு அதிகாரம் பெற்ற உத்தி யோகஸ்தர்கள் வருகிறார்கள். அப்போது அவர்களைத் தேவையானபடி உபசரிக்க வேண்டும். நாராயணப் பணிக்கருக்கும் அது புரிந்தது. நெடுங்காலத்திற்கு முன்பு நடந்த சர்வேயைப் பற்றிச் சொல்லக் கேட்ட கதைகளைப் பணிக்கர் நினைத்துப் பார்த்தார். இனிமேல் எல்லாம் தலைகீழாக மாறப் போகிறது. சர்க்கார் விஷய மல்லவா, நடக்கட்டும் என்பதாகப் பணிக்கர் தேற்றிக் கொண்டார்.

பருத்திக்காட்டு கொச்செளதயும் வட்டத்ர க்ரிகரியும் உட்பட எல்லோரும் பயந்தார்கள். நாளைச் சூரியன் உதிப்பது புதிய நிலச்சீர்த்திருத்தச் சட்டத்தின் உலகத்தில். ஆயிரம் மரக்கால் நிலம் உள்ளவனுக்கு எண்ணூற்று ஐம்பது மரக்கால் நிலம் இல்லாத தாகும். மாறாக ஊசி குத்த நிலம் இல்லாதிருந்தவனுக்கு நஞ்சை யாகப் பத்து செண்ட் கிடைக்கும். ஊர்கள் தோறும் குத்தகைப் பணமும் குத்தகை நெல்லும் கிடைத்துக் கொண்டிருந்த நிலச் சுவான்தார்களுக்கு ஒன்றுமில்லாமல் போகும். குத்தகை எடுத்தவன் நிலச் சொந்தக்காரன் ஆகிறான். இவ்வளவு பெரிய மாற்றம் இதற்கு முன்பு ஏற்பட்டதில்லை. கொச்செளத இரவில் இமைப்பொழுதும்

கண் மூடவில்லை. உருண்டு புரண்டு படுப்பார். எழுந்து உட்கார்வார், அலமாரி திறந்து சொத்துக்களின் பத்திரங்களை எடுத்துப் பார்ப்பார். பணம் கொடுத்து வாங்கியது எவ்வளவு? தேவஸ்தானத்துக்குச் சொந்தமானது எவ்வளவு? பாலத்தோள் இல்லத்துக்குச் சொந்தமானது எவ்வளவு? மொத்தம் கைவசம் வந்த நிலங்களின் கணக்கைக் கூட்டிப் பார்த்தார். மணி பன்னிரண்டு அடித்தது. அந்தக் காகிதக்கட்டு அவருடைய கையிலிருந்து நழுவி விழுந்தது. இனி சொந்தமென்று சொல்லிக்கொள்ளப் பதினைந்து மட்டுமே! தேடியதெல்லாம் கைவிட்டுப் போகிறது. செக்குக்காரன் பருத்திக்காட்டு ஔதை முதலாக இதுவரை எத்தனை தலைமுறை களின் சேகரிப்பு ஒரு நிமிஷத்தில் பறிபோகப் போகிறது.

மறுநாள் கிழக்கு வெளுத்தபோது எங்கேயோ ஒரு குரல் கேட்டது. இன்குலாப் ஜிந்தாபாத். ஒரு பெரிய இளைஞர் கூட்டம் அளவுச்சங்கிலியும் முளைக்குச்சிகளும் வெட்டுக்கத்தியுமாக வரிசை வரிசையாக இன்குலாப் கோஷமிட்டுக் கொண்டு போயிற்று. குத்தகை நிலத்தைச் சுற்றிலும் பத்துப் பத்து சென்ட் நிலம் அளந்து எல்லையிட்டு வேலி நட்டு குத்தகைக்காரர்கள் கைவசப்படுத்திக் கொண்டிருந்தார்கள். கொச்சௌத பயந்து அறைக்குள் போய்க் கதவை அடைத்துக் கொண்டார்.

***

பாலத்தோள் குடும்பத்தார்க்கு வீடு இருக்கும் மனையிடம் தவிர இப்போது சொத்து வேறு எதுவும் இல்லை. குத்தகைக்கு விட்டிருந்த நிலங்களெல்லாம் குத்தகைதாரர்களின் கைவசமாயின. சில வருடங் களாக கோயிலில் அர்ச்சனையின்போது கிடைக்கும் அற்ப வருமானத்தினால் அந்தக் குடும்பம் நடந்து வருகிறது. கோயிலிலும் வருமானமில்லை. குடும்பத்திற்குக் குத்தகை அளக்க வேண்டிய வர்கள் அதில் பத்தில் ஒரு பங்கு கொடுத்தாலும் வீடு சுபிட்சமாகி விடும் கணக்கில்லாத சொத்துக்கள் இருந்தன. எப்படி அவை தொலைந்தன? கேட்க வேண்டிய கேள்விதான். வீட்டிலிருந்த வர்கள் விவசாயம் செய்தார்களா? வீட்டிலிருந்தவர்களின் ஒரு துளி வியர்வை சிந்தியிருக்குமா? விவசாய நிலம் விவசாயிக்குரியது. அப்படியல்லாமல் உண்டு முடித்து சும்மா கிடப்பவனுக்கல்ல. இது குரூரமாகத் தோன்றலாம். ஆனால் குரூரமானவை பல காலப் போக்கில் நியாயமாகிவிடும்; நியாயமானவை பல குரூரமாகும்.

காலத்தின் இந்த மாற்றத்தைப் புரிந்துகொள்ள முடிந்த நபராக இருந்தார் கிருஷ்ணநம்பூதிரி. வீடு நலிந்தபோது அங்கே இருந்தவர்களிடம் இரக்கம் காட்டியவர்கள் உண்டு—வேறு யாருமல்ல, அங்கே குத்தகைதாரர்களான புலையரும் பறையரும். வீட்டில் கஞ்சி காய்ச்ச அரிசியில்லை என்று அறியும்போது அவர்கள் பல சமயங்களில் கொண்டுவந்து கொடுத்த நெல்லின் கணக்கைக் கிருஷ்ணர் குறித்து வைத்திருந்தார். அவர்கள் அதைக் கடனாகக் கொடுக்கவில்லை என்ற போதிலும் என்றைக்காவது திருப்பிக் கொடுக்க வேண்டுமல்லவா. குத்தகைதார வாரிசுகளுக்குக் கொடுக்க வேண்டியதைக் கழித்து மிச்சமுள்ள துண்டு நிலங்களை அவர்களுக்கு எழுதிக் கொடுத்து ஒரு விதமாகப் பொறுப்பைத் தீர்த்துவிட்டுத்தான் அவர் இறந்தார். கடன் வாங்கியவனுக்கு ஜன்ம முக்தி கிடையாது என்ற நம்பிக்கை கொண்டிருந்தார் கிருஷ்ணர் நம்பூதிரி.

இப்போது வாசுதேவர்தான் வீட்டுக்கு மூத்தவர். மனைவி ஆர்யா அந்தர்ஜனமும் மகள் சுபத்ராவும் அவருடன் இருந்தார்கள். கல்லூரியில் படித்த மகன் கிருஷ்ணன் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்து, பின்னர் கட்சிக்குப் புரட்சிப் போக்கின் தீவிரம் போதாதென்ற எண்ணம் ஏற்பட்டு நக்சலைட் ஆனான். கடுக்காத்ர குஞ்ஞுக்குட்டனைப் போன்ற ஊரில் படித்த இளைஞர் பலர் அந்தப் புதிய இயக்கத்தின் நடவடிக்கைகளில் ஈடுபட்டார்கள். அது ரகசியம். அவர்களில் ஒருவரை ஒருவர் அறிந்திருக்கவில்லை. அவர்களுடைய நடமாட்டம் மற்றவர்களுக்குத் தெரியாது; தெரிந்து கொள்ள முடியவில்லை. கிருஷ்ணன் எந்த நேரத்திலும் வீட்டிற்கு வருவான். அதாவது, பாதி ராத்திரியில் வருவான். எந்த நேரத்திலும் மாயமாக மறைந்துவிடுவான். எனவே வாசுதேவருக்கு மகனுடைய நடவடிக்கைகளைப் பற்றி அறிந்துகொள்ள முடியவில்லை. கோயிலில் அர்ச்சனைமூலம் எந்த வருமானமும் இல்லை. கர்ம லோபம் வந்துவிடக்கூடாதென்று கருதி மட்டுமே பூஜையை நிறுத்துவதில்லை. குத்தகைதாரர்களுக்கு ஆட்பட்ட சொத்துக்களின் பிரதிபலனாகக் கொஞ்சம் பணம் கிடைக்கச் சட்டமுண்டு. அது கிடைத்தால் சுபத்ராவைக் கல்யாணம் செய்து கொடுத்துவிடலாம் என்றிருந்தார். லேண்ட் ட்ரிப்யூனல் மூலமாக அது எந்தக் காலத்தில் கிடைக்கும் என்று வாசுதேவருக்கு எந்த நிதானமும் இல்லை.

இந்த நிலையில் ஒருநாள் இரவு கிருஷ்ணன் திரும்பி வந்தான். வீட்டு தரித்திரத்தைப் பற்றித்தான் வழக்கம்போல அம்மாவுக்கு

மகனிடம் பேச வேண்டியிருந்தது. மறுநாள் கோயிலில் பூஜை முடிந்து திரும்பி வந்த அப்பாவிடம் மகன் சொன்னான், எனக்கொரு பூணூல் ஜெபிச்சித் தரணும். பிராமணனாக வேண்டும் என்ற மகனின் தீர்மானத்தில் வாசுதேவருக்கு நம்பிக்கை வரவில்லை. அர்ச்சனைப் பணியில் அப்பாவுக்கு உதவியாக இருந்து குடும்பத்தை மேம்படுத்த அவன் நிச்சயித்திருக்கிறான். பூணூல் போட்டதால் பிராமணனாகி விட முடியாது. சின்ன வயதிலிருந்தே நியம நிஷ்டையுடன் சாதகம் செய்து சித்தி பெற வேண்டிய காரியம் இது. போதாதற்குக் கிருஷ்ணன் அடாத செயல்கள் பலவற்றைச் செய்திருக்கிறான். சுத்திகர்மம் செய்தாலும் ஊரார் நம்புவார்களா? அதற்குப் பணச்செலவும் ஆகும். தேவையான பணம் தன்னிடம் இருப்பதாகக் கிருஷ்ணன் சொன்னான். கம்யூனிஸ்ட்டான மகன் மீண்டும் பிராமணனாக மாற ஆசைப்பட்டது குடும்பத்தின் நல்ல காலம் என்பதாக வாசுதேவருக்குத் தோன்றியது.

மறுநாள் ஆர்யா அந்தர்ஜனம் மகனிடம் ஒரு ரூபாய் கேட்டாள். அங்கே அன்றைக்கு உப்பில்லை. முந்தின நாள் கோயிலில் வழிபாடு நடந்த வகையில் வாசுதேவருக்குக் கிடைத்த கொஞ்சம் அரிசி இருந்தது. அந்த அரிசி கொண்டு கஞ்சி வைத்தாலும் உப்பு வேண்டாமா? அதற்காகத்தான் ஒரு ரூபாய் கேட்டாள். கிருஷ்ணனின் கையில் பணம் இருந்தது. பணமாக அல்ல, தங்க நகைகளின் ஒரு பெரிய மூட்டையாக. ஆனால் அது கட்சிக்குச் சொந்தமானது. பாதுகாப்பாக வைத்திருக்கும் படியாகக் கொடுக்கப்பட்டது அது. கிருஷ்ணனின் மனம் கிடந்து அலைக்கழிந்தது. ஒரு தங்க நாணயத்தை எடுத்துப் பணமாக்கினால் என்ன? வீடு பட்டினி கிடக்கிறது. அரிசி வாங்க வேண்டும். எங்கேயும் சொல்ல வேண்டாம்—செய்தாக வேண்டும்; மன்னிப்பு தருக. கட்சியின் கட்டுப்பாடும் சட்ட வரம்பும் பார்த்தால் செய்யக்கூடாது. தொல்லைப்படுத்தும் கட்டுப்பாடு.

அந்த மூட்டையில் என்னதான் இருக்கிறதென்று தெரிந்து கொள்ளும் ஆர்வம் கிருஷ்ணனுக்கு ஏற்பட்டது. அவன் அதை அவிழ்த்துப் பார்த்தான். அதில் பழைய நகைகளும் பழைய தங்க நாணயங்களும் இருந்தன. விற்றுப் பணமாக்க வேண்டிய தேவைப்படாத ஏதோ ஒரு பணக்காரன் பாதுகாத்து வைத்தருந்த ஒரு சொத்து. தன்னிடம் ஒப்படைத்தவர் இதை எண்ணிச் சரி பார்க்கவில்லை. பழைய நாணயங்களை இணைத்துக் கோத்த ஒரு காசுமாலை. அதில் ஒரு நாணயத்தை எடுத்து விற்றால் என்ன?

என்றைக்காவது திருப்பிக் கொடுக்க வேண்டிய நிலைமை வரும்போது, ஒரு நாணயம் குறைந்து போனதைக் கண்டுபிடிக்க முடியாது. ஆனால் அது ஒரு மோசமான தொடக்கம் என்று கிருஷ்ணனுக்குத் தெரியும். பயம் விட்டுப்போனால் ஒன்றன்பின் ஒன்றாக எடுக்கத் தோன்றும். கட்சித் தலைமை இதை அறிந்தால் நிலைமை என்னாவது? சாதாரணமாக, கட்சியில் சேர்ந்து விட்டுக் கருத்து வேற்றுமை ஏற்பட்டுப் பிரிந்து போனாலே கொல்லப்பட்டதாகப் பெயர் ஏற்பட்டுவிடும். நாக்கு லேசாகப் பிறழ்ந்தால் போதும், வர்க்க சத்ரு ஆகிவிடுவான். பின்பு அழித்து ஒழிக்கப்பட வேண்டிய நபர்களின் பட்டியலில் அவனும் இருப்பான். அப்படி இருக்க, கட்சிச் சொத்தையே அபகரிப்பவனின் நிலைமை என்னவாக இருக்கும்? கிருஷ்ணன் சில நாட்களாக இத்தகைய எண்ணங்களால் குழம்பிப் போயிருந்தான.

கடைசியில் அவன் அதைச் செய்தான். ஒரு தங்க நாணயத்தை விற்றுவீட்டுக்கு வேண்டிய அரிசியும் பலசரக்கும் வாங்கினான். தங்கைக்குத் துணிமணிகள் வாங்கினான். நாட்கள் கழிந்தன. அங்கே இப்போது சாப்பாட்டுக்குத் தட்டுப்பாடு இல்லை. இனி சுபத்ராவைக் கல்யாணம் செய்துகொடுத்து அனுப்ப வேண்டும். அதற்கான பணமும் தன்னிடம் இருப்பதாகக கிருஷ்ணன் அப்பா விடம் சொன்னான். எங்கிருந்து? வாசுதேவருக்கு அது தெரிந்தாக வேண்டும். ஏதோ ஒரு பணக்காரனைக் கொன்று திருடிய பணம் என்று கிருஷ்ணன் வெளிப்படையாகச் சொல்லாவிட்டாலும் வாசுதேவருக்குப் புரிந்தது. அந்த அட்டூழியம் நடத்தியதற்குக் காரணமான பின்புலம் என்னவானாலும் அது நியாயப்படுத்தக் கூடியதல்ல. வாசுதேவர் ஒரு பழைய காலத்து பிராமணர். பூமியில் பிறந்தவர்களுக்கெல்லாம் பூமியில் செய்யும் காரியங்களுக்கு உரிய பலன் கிடைத்தே தீரும் என்பதில் அவருக்குக் கருத்து வேறுபாடே கிடையாது. இந்தச் சொத்தை அனுபவிப்பது பாவம். அதைத் திருப்பிக் கொடுத்துவிடு—வாசுதேவர் மகனுக்கு புத்திமதி கூறினார்.

அப்பா சொன்னது போலச் செய்யக் கிருஷ்ணனுக்கு முடிய வில்லை. காரணம், கட்சி தேவைப்படாத நிலையில் அதைத் திருப்பிக் கொடுப்பது என்பது ஒழுங்குமுறையை மீறுவதாகும். திருப்பிக் கேட்கும்வரை பாதுகாத்து வைக்கும் மனதிடமும் இல்லை. கையில் பணம் இருக்கும்போது குடும்பம் பட்டினி கிடப்பதை எப்படிப் பார்த்துக் கொண்டிருக்க முடியும்? நாணயங் களை ஒவ்வொன்றாக விற்று அவன் குடும்பத்திற்கு உதவினான். வாசுதேவருக்கு அந்தச் சாப்பாடு செரிக்கவில்லை. தன்னுடைய

உடம்பில் ரத்தம் அசுத்தமாகிவிட்டது. தான் தற்கொலை செய்து கொள்ளத் தயாராகிக் கொண்டிருப்பதாக மகனைக் கூப்பிட்டு அவர் ஒருநாள் சொன்னார். தன்னுடைய ஈமச் சடங்குகளை எப்படிச் செய்யவேண்டும் என்பதையும் உபதேசித்தார். மகனின் கைவசமுள்ள அந்தப் பணத்திலிருந்து ஒரு சல்லிக்காசுகூட இந்தக் காரியத்திற்குச் செலவு செய்யக்கூடாது. சாப்பாடும் தண்ணீரும் இல்லாமல் அவர் சில நாட்கள் கிடந்தார். கடைசியில் அந்தப் பிராணன் பிரிந்தது. சித்தியினால் சாதித்துக் கொண்ட தற்கொலை!

எல்லாச் சடங்குகளையும் அப்பா சொன்னதுபோலவே ஊரார் கொடுத்த பணத்தினால்தான் நடத்தினான். பாலத்தோள் வீட்டு நிலங்களைக் குத்தகைக்கு எடுத்தவர்களெல்லாம் கொடுத்து உதவினார்கள். அவ்வாறு குத்தகைதாரர்களுக்கும் பாலத்தோள் வீட்டுக்கும் இடையேயான பந்தம் அத்துடன் முடிவடைந்தது.

வாசுதேவர் இறந்து சில நாட்கள் கழிந்த பின் சுபத்ராவின் கல்யாணம் நடந்தது. எல்லாவற்றையும் கிருஷ்ணன் அவசர அவசரமாக நடத்தி முடித்தான். அவன் கோயிலுக்கு அர்ச்சனை செய்யப் போவான். இனி ஆர்யா அந்தர்ஜனத்திற்கு ஒரே ஓர் ஆசைதான் இருந்தது—மகனின் கல்யாணமும் நடக்க வேண்டும். அவ்வாறிருக்க, ஒருநாள் காலையில் கோயில் திறக்கப்படவில்லை. கிருஷ்ணனைத் தேடி தேவஸ்தான ஆட்கள் வீட்டுக்கு வந்தார்கள். வீட்டில் எல்லாக் கதவுகளும் திறந்து கிடந்தது. ஆர்யா அந்தர்ஜனம் வாய் திறக்க முடியாதபடி தளர்ந்து கிடந்தாள். வீட்டின் பின்பக்க மரக்கிளையில் தூக்கிட்டு இறந்துகிடக்கும் கிருஷ்ணனை அவர்கள் பார்த்தார்கள். தன் சொந்த விருப்பத்தின்படியே வாழ்க்கையை முடித்துக் கொண்டதாக அவன் எழுதி வைத்திருந்த ஒரு கடிதம் பிரேதப் பரிசோதனையின்போது கிடைத்தது.

கடுக்காத்ர குஞ்ஞுக்குட்டன் இப்போது வீட்டைவிட்டு வெளியே வருவதில்லை. எப்போதும் கட்டிலில் ஒரே படுக்கைதான். யாருடனும் பேசுவதில்லை. சாப்பிடுவதற்கு அம்மா கூப்பிட்டால் போய் உட்கார்வான். பரிமாறியதைச் சாப்பிடுவான். இப்படி எத்தனை நாட்களைக் கழிப்பது? நக்சலைட் அமைப்பிலிருந்து பிரிந்துவர எண்ணமுண்டு. அந்த அமைப்பிலிருந்து வெளியேறுவது என்பது நடக்கக் கூடிய காரியமா? வெளியே செல்பவனும் வெளியேற அனுமதிப்பவனும் வர்க்க சத்ருக்கள். வர்க்க சத்துருவை இருக்க விடுவார்களா? குஞ்ஞுக்குட்டனுக்குத் தெரியவில்லை.

பின்னர் வந்த மந்திரிசபையில் விஸ்வநாதனும் மந்திரி யானான். பழைய நண்பர்கள் பலர் சத்தியப் பிரமாணச் சடங்கின்

போது அவனைப் பாராட்டி மகிழ வந்திருந்தார்கள். ஒருவன் மட்டும் வரவில்லை—மணிகண்டன். அவனைப் பார்க்க விஸ்வ நாதன் விரும்பினான். தன்னைவிடப் பெரிய நிலையில் இருக்க வேண்டியவன் அவன். இப்போதைய நிலையிலிருந்து அவனைக் காப்பாற்ற வேண்டுமென்று விஸ்வநாதனுக்கு ஆசை உண்டு. ஆனால் மணிகண்டன் இப்போது எங்கே இருக்கிறான் என்று அவன் தங்கியிருந்த சத்திரத்துக் கோயாவுக்குக் கூடத் தெரியாது. இரண்டாவது கம்யூனிஸ்ட் மந்திரிசபை அதிகாரத்திற்கு வந்த போது, அவனுக்குப் பிழைப்புக்கான ஒரு வழியைக் கோயா எடுத்துச் சொன்னான். மந்திரிமார்களெல்லாம் மணிகண்டனுக்குத் தெரிந்தவர்கள் அல்லவா. அவ்வளவு சொன்னதுதான் காரணம். மணிகண்டன் அன்றே அங்கிருந்து வெளியேறிவிட்டான். பிறகு அங்கே போகவே இல்லை.

மணிகண்டன் ஒவ்வொரு நகரமாகச் சுற்றி அலைந்து திரிந்தான். இடையே கிராமங்களுக்கும் அவ்வப்போது வருவதும் போவதும் உண்டு. வளர்ந்த தாடியும் மீசையும் நாலாபுறமும் வளர்ந்து கிடக்கும் தலைமுடியும் கொண்ட அந்த உருவத்தை எவரும் அடையாளம் கண்டுகொள்ளவில்லை. போகும் இடங்களி லெல்லாம் தன்னைப் போன்ற சிலரை மணிகண்டன் பார்க்க நேர்ந்தது. ஒருசமயம் ஒரு சத்திரத்தில் இரண்டு நபர்களைப் பார்த்தான்—ஓர் ஆணும் பெண்ணும். அழுக்கடைந்த தோற்றம். இரங்கத்தக்க நிலை. அந்தச் சின்ன வயதுக்காரர்களை எங்கேயோ பார்த்ததுபோலத் தோன்றியது. மதுவும் ரோசாக் குட்டியும் அல்லவா அது? மணிகண்டன் நடந்தான். புராணங்களில் கூறப்பட்டுள்ள ஈரேழு பதினான்கு உலகங்களிலும் அவனுடைய மனது சஞ்சரித்துக் கொண்டிருந்தது. எதற்கும்வழி புலப்படவில்லை. நடந்து நடந்து போய்க் கொண்டிருந்தால் சில சமயங்களில் அந்த வழி இடுக்காலான ஒரு தெருமுனைக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கும். அந்த ஊசிமுனையிலிருந்தும் ஒரே ஓட்டம். எந்த உலகத்திற்குப் போவது? எந்த நிச்சயமும் இல்லை. மணிகண்டன் அந்த நெடுஞ் சாலையின் ஓர் அங்கமாகிவிட்டான்.

***

பழைய கோடாந்த்ர மனையிடத்தில் ஒரு தொழிற்சாலைக்கான கட்டிட வேலை நடந்து கொண்டிருந்தது. சுற்றும் முற்றும்

எல்லாமே ஒரு பட்டணமாகிவிட்டது. சுரேந்திரனின் மற்றுமொரு கனவு நனவாகிக் கொண்டிருக்கிறது. ஊருக்காக வேண்டி அவன் என்னவெல்லாம் செய்திருக்கிறான்? அந்த ஊர் நிச்சயமாக சுரேந் திரனுக்குக் கடமைப்பட்டிருக்கிறது. ஆனால் இப்போது அவன் பழைய சுரேந்திரன் அல்ல. பெரிய வீடு கட்டிக்கொண்டான். அவனுடைய குடும்பம் இன்று மிகுந்த செல்வாக்குடன் விளங்கு கிறது. தொழிற்சாலையில் அவனுக்கும் நல்லதொரு பங்குண்டு. போகவரக் கார் இருக்கிறது. முன்பு போல ஊராரின் தேவை களுக்கு உதவ சுரேந்திரனுக்கு நேரம் கிடைக்கவில்லை. அதனால் தான் கடந்த பஞ்சாயத்துத் தேர்தலில் வெற்றி பெறுவதற்கு மிகவும் சிரமப்பட நேர்ந்தது. தேர்தலுக்கும் பணச்செலவு ஏற்பட்டது; சில உறுப்பினர்களை விலைக்கு வாங்கும்படி ஆயிற்று. எங்கிருந்து அவனுக்கு இவ்வளவு பணம் வந்து சேர்ந்தது? ஊரை வளமாக்க வேண்டும் என்ற எண்ணத்தை முதலீடாக வைத்து, அதைத் தொழிலாகச் செய்வது என்பதிலிருந்து வருமானம் ஈட்டத் தொடங்கினான்? என்று முதல் லஞ்சம் வாங்கத் தொடங்கினான்? பணம் உள்ளவர்களுக்கு எந்தக் காரியத்தைச் சாதிக்க வேண்டி யிருந்தாலும் சுரேந்திரனை அணுகினால் போதும் என்றநிலை உண்டாயிற்று. குத்தகைதாரர்களை நிலங்களினின்று வெளியேற்றும் பிரச்சினைகளிலும்கூட நிலச்சுவான்தார்களுக்கு உதவி புரிய அவன் தயங்கவில்லை. பழைய சுரேந்திரன் இறந்துவிட்டான் என்ப தாகச் சிலர் சொன்னார்கள். இது புதிய சுரேந்திரன். இந்த சுரேந்திரன் தனக்குள்ளே தினமும் மாறிக் கொண்டிருக்கிறான்.

இன்று சுரேந்திரனுக்கு அந்த ஊரில் ஒரு பெரிய விரோதி இருக்கிறான்—சலீல். அவனுடைய மகனே தான். சுரேந்திரனுக்குப் பாப்பாவிடம் பிறந்தமகன். பத்துப் பதினெட்டு ஆண்டுகளுக்கு முந்தையது. பாப்பா கர்ப்பிணியானாள். அவள் தனது கணவனை ஒதுக்கிவைத்துவிட்டு வாழ்ந்து கொண்டிருந்த காலம் அது. அவள் ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அந்த குழந்தையின் தகப்பன் யாரென்று அவள் யாரிடமும் சொல்லவில்லை. ஆனால் அது சுரேந்திரனுடைய குழந்தை என்று எல்லோருக்கும் தெரிந்து தான் இருந்தது.

அந்த சலீலை சுரேந்திரன் இப்போது எதிர்கொள்ள நேர்ந் திருக்கிறது. தொழிற்சாலைக் கட்டிடம் கட்டும் தொழிலாளர்களின் போராட்டம் ஒன்று தொடங்கியது. தொழிற்சங்கச் செயலர் சலீல். அவனுடைய அணுகுமுறை சற்று வித்தியாசமானதாக இருந்தது. தொழிலாளர்கள் ஒரே அணியாக இருந்தார்கள். ஒப்பந்தக்காரர்

களுடன் பல தடவை ஆலோசனைகள் நடந்தன. எந்த ஒரு தூண்டிலுக்கும் அவன் அகப்படவில்லை. தொழிற்சாலை வேலை தொடர்ந்து முடங்கியது. கடைசியில் சுரேந்திரன் சலீலுடன் பேசத் தீர்மானித்தான்.

தன்னைத் தோற்கடிக்க வேண்டுமென்ற ஒரு நோக்கம் பாப்பாவுக்கு ஏற்பட்டிருப்பதாக சுரேந்திரனுக்குத் தோன்றியது. அவளுக்காகவும் சலீலுக்காகவும் என்ன வேண்டுமானாலும் செய்ய அவன் தயாராக இருந்தான். கணவன் இல்லாமல் கர்ப் பிணியாகும் எந்தப் பெண்ணும், கர்ப்பத்திற்குக் காரணமானவனே முன்வந்து கல்யாணம் செய்துகொள்வதாகச் சொல்லும்போது வேண்டாம் என்று சொல்வாளா? குழந்தையை ஏற்றுக் கொள்வ தாகவும், வாழ்வதற்கு வகை செய்து கொடுப்பதாகவும், வேறு என்னவெல்லாமோ அவன் சொன்னான். எல்லாவற்றுக்கும் பாப்பாவின் ஒரே பதில்? வேண்டாம். இடது கை உயர்த்தி உள்ளங்கை விரித்து அவள் சொன்ன அந்த வார்த்தை இப்போது சுரேந்திரனின் காதுகளில் கேட்கிறது. பாப்பா சுரேந்திரனுக்கு ஒரு விரோதியை வார்த்தெடுத்தாள். அவன் வெறும் கம்யூனிஸ்ட் அல்ல; தான் நக்சலைட் என்பதாக அவன் தன்னை ஒப்புக் கொண்டான். வர்க்க சத்ருவுடன் இணக்கம் இல்லையென்று அவன் உறுதியாகச் சொன்னான்.

சுரேந்திரன் களத்தில் இறங்கிவிட்டான். போலீசின் உதவி யுடன் போராட்டத்தை முறியடித்தான். சலீல் சில நாட்கள் சிறையில் இருக்க நேர்ந்தது. தொழிற்சாலை வேலை முன்னேறிக் கொண்டிருந்தது. உயர்ந்த படிப்பும் தகுதியும் உள்ளவர்கள் வேலைக்குத் தேவை என்று பத்திரிகையில் விளம்பரம் வந்தது. நக்சலைட்டாக இருந்த கடுக்காத்ர குஞ்ஞுக்குட்டனும் அங்கே வேலைக்கு மனுச் செய்தான். பத்து மரக்கால் நிலத்தை விற்று லஞ்சம் கொடுத்தாவது அங்கே வேலை தேடிக்கொள்ள வேண்டு மென்று அப்பாவும் அம்மாவும் சொன்னார்கள்.

நக்சலைட் ஊர்வலம் நாட்டின் நாலாபகுதிகளிலும் பீதியை உருவாக்கியது. கொலை செய்யப்படுபவர்கள் பணக்காரர்களும் நிலச்சுவான்தார்களும். நள்ளிரவில் அவனைச் சேர்ந்தவர்கள் கோடாரியும் கத்தியுமாக வந்துவிட்டால் என்ன செய்வது என்ற பயம் ஊரில் எல்லோருக்கும். வடக்கே எங்கேயோ ஒரு நிலச் சுவான்தாரை வீட்டுக்குள் புகுந்து வெட்டிக் கொன்றார்கள் என்பதைக் கேட்டபோது துன்பேக்களவன் பயந்து போனான். பிலிப்பைத்தான் இந்த பயம் அதிகம் பாதித்தது. கிழக்குத்

தொடர்ச்சிமலையில் எஸ்டேட்டில் சில தொழிலாளிப் பெண் களின் கற்பை அவன் சூறையாடியதுண்டு. எதையும் செய்யத் தயங்காதவன். தொழிலாளியைத் தண்டிப்பது முதலாளியின் உரிமை என்பதாக அவன் நினைத்திருந்தான். முருகன் என்ற ஒரு தொழிலாளியை ஒரே அடியில் கொன்றவன். இப்போது அவன் தற்காப்புக்காகத் துப்பாக்கி சகிதமான ஆயுதங்களுடன் இரவையும் பகலையும் கழிக்கவேண்டியிருக்கிறது. வீட்டைச் சுற்றிலும் காவல் காரர்களையும் நியமித்திருக்கிறான். நாளுக்கு நாள் பயம் அவனை விழுங்கியது. கடைசியில் அவன் தற்கொலை செய்துகொண்டான்.

***

ஊரில் வயல்களெல்லாம் விவசாயம் இல்லாமல் கிடக்கின்றன. நெல் பயிரிட எவருக்கும் எண்ணமில்லை. வட்டத்ர க்ரிகரியும் ஆற்றுக்கடவில் அந்தோணியும் பருத்திக்காட்டு கொச்சௌசேப்பும் படுகிழமாகி விட்டார்கள். இப்போதும் கால ஆற்றில் வெள்ளம் அடித்துச் செல்வதைக் காணும்போது அவர்களுடைய மனம் துடிக்கும். கிழக்குத் தொடர்ச்சிமலைகளைக் கலக்கிக்கொண்டு ஓடிவரும் வெள்ளம் காட்டு இரைச்சலைக் கொண்டிருக்கும். ஆனால் குட்டநாட்டு வயல்களில் அந்த மலைவெள்ளம் இப்போது பல ஆண்டுகளாகப் பாய்வதில்லை. காரணம், வயல்வெளிகளுக் கான குளவரப்புகள் இப்போது கருங்கல் திட்டுகளாகிவிட்டன. வெள்ளப்பெருக்கை அனுசரித்து ஆண்டில் இரண்டு தடவை விவசாயம் செய்ய அரசாங்கம் செய்த விவசாயச் சீர்திருத்தம் இது. ஆற்று வெள்ளத்துடன் வரும் கசடும் வண்டலும் இப்போது கடலுக்குச் சென்றுவிடுகின்றன. அது வயலில் பாய்ந்து ஓடினால் போதும், பத்து மேனி கூடுதலாக விளையும். மலைவெள்ளத்தில் குளத்தை விவசாயிகள் மறந்தே போனார்கள். இயற்கை இயல்பாகத் தருவது எதுவும் மனிதனுக்கு வேண்டாம். ரசாயன உரமும் விஷமும் கொடுத்து மண் களர் நிலமாகிவிட்டது.

கார்த்திகைக் காற்று வழக்கத்திற்கு முன்னதாகவே அடித்தது. மண்ணில் விதையிடும் பருவத்தைத் தெரிவித்துக் கொண்டிருந்த நட்சத்திரங்களின் இடங்கள் தவறின. மூன்று கிழவர்களும் கூடிப் பரஸ்பரம் முகத்தோடு முகம் பார்த்துவிட்டு எதுவும் பேசாமல் இருந்தார்கள். காலம் மாறிவிட்டது; இயற்கையும் மாறுகிறது. எந்த வயலிலும் வேலை நடக்கவில்லை. எவரும் விவசாயம் செய்ய

முனைப்பாக முன்வரவில்லை. காரணம் இருக்கிறது. கடந்த மூன்று விளைச்சல்கள் நல்ல பலனைத் தரவில்லை. எவருமே விவசாயம் செய்யாமல் இருந்தால் நாட்டிலுள்ள மனிதர்களெல்லாம் அரிசியிட்டுக் கொதிக்க வைத்த கஞ்சியை எப்படிக் குடிப்பார்கள்? அதுதான் க்ரிகரியின் சந்தேகம். குத்தகை நிலம் கிடைத்தவனுக்கும் விவசாயம் செய்தது போதும் போதுமென்றாகிவிட்டது.

பெரிய வயல்வெளிகளெல்லாம் பலருக்குச் சொந்தமாயின. மங்கலச்சேரிக் கரிசல் அங்கங்கே சமம் செய்யப்பட்டு மனையிடங் களாயின. அங்கெல்லாம் வீடுகளும் வந்துவிட்டன. மீதியிருந்த நிலத்தில் விவசாயம் செய்யவில்லை; களர்நிலமாகிவிட்டது. நாற்றங் கால் நானூறு இன்று நாற்பதுபேருக்குச் சொந்தம். எல்லோருக்கும் பட்டா போட்டுக் கொடுத்திருக்கிறது. ஆனால் எவரும் விவசாயம் செய்யவில்லை. ஊரெல்லைக்குள்ளே உள்ள வயல்களில் க்ரிகரிக்கு நூறு மரக்கால் நிலம் உண்டு. அங்கே வேலைக்குச் சென்ற தொழி லாளர்களைப் பூவச்சால்பைலி தடுத்தான். நில உச்ச வரம்பு நிச்சயிக்கப்பட்டபோது தாற்காலிகமாக பினாமியாக பைலியின் பெயரில் எழுதி வைத்த நிலம் அது. பைலி இப்போது அதைவிட்டுக் கொடுக்கத் தயாரில்லை. இவ்வாறு நிலம் இழந்தவர்கள் வேறு பலரும் உண்டு.

என்றிலிருந்து மனிதன் நிலத்தை நேசிக்கத் தொடங்கினான்? ஆயிரமாயிரம் நூற்றாண்டுகளாகக் கடந்துவந்த அந்த நேசம் பேராசையாகி, தாகமாகி எத்தனை எத்தனை யுத்தங்களுக்கும் காரணமாகிவிட்டது! மனிதனின் சரித்திரம் என்பது நிலத்தின் மீதுள்ள பேராசையின் சரித்திரம், தாகத்தின் சரித்திரம்.

எல்லாம் தருகின்றவள் அன்னைபூமி. அந்த அன்னை கருணைமயமானவள். பூமியை ஆக்கிரமித்துப் பிடிப்பதானாலும் கைமாறுவதானாலும் மனித குலத்தின் பிரச்சினைகள் தீரவில்லை. பூமியை அதன் போக்கில் விடுக. பூமியில் விளைவது எல்லோருக் காகவும் தான் என்று ஏற்றுக்கொள்க.

க்லாசிப்பேர் கொச்சுபிள்ளையை இன்று யாரும் நினைத்துப் பார்க்கவில்லை. சங்கிலி அளவுகாரன் நாகம் பிள்ளையையும் யாருக்கும் தெரியாது. கோடாந்த்ர மூத்தாசானும் பருத்திக்காட்டு ஔதையும் ஆக எல்லோரும் உயிர்த்தெழுந்து வந்து பழைய நிலம் இருக்கும் குட்டநாட்டு வயல்வரப்புகளில் அலைகிறார்கள். அவர் களுடைய காலத்திலும் அவர்களுக்கு முன்னிருந்த தலைமுறை களின் ஆட்கள் உயிர்த்தெழுந்துவந்து வரப்புகளில் அலைந்து கொண்டுதான் இருந்திருக்க வேண்டும். அவ்வாறு பின்னோக்கிப்

பின்னோக்கிப் போனால் மனிதன் நிலத்தை நேசித்த காலத்தைக் கண்டுபிடித்துவிடலாம்.

வட்டத்ர க்ரிகரியின் பிள்ளைகளும் பேரன்பேத்திகளும் இப்போது அயல்நாடுகளில் இருக்கிறார்கள். அந்த மூன்று கிழவர்களின் பிள்ளைகளுக்கும் இங்கிருக்கும் விளைநிலங்கள் வேண்டாம். மண் களர் நிலமாகிவிட்டது. மண் மீதான மனிதனின் நேசம் போய்விட்டது. ஆனால் ஒரு கேள்வி எழுகிறது, "இந்த மனிதர்களெல்லாம் சாப்பிட வேண்டாமா?"

பருத்திக்காட்டு சொச்சௌததான் இந்தக் கேள்வியைக் கேட்டான்.

Lasertypeset at Capital Creations, New Delhi and
printed at Beauty Print, Delhi